உ

கடவுள்துணை.

# புனந்திரன் தூது.



இவை

வித்வசிரோமணியாகிய

புகழேந்திப்புலவர்

அருளிச்செய்தது.



பில்லரம்பாக்கம்

**R. முருகேச முதலியார்**

அவர்களது

ஸ்ரீ சுப்பிரமணிய விலாச அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

1929

இதன் விலை அணா-10.

நெ-220, தங்கசாலைத்தெரு, சென்னை.

உ

கடவுள் துணை

# புனந்திரன் தூது.

## விநாயகர் தோத்திரம்.

அத்திமுகத்தோனே அரனார்திருமகனே
சத்தியின்புத்திரனே சரிந்தவயிற்றோனே
முத்தியளிக்கின்ற முருகற்குமூத்தோனே
வித்தையெனக்கருளும் வேலவற்கு மூத்தோனே
திருவலமாம்மேற்படி தெற்கிசைந்தவெட்பாலை
வெட்பாலைக்குள்ளிருக்கும் சப்பாணிப்பிள்ளையரே
பொற்பாதம்நான்மறவேன் பொன்னுக்கணபதியே
பொன்னுக்கணபதியே பிரபலமாய்முன்னடவாய்
ஏடுதவறாமல் எழுத்தாணிசாயாமல்
கோடுதவறாமல் கொழுந்தோலைசாயாமல்
நாவுதவறாமல் நல்லோசைதாருமையா
குரலில்குடியிருந்து குரலோசைதாருமையா
தப்பாமலெந்தனுக்கு சரஸ்வதியேமுன்னடவாய்
பஞ்சவர்கள்தன்கதையை பட்சமுடன்தான்படிக்க
செஞ்சொல்சோதையுட தேவியர்கள்பாலகனே
கஞ்சன்வலதழித்த கார்மேகாமுன்னடவாய்
எல்லையளந்தபிரான் ஏழுமரம்எய்தவரே
புனந்திரனார்தூதுரைக்க புண்ணியனேவாக்கருளும்
இந்திரனார்தூதுரைக்க யெந்தனுக்குவாக்கருளும்
தப்பிதங்கள்வாராமல் தாழ்வுகள்நேராமல்
குற்றங்கள்வாராமல் குறைவுகள்நேராமல்
ஒப்பிமனம்பொறுத்து உத்தமனேவாருமையா
கார்க்கடலுனக்கு கர்த்தாவேமெய்ப்பொருளே

## முருகர் தோத்திரம்.

சீரானமாமுகனே சிற்றடியைவேல்வரே
மாயோன்மருமகனே வள்ளிமணவாளா
கந்தனேயெந்தனிட கவலையெல்லாந்தீர்த்தவனே
புனந்திரனார்தன்தூதைப் புத்தியுடன்யான்பாட
புத்திதனைநீகொடுத்தால் புகழ்ச்சியாய்நான்படிப்பேன்

## சரஸ்வதி தோத்திரம்.

தாயேசரஸ்வதியே சதுர்முகனார்தேவியரே
வாணிசரஸ்வதியே மறையவனார்தேவியரே
என்னாவிற்குடியிருந்து நீநடத்துமம்மாயிக்கதையை
நெஞ்சிற்குடியிருந்து நீநடத்தவேண்டுமம்மா
அஞ்சியுனைப்பணிந்தேன் ஆனந்தவாழ்மாரி
வஞ்சியுமையவளே வல்லவியேகாருமம்மா

செஞ்சொல்தவறாமல் சிராகவிக்கதையை
பஞ்சையானெந்தனுக்குப் பாடவருள்புரியும்
புனந்திரனார்தூதுரைக்க புகழ்ச்சிதரவேண்டுமம்மா
மகிழ்ச்சியாகயிக்கதையை மண்டலத்தில்பாடுகிறேன்

## கதையின் வரலாறு.

பட்டணமாம்பட்டணமாம் இந்திராபுரிபட்டணமாம்
பட்டணத்தையாளுகிற பஞ்சவர்களைவருண்டு
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அரசாளும்நாளையிலே
ஏதுகுறையில்லாமல் இனியரசையாண்டிருந்தார்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே

## திரியோதிரன் சேனைத்தலைவர் ஆலோசனைக்கூட்டம்.

நூலார்கடுந்திரளார் நூற்றொருவர்தான்தேடி
அம்பலத்துவாசலிலே யனைவோரும்வந்திருந்தார்
காஞ்சிவளநாடாளும் கர்னரும்வந்திருந்தார்
சாமதுரோகி சகுனியுமங்கிருந்தான்
பட்டர்புலவர் பதினெட்டுமந்திரியும்
அல்லவருமங்கிருந்து வாலோசனைகள்செய்து
ஐவர்பஞ்சபாண்டவரை அங்கேவரவழைத்து
தர்மர்க்கெதிராக சகுனியவன்வந்திருந்து
தார்வேந்தன்முன்பாக சண்டாளன்வந்திருந்து
மாயத்தால்சூதாடி மனமுறுகமண்பறிந்து
மாதைதுகிலுரிந்து மன்னவரைக்காடோட்டி
ஐவரையுங்காடோட்டி ஆண்டிருந்தான்ராச்சியத்தை
பதின்மூன்றுதன்வருஷம் பாரவனம்வோட்டி
பஞ்சவரைக்காடோட்டி பாருலகமாண்டிருந்தான்
இப்படியாக யிவனிருக்கும்வேளையிலே

## ஐவர் விராடபுரத்தில் மறைவாயிருந்தது.

ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையும்
மன்னர்பஞ்சபாண்டவரும் மயிலனையாள்துரோபதையும்
பன்னிரண்டுதன்வருஷம் பாரவனம்தீர்ந்து
பதின்மூன்றும்தன்வருஷம் விராடபுரத்தில்வந்து
மாறுவேஷங்கொண்டு மருமம்தெரியாமல்
உருவங்கள்தெரியாமல் உத்தமர்கள்வாசம்பண்ணார்
அந்தவருஷம் அதுவுந்தொலைந்தபின்பு
பதினாலாந்தன்வருஷம் பிறந்ததுபஞ்சவர்க்கு

## பெருமானுடன் பஞ்சவர்கள் தூதுரைக்க ஆலோசனை செய்கிறது.

ஐவரைவரும் அறிவுசந்தாரும்
வேந்தர்பெருமானும் வெளிமண்டபத்தில்வீற்றிருந்தார்
தக்கப்புகழுடைய தருமரெழுந்திருந்து
ஏழுலகமாளுகிற எம்பெருமானடிபணிது

ஆளப்பிறந்த அபிமனுப்பட்டானே
அந்தாளர்தீர்த்த அரவானும்பட்டானே
தாமமுடியான் கடோற்கசனும்பட்டானே
ஆரையனுப்புவோம் ஆளடிமைதூதுக்கு
எவரையனுப்புவோம் எழில்பெரியதூதுக்கு
என்றுமவனுரைத்து ஏங்கிமனந்தளர்ந்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னர்மனஞ்சலித்து மர்மமாய்வீற்றிருந்தார்
ஏழுலகமாளுகிற எம்பெருமாளேதுசொல்வாள்
போட்டசிரைமீட்க நாளாச்சுமன்னவரே
தூதுக்குபோவார் சொல்லுந்தருமரேநீர்

துரோபதை பிள்ளையை பெருமாள் வேண்டாமென்று தடுக்கிறது
ஆரையனுப்புவோம் அடல்பெரியதூதுக்கு
என்றுமவருரைக்க ஏதுசொல்வார்தருமலிங்கம்
பச்சைமடல்விரியும் பாளைவிரிபூமணக்கும்
பாஞ்சாலமகாராஜன் சுயமணப்பூம்பந்தலிலே
வில்லோசைக்கொண்டு இளங்கொடியைமாலையிட்டோம்
வில்வளைத்துமாலையிட்ட மெல்லிதுரோபதையாள்
மாலைக்குழலாள்தன் மைந்தரைப்போகவிடுவோம்
அந்தவுரைகேட்டு ஆதிமூலமேதுசொல்வார்
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
இளம்பஞ்சபாண்டவர்கள் இணைபிரியாமன்னவர்கள்
ஐவரையும்போகவிட்டால் அனர்த்தம்வந்துநேர்ந்துவிடும்
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
தக்கப்புகழுடைய தருமராதுகேட்டு

பெருமாள் நல்லரவானையும் வேண்டாமென்று தடுக்கிறது.
வீடெல்லாமாணிக்கம் வாசலெல்லாமாணிக்கம்
கட்டியுடைத்தால் கலந்தேறுமாணிக்கம்
மாணிக்ககூண்டுகட்டி வாசலிலேதானம்பண்ண
மாலைக்குழலாள்தன் மைந்தரைப்போகவிடுவோம்
ஏழுலகமாளுகிற எம்பெருமாள்தான்கேட்டு
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
பாசத்திளவறையன் பள்ளிபழகையிலே
பாரதமோசீரதமோ என்றுன்படைத்தலைவன்
பெருமாளோபொரியாவோ என்றுசொன்னான்புண்ணியனும்
சொல்லிபெருமாளும் தூதுரைக்கமாட்டான்காண்
எரிநாகங்கொண்டவனோ டெதிராளமாட்டானே
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
தக்கபுகழுடைய தருமராதுகேட்டு
இனியாரைப்போகவிடுவேன் எழில்பெரியதூதுக்கு

### பெருமாள் மின்னொளியாள் பிள்ளையை வேண்டாமென்று தடுக்கிறது.

தேசத்தால்மடையடைத்தால் செல்லேறப்போகுதென்று
பணத்தால்மடையடைத்தால் பாசிபிடிக்குமென்று
துட்டால்மடையடைத்தால் தூசேறப்போகுதென்று
காசால்மடையடைத்தால் களும்புபிடிக்குமென்று
சோத்தால்மடையடக்கும் சோழன்றிருமடந்தை
மேகம்பயின்றெடுத்த மின்னொளியாள்நாயகியாள்
மாலைக்குழலாள்தன் மைந்தரைப்போகவித்து
ஏழுலகமாளுகிற எம்பெருமாள்தான்கேட்டு
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
கொற்றப்பூர்மன்னன் குறக்கோலங்கொண்டலவோ
கொற்றபோரம்பலத்தே கூசாமல்போயிருந்து
கொச்சியங்கள்சொல்லி யுரைப்பார்களைவரையும்
எளிதங்கள்சொல்லி யுரைப்பார்களைவரையும்
ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
திக்கபுகழுடைய தருமராதுகேட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
இனியாரையனுப்புவோம் ஆளடிமைதூதுக்கு
எவரையனுப்புவோம் எழில்பெரியதூதுக்கு
ஏழுகோடிசேனைக ளெல்லாமடிந்தார்கள்
ஒருகோடிபாலகர்கள் ஒக்கமடிந்தார்கள்
யாரையனுப்புவோம் ஆளடிமைதூதுக்கு
எவரையனுப்புவோம் எழில்பெரியதூதுக்கு
என்றுமவருரைத்து ஏங்கிமுகந்தளர்ந்து
ஏழுலகமாளுகிற எம்பெருமாளேதுசொல்வார்

### கிருஷ்ணமூர்த்தி புனந்திரனைத் தூதுக்கனுப்ப சம்மதித்தது

மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
மதுரை யன்பத்தறுகாதம் ஆளுகிறபாண்டியர்கள்
ஆறுயிரவர் அணிதிரளாம்பாண்டியர்கள்
மைந்தருமில்லையென்று மன்னர்மனஞ்சலித்து
மாளுகிறோமென்று மலைமேற்றவமிருந்தார்
மாளாதேயென்று மலரிலவதரித்தாள்
மன்னன்விஜையன் மடலூர்ந்தமாதேவி
காளைவிஜையன் கடலூர்ந்தமாதேவி
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீள்முகனை
வெட்டிதலைதுணித்து வீரபட்டங்கட்டினவள்
பாவையிளங்கொடியாள் பயின்றெடுத்தரத்தினங்கள்
மாலைக்குழலாள்தன் மைந்தரைப்போகவிடுவோம்
உத்தமியாள்பெற்றெடுத்த புத்திரனைப்போகவிடுவோம்

ஏழுலகமாளுகிற எம்பெருமாள்தானுரைக்க
தக்கப்புகழுடைய தருமரவர்கேட்டு

தருமர் வேண்டாமென்று தடுக்கிறது.

ஒவ்வாதுஒவ்வாது உத்தமியாள்பெற்றபிள்ளை
ஏழுவேலிமஞ்சள் எடுத்தந்தபாண்டியர்கள்
ஏழேரிதண்ணீரிலே எல்லாமுரைத்தவர்கள்
ஸ்ரீகாரங்கொண்டார்கள் சீருடையபுத்திரனை
மஞ்சனீர்கொண்டார்கள் மைந்தர்புனந்திரரை
மைந்தனுக்குமெந்தனுக்கும் பேசவழக்கில்லை
என்றுமவருரைத்து யிருக்கின்றவேளை யிலே

புலந்திரன் வரலாறு அருச்சுனன் தருமருக்குக் கூறுதல்.

காண்டாபுரமெரித்த காளையதுகேட்டு
வில்லாளிபார்த்தன் விசையனெழுந்திருந்து
அண்ணனெதிரிலே அடிவணங்கிதெண்டனிட்டு
கூத்தனெனுஞ்சோலையிலே போயிருந்தேனாளுருநாள்
வாழ்மதுரைபட்டணத்தில் போயிருந்தேன்நான்சிலநாள்
தொட்டுக்கொடுத்ததில்லை சுந்திரப்பெண்பாண்டியற்கு
எடுத்துக்கொடுத்ததில்லை எந்தனிடபுத்திரனை
மைந்தருக்குமெந்தனுக்கும் வழக்குண்டுஎம்பெருமான்
வில்லாளிபார்த்தன் விசையனுரைக்கலுமே

தருமர் சம்மதித்தது.

தக்கப்புகழுடைய தருமரவர்கேட்டு
சந்தோஷப்பட்டு சரீரங்கள்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
தேகம்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உண்ணுதேபூரித்து உடம்பெல்லாம்பூட்டிவிட்டு
சந்தோஷங்கொண்டாரே தருமர்பெருமாளும்
ஈரல்குளிர்ந்தார் இருவருமோடிவந்து
ஏழுலகமாளுகிற எம்பெருமாளைப்பணிந்து
தக்கப்புகழுடைய தருமரடிபணிந்து
கைகட்டிவாய்புதைத்து வந்துமுன்னேநின்றார்கள்
எங்களையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றார்

தருமர் அல்லியரசாணிக்கும் புனந்திரனுக்கும் ஓலையெழுதுகிறது.

தக்கப்புகழுடைய தர்மரதுகேட்டு
பங்கயஞ்சீர்கண்ணனுக்கு ஓலையெழுதுமென்றார்
தம்பிப்புலந்திரற்கு சுரளோலையெழுதுமென்றார்
ஈரல்பூந்தாரார் இருவருந்தான்கேட்டு
அருளருளுமென்னண்ண அப்படிக்கேயாகுதென்று
தாளிப்பனையோலை வாரிதலைசேர்த்து
வெள்ளைப்பனையோலை விளிப்பிரண்டுந்தான்சீவி
பக்கமுஞ்சீர்வாரி பவளஞ்சீர்ஒப்பமிட்டு

செம்பொன்னெழுத்தாணி தேர்விசையர்கைப்பிடித்து
என்னவென்றுசொல்லி எழுதவென்றுரோலையிலே
தக்கப்புகழுடைய தருமரெடுத்துரைப்பார்
இன்னமின்னங்காடுறைய மாட்டாளிளங்கொடியும்
எங்குந்திரிந்தார்கள் எளப்பானகல்லிறடி
பருக்கல்லூறுத்த பனிவந்தலைமோத
ஒப்பருக்கேனும் உள்ளங்கால்தானுறுத்த
கவிந்தமரத்தடியில் கண்பள்ளிகொண்டிருந்தோம்
இன்னமின்னங்காடுறைய மாட்டாளிளங்கொடியாள்
தொங்கலெனும்பூமுடியாள் தூதுரைக்கவேணுமிப்போ
சந்திரப்பூமுடியாள் இங்கேவரவேணுமென்று
ஓலையெழுதி சதுராய்க்குறியுமிட்டு
இராசாக்களோலைக்கு இரத்தினக்குறியுமிட்டு
மந்திரிமாரோலைக்கு மஞ்சட்குறியுமிட்டு
ஓலைச்சுருளெடுத்து செந்திரிக்கந்தான்போட்டு
சாற்றிலேயும்மேவகமுள்ள தூதுவரைத்தானழைத்து
ஓலைச்சுருளெடுத்து உத்தமர்கள்கைகொடுத்து
மதுரைவளநாட்டுக்கு மன்னவர்களேநீர்போய்
பட்டோலைகட்டுவச்சி மன்னுதிரும்புமென்று
சுருளோலைகட்டுவச்சி தூதர்திரும்புமென்றார்
தூதுவருந்தான்கேட்டு தொழுதிரங்கிதெண்டனிட்டு
அருளருளுமென்னையா அப்படிக்கேயாகுமென்று
சொல்லப்பெற்றோமென்று சுறுக்காயெழுந்திருந்து
உறப்பெற்றோமென்றுசொல்லி கும்பிட்டெழுந்திருந்து

தூதன் மதுரைக்கு ஓலைகொண்டுபோகுதல்

பட்டோலைகட்டெடுத்து மன்னர்மடியில்வைத்து
சுருளோலைகட்டெடுத்து தூதர்மடியில்வைத்து
அத்திபுரமும் நடந்தார்அழகாக
அருச்சேத்திரபூமி குருபூமிதேசம்விட்டார்
எல்லையதுதாண்டி இளந்தோப்புந்தான்தாண்டி
வைகைக்கரைதாண்டி வனமாய்வனந்தாண்டி
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஓங்கிவளர்ந்தொரு மூங்கில்வனந்தாண்டி
வேங்கையடர்ந்தவனம் வெண்களாப்பூத்தவனம்
மதுரைதிசைநோக்கி வாறார்கள்தூதுவர்கள்
வாரவழிதனிலே என்னென்னவதிசயங்கள்
கொன்றைகள்பொன்காய்க்க வேங்கைகள்குட்டியீண
முத்துக்காய்காய்க்க பவளக்கொடிகனக்க
ஏர்முத்துஞ்சால்களும் நின்றுநிழல்காக்க
நீரோடும்நீர்முதலை நின்றுவிளையாட
சேறுங்கழனுமங்கே சென்றுவிளையாட

வாழைபழுக்க கரும்புகொலைசாய
ஆலைப்பழுக்க அணிகள்விளையாட
கிள்ளைப்பழுக்க கிளிகள்விளையாட
மாலைவுதிர மலர்கள்சொரிந்துவிழ
சந்தணஆறு தளும்பிபெருகிவர
குங்குமஆறு குளம்பிபெருகிவர
சீதேவியம்மன் உரைவாள்பலதுறையும்
திருவிணையாய்அம்மன் திரிவாள்பலதுறையும்
சோலைமலர்கண்டார் சொக்கரிடபாதங்கண்டார்
சொக்கரிடபாதம் தொழுதிறங்கிதெண்டனிட்டான்
ஆனைமலைகண்டான் அம்மனிடபாதங்கண்டான்
அம்மனிடபாத மடிவணங்கிதெண்டனிட்டான்
அடிவணங்கிதெண்டனிட்டு அப்பால்நடக்கலுற்றான்

பொற்றாமரை சிறப்பு.

அல்லிப்பிறந்தாள் அவள்பிறந்தபொய்கைகண்டான்
பூவில்பிறந்தாள் பிறந்தொருபொய்கைகண்டாள்
மலரிற்பிறந்தநாளும் அவளுதித்தபொய்கைகண்டாள்
பொய்கைப்பதுமைகளை போனவனும்பார்த்திருந்தான்
படிக்குப்படிகளொரு பன்னிருகாதவழி
படியகலங்கண்டதொரு பன்னூற்றைங்காதவழி
ஏறும்படிகளொரு எண்ணூறுகாதவழி
இறங்கும்படிகளொரு எண்ணூற்றைங்காதவழி
நாலுபடிகளின்மேல் ஞானவிளக்கெரிய
அஞ்சுபடிகளின்மேல் பஞ்சவர்ணம்போட்டிருக்கும்
எட்டுபடிகளின்மேல் இலிங்கம்புதைத்திருக்கும்
பத்துபடிகளின்மேல் பத்தினிமார்வோதிநிற்பார்
தட்டோடே தன்னகையுந் தாமரைப்பூங்காவுகளும்
கட்டுகழுத்திக் கடலாடும்பொய்கையது
புத்திரசந்தானங் கொடுக்குமந்தபொய்கையது
கைம்பெண்டுஸ்நானஞ்செய்தால் கைலாசஞ்சேர்க்கும்பொய்கை
அறிவிலாள்ஸ்நானம்பண்ணால் அரிவிளங்கும்பொய்கையது
மலடிகள்ஸ்நானம்பண்ணால் மைந்தனளிக்கும்பொய்கை
கன்னிகழியாப்பெண்கள் கடுகெனவேஸ்நானம்பண்ணால்
கன்னிகழிந்திடுவார் காளைகளையீன்றிடுவார்
மைந்தர்களையீன்றிடுவார் மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவார்
பிள்ளைகளையீன்றிடுவார் போவவளர்ந்திடுவார்
இப்படியாய்பதவிதரும் இபலானபொய்கைதனை
கண்டானேதூதுவனுங் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
பார்த்தானேதூதுவனும் பார்வைரெண்டுங்கொள்ளாமல்
அப்பொய்கைதான்தாண்டி அப்பாலேபோகலுற்றார்
அரிதேசிபரிதேசி யாவர்வந்துநின்றாலும்

இல்லையென்றுசொல்வார்கள் மெல்லியிடைபுண்ணியத்தால்
முத்தாரவளம் கொண்டுமவர்க்களிப்பார்
வச்சிரமாணிக்கம் வாரியவர்க்களிப்பார்
பிழைத்தேனென்றுபோவார்கள் பொற்கொடியாள்புண்ணியத்தால்
அப்போது தூதுவனும் அந்தத்தெருதாண்டி
மற்றுமொருவீதியிலே வாரார்கள் தூதுவர்கள்
ஆனைகட்டிப்போர்படுப்பார் அல்லியிராச்சியத்தில்
குதிரைகட்டிப்போர்படுப்பார் உத்தமியாள்சீமையிலே
கட்டுக்கலங்கானும் கதிருழக்குநெற்கானும்
அரிதாளறுத்துவர மறுதாள்பயிராகும்
அரிதாளின்கீழிருந்து ஐங்கலத்தேன் கூடுகட்டும்
கரும்புபினீரும் கண்திறந்துமடைபாயும்
வாழைவடக்கினும் வான்கமுகுதெற்கினும்
சோலைகிழக்கினும் துய்யபலாமேற்கினும்
இப்பெரியராச்சியத்தை கண்டானே தூதுவனும்
கண்டானே தூதுவனும் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்
பார்த்தானே தூதுவனும் பார்வைரெண்டுங்கொள்ளாமல்
அந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
மற்றுமொருவீதியிலே வாரானே தூதுவனும்
வெலைப்பழிக்கின்ற விலைமாதர்வீதிகளும்
சேலைவிலைமதிக்கும் சேணியர்கள்வீதிகளும்
யானைவிலைமதிக்கும் அரசர்கள்வீதிகளும்
சேனைத்தலைவர்கள் சூழ்ந்திருக்கும்வீதிகளும்
குதிரைவிலைமதிக்கும் குச்சிலியர்வீதிகளும்
ஒட்டைவிலைமதிக்கும் உத்தமர்கள்வீதிகளும்
கொட்டியெபொன்னளக்கும் கோமுட்டிவீதிகளும்
தட்டிகொட்டிப்பணிசெய்யும் தட்டார்கள்வீதிகளும்
செட்டால்சாக்குவிற்கும் செட்டியார்வீதிகளும்
வில்பிடித்துலாவுகிற வேந்தர்கள்வீதிகளும்
மல்போருதான்செய்யும் மன்னர்கள்வீதிகளும்
வேதமுறைதவறு வேதியர்கள்வீதிகளும்
நீதிமுறைதவறு நெறிமன்னர்வீதிகளும்
அந்தத்தெருதாண்டி மற்றொருவீதியிலே
மற்றொருவீதியிலே வாரானே தூதுவனும்
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
அல்லியுடவாசலுக்கு வாரானே தூதுவனும்
அரசிலையுந்தோரணமும் காக்கும்தலைவாசலிலே
அல்லிகொடிகட்டி யார்க்குந்தலைவாசல்
ரதப்பணிகள்செய்யும் பொற்கொடியாள்வாசலிலே
மேகப்பணிகள்செய்யும் மின்னனையாள்வாசலிலே
கண்டானே தூதுவனும் கண்கள்ரெண்டுங்கொள்ளாமல்

சித்ரைதகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
அடித்தான்தலைமேலே கடகங்கழண்டுவிழ
மோதிரக்கையாலே முகத்திலறைந்துகொண்டாள்
பவளக்கடகக்கையாலே மார்மேலறைந்துகொண்டாள்
வெல்பொருதுங்கண்ணன் விழுந்துபுரண்டழுதான்
தாமமுடியான் தரைமேல்புரண்டழுதான்
மாலைமுடியாளும் மண்மேல்புரண்டழுதான்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே
அங்கிருக்குந்தூதுவர்கள் அவசரமாயோடி
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தானிருக்கும்
மண்டபமேதேடியல்லோ மன்னவர்கள்வாரார்கள்
அரண்மனைவழிகட்டும் அந்தப்புரந்தாண்டி

அல்லியைக் காண்கிறது.

நடைபயிலுங்கண்ணன் உட்கட்டில்போய்ப்புகுந்து
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்முன்னேவந்து
அல்லியெதிரேவந்து அடிவணங்கித்தெண்டனிட்டு
தெண்டனிட்டுத்தூதுவர்கள் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்னு முடிமேலேகைதொழுதான்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்பார்த்து
நீயாருடையதூதன் அறியவுரையுமென்றாள்
யார்பணியுமல்ல அடியேன்திருப்பணிதான்
ஒருவர்பணியுமல்ல உம்முடையதற்பணிதான்
பேர்பெற்றுடைய பெருமானேவுன்பணிதான்
நீயிங்கேவந்ததென்ன கூறியவுரையுமென்றாள்
உத்தமர்களவர் உத்தாரந்தானனுப்ப
அனுப்பியவோலைதன்னை அலைதாரன்தான்பார்த்து
ஓலைச்சுருள்விரித்து வாசித்தான்உத்தமனும்
தம்பியிறந்தானென்று தனித்துப்புலம்புகிறான்
வெல்பொருதுங்கண்ணாள் விழித்துப்புலம்புகிறாள்
அந்தவிசேஷ மதுசொல்லவந்தாரென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு

அல்லி புனந்திரனைச்காண கொலுவுக்கு வருகிறது.

சுருட்டைமுடிசுழட்டி காரிழைமார்கைகொடுத்து
விரிமுடிமுடிக் மெல்லியர்கள்கைகொடுத்து
மகுடமுடிசுழட்டி மங்கையர்க்கள்கைகொடுத்து
அக்கினிசாரு அழகாகத்தான்கடந்து
காடைபுல்லெடுத்தி பட்டணத்தைசாத்தி
அந்தவாழ்மாரி அலரத்தலைவனை
இலாமல் பாண்டிப்பெருமானை

காத்தாடிபோலே கடுகவழிநடந்து
எட்டடியும்ஓரடியாய் இட்டுவிநடந்து
ஆண்மனைவழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
பேடைமயில்கண்ணாள் உட்கட்டில்போய்ப்புகுந்து
கோசலநாடாள் கொலுவுக்குமுன்னேவந்தாள்
பிள்ளைபுலந்திரற்கு பெண்பெருமாளேதுசொல்வாள்

அல்லி புலந்திரற்கு சொல்லுகிறது.

தருமர்வலுவிழந்தீர் தம்பிமார்தோளிழந்தீர்
வீமர்வலுவெழந்தீர் விசயனார்தோளிழந்தீர்
உப்பிட்டவாளை வழைபழுகிவிட்டாற்போல்
தப்பிவிட்டீர்நீயுமிப்போ தம்பிபுலந்திரனே
ஆறிவிடும்ஆறிவிடும் ஐயாவெயாறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் தேவனேதேறிவிடும்
ஆனந்தமார்பனை அன்னைதாமடியில்வைத்து
மாலைமுடியானை மடிமேலேகொண்டுசென்று
கொற்றவனார்கோபந் தணப்படுத்திக்கொண்டவளும்
மன்னவனார்கோபம் வசப்படுத்திக்கொண்டிருந்தா
இப்படியாக இருக்கின்றவேளையிலே
ஆருயிரவர் அணிதிரளாம்பாண்டியரும்
பொன்னுலகைநாடரும் அன்றுவேவடிவந்து
பொருஞ்சமன்னர் புலந்திரனைக்கண்பார்த்து
காடாண்டபஞ்சவர்கள் நாடாளவந்தார்கள்
சுந்தரபஞ்சவர்கள் சுகமாயிருக்கிறார்கள்
ஆறிவிடும்ஆறிவிடும் ஐயாவேஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் தேவனேதேறிவிடும்
இப்படிக்கேசொல்லி இருந்தார்கள்பாண்டியர்கள்
பிறைவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகமும்
ஓலைக்குதெளிடுத்து உத்தரியாள்கைப்பிடித்து
பவளசெனைமந்திரியை பட்டோலைவாசியென்றாள்
பவளசெனைதான்வாங்கி பட்டோலைதான்விரித்து
ஓலைக்குருள்விரித்து வாசித்தாருத்தமியும்
வாசிக்கவாசகத்தை கேட்டதம்மெல்லியரும்

அல்லியரசாணி புலந்திரனுக்குக் கோபித்து உரைக்கிறது.

பிறைவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
கத்திகுத்தியன்றி கண்கள்நெருப்பாக
கொற்றப்புருவம் நெருப்பாயனல்பறந்து
பக்கச்சலைதடிக்கப் பத்தினியாளேதுசொல்வாள்
போபோபுலந்திரனே போவிடென்றனக்கு
முன்னாளும்பூசல் முடியுமிருக்குதே
மூக முடிபாண்டியனும் பட்டிருக்கிறானே
இப்பவும்பூசல் எழுப்புகிறார்பஞ்சவர்கள்

கொல்லநிற்பார்பஞ்சவர்கள் கூட்டியிருப்பார்கள்
சிம்மாடுகட்டி சுமப்பார்கள்பஞ்சவர்கள்
கடலைக்கரைக்குந் தொடருவார்பஞ்சவர்கள்
ஆலோலமென்று அழுவார்கள்பஞ்சவர்கள்
இப்படியாக யிருக்குமந்தவேளையிலே
போபோபுனந்திரரே போகவிட்டேன் தூதுக்கென்றார்
போரஞ்சாமன்னா புனந்திரருந்தான்கேட்டு

புனந்திரன் மறுத்துச் சொல்லுகிறது.

ஐவரையற்கும் அழிவுசந்தாற்கும்
அவர்க்கேதெரியாதே வுனக்கேதெரியுமோ
போகவிடைதாருமென்றான் போரஞ்சாபுத்திரனும்
இறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
சோரவனநங்கை சுபத்திரையைப்போலேனான்
சடையாய்ச்சடைவிரித்து சன்னாசிவேடங்கொண்டு
லொக்கணஞ்சொல்லி யழுமாட்டேபுண்ணியனே
ஒப்பாரிசொல்லி யழுமாட்டேன்வுத்தமனே
போபோபுனந்திரரே போகவிட்டேன் தூதுக்கென்றான்
போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
என்னென்னசொன்னாலும் இனிகேளென்னாச்சி
போகவிடைதாருமென்றார் போர்விசயன்புத்திரனும்
இறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
நல்லதனத்திலே சொன்னாலுங்கேளானே
சொன்னாலுங்கேளானே சுந்தரப்பூமுடியான்
கடுத்தமொழியாக காளையற்குநாமுரைத்தால்
அப்போதுநிற்கானே ஆனந்தவாழ்மார்பன்
பொற்கொடியாளல்லியரும் புத்திரற்கேதுசொல்வாள்
ஆருடையபுத்திரனும் என்றாளே அல்லியரும்
என்றுசொன்னவார்த்தையை இந்திரனுந்தான்கேட்டு
இவ்வுலகந்தானறியும் எம்பெருமாள்தானறிவார்
மண்டலங்கள்தானறிய மன்னவர்கள்தானறிவார்
சோலைமலருடைய சொக்கருந்தாமறிவார்
ஆனைமலையுடைய அம்மனும்தானறிவாள்
கனிஞ்சிவலைத்த காளையுடபுத்திரன்யான்
கட்டாதவில்வலைத்து விசயனுடபுத்திரன்யான்
என்றுமவனுரைக்க ஏதுசொல்வானல்லியற்கு
பொழுதுமேதானுச்சு போகவிடைதாருமென்றான்
போகவிடைதாருமென்றான் போரஞ்சாபுத்திரனும்
விடைதாரும்ஆச்சியென்று வேந்தனுந்தெண்டனிட்டான்
இறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
அங்கிருக்குந்தாதிகளி லொருத்திதானெழுந்து
பொன்னுமன்னாடாறு மன்னுறவைக்கூப்பிடென்றாள்

தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
அங்காடிவீதிவிட்டு அரண்மனையினுட்புகுந்து
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்முன்னேவந்து
ஏதுவகையா என்னைவரவழைத்தீர்
வரவழைத்தகாரியங்கள் வாய்திறந்துசொல்லுமென்றார்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வார்
அண்ணாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
போரஞ்சாமன்னன் புணந்திரனார்வீரியனும்
மூவரையுங்காணுதற்கு ஆணழகன்போகவென்றான்
ஆலாலமுள்ளவனே ஆற்றிலேஆதரித்து
காலடிதன்சலத்தில் கைகழுவிநீர்குடித்து
காவலனார்வீரியனே கண்ணுண்டாய்பாருமென்றாள்
பொன்னுமலைமாடாளும் அண்ணாவுந்தான்கேட்டு
அருளருளுமென்னாச்சி அப்படியேயாகுதென்று
போரஞ்சாமன்னர் புணந்திரனார்முன்னேவந்து
இனிவாருந்தம்பியென்று யிருவருமெழுந்திருந்து
அக்கமுஞ்சக்கமும் அழைக்காதேஆணழகன்
தாமமுடியான் தனித்தாவடமசைய
சாத்திரபூறாலும் தனித்தாவடமசைய
மின்னுங்கைமார்பன் யணிகலமுங்கூட்டாதே
யானையுஞ்சேனையும் யணிகலமுங்கூட்டாதே
இருவருந்தானெழுந்து நடந்தார்துரிதமுடன்

புணந்திரன் தர்மரைக்காணுகிறது.

வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி.
சித்திரவீதி தெருவும்பலதாண்டி.
குருக்ஷேத்திரபூமி குருபூமிதேசம்வந்தான்
ஐவரிடகாவலிலே ஆணழகன்போய்புகுந்தான்
தாரார்புகழுடைய தருமருக்கெதிரேவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
தர்மராஜசிர்பாதம் தார்வேந்தன்சுத்திபண்ணி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
ஆணந்தவாழ்மார்பன் அடிவணங்கிநிற்கையிலே
தாரார்புகழுடைய தருமரவர்பார்த்து
வந்துபணிந்தவனுங் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
தூதுரைக்கவந்தீரோ சுந்தரப்பூமுடியே

திருமார்பிலிட்டதொரு திருப்பதக்கன்தான்வாங்கி
ஆனந்தமார்பனுக்கு அழகுபடசாத்தினார்
ஆறுதலைக்கப்போமிடத்தில் சொல்கிறேன்கேளுமையா
ஒன்றுக்குப்பத்து ஒருநூறுக்காயிரமாம்
பத்துக்குநூறு பழுதில்லாமலுரைத்த
நாவுதவறாமல் நல்வார்த்தைக்குண்ணாமல்
சொல்லுதவறாமல் சொற்சிலவுகாயாமல்
சொல்லுக்குசொல்லுரைத்து வாருமையாசுந்தரமே
போய்வாருமென்று பொருத்தவிடைகொடுத்து
விடைபெற்றெழுந்திருந்தான் வேந்தர்பெருமானும்

புலந்திரன் வீமனைக்காணுகிறது.

வெற்றிமதயானை வீமர்க்கருகில்வந்து
ஏழானைபலமுடைய இயல்வீமர்முன்னேவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பன்னீரால்காலலம்பி பாதமதுதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து மூவிருகால்தெண்டனிட்டு
வெற்றிமதயானை வீமரவர்பார்த்து
வந்துபணிந்தவனை கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
ஏண்ணைப்பெறுவாய் எதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெருவாய்
நிற்பாய்நிலைதறிப்பாய் நீராசையாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலே கலங்காதராசால்வாய்
சிற்பதித்ததூண்போலே வெகுநாள்ராசால்வாய்
போருக்குபோவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகலரியிலே வீரபட்டம்கட்டிடுவாய்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாளந்திருப்பீரென்று மனமாரவாழ்த்தினார்
ஆறுதரைக்கப்போமிடத்தை சொல்லுகிறோம்கேளுமையா
சகுனிதலையைத் தவிடுபொடியாக்கி
அம்பலங்கள்தோறும் இடித்துதவிடாக்கி
ஆஸ்தானந்தோறும் அடங்கலும்தீயிடித்து
ஒன்றுக்குப்பத்து ஒருநூற்றுக்காயிரமாம்
சொல்லுவழுவாமல் சொற்சிலவுசாயாமல்
நாவுதவறாமல் நல்வார்த்தைக்குன்றாமல்
நாதுரைத்துமீளுமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்று பொருத்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்

புனந்திரன் அர்ச்சுனனைக்காணுதல்.

காண்டாபுரமெரித்த காளையற்கெதிரில்வந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பன்னீருப்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து மூடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
ஐங்கால்வலம்வந்து அடிவணங்கிதெண்டனிட்டு
காண்டாபுரமெரித்த காளையவர்பார்த்து
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
வாழ்வூர்வலந்திடுவீர் வார்த்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்கிலேதறிப்பீர் நீராசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வார்
விற்பதித்ததூண்போலே வெகுகாலமரசாள்வார்
கண்ணைப்பெறுவாய் எதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
போருக்குப்போய்விடுவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகலநிபீலே வீரபட்டமாண்டிடுவாய்
கன்னிகளைக்கொண்டிடுவாய் காளைகளையீன்றிடுவாய்
புத்திரரைப்பெற்றிடுவாய் பேருண்டாய்வாழ்ந்திடுவாய்
பிள்ளைகளைப்பெறுவாய் புரபலமாய்வாழ்ந்திடுவாய்
மைந்தர்களைப்பெற்றிடுவாய் மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவாய்
வாழ்வூர்காசென்று மனங்குளிரவாழ்த்தினர்
உச்சிமுகந்து உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கங்களெல்லாம் பரிவாகத்தான்தடவி
தூதுரைத்துமீளுமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்றுசொல்லிப் பொருத்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தார் வேந்தர்பெருமானும்
விரல்புகுந்தார் இருவருகில்வந்து

புனந்திரன் நகுலசகாதேவரைக் காண்கிறது.

பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து மூவிருகால்தெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
தூதுரைக்கவந்தீரோ சுந்தரப்பூமுடியே
வாழ்வூர்வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீருத்திருப்பீர்

நிற்பாம்நிலைதரிம்பால் நீரசையாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வாய்
விற்பதித்ததூண்போல் வெகுநாளரசாள்வாய்
என்னைப்பெறுவாய் எதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைபெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
போருக்குப்போய்விடுவாய் பொழுதே டேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டங்கொண்டிடுவாய்
எதிர்த்தவரைச்சங்கரித்து எல்லையரசாள்வாய்
மாதர்களைமாலையிட்டு மைந்தர்களைப்பெற்றிடுவாய்
பெற்றிடுவாய்வளர்த்திடுவாய் பிள்ளைபதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்வுவாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காண்என்று மனங்குளிரவாழ்த்தினார்
வாழ்ந்திருப்பீரென்று மனமாரவாழ்த்தினார்
நாதுரைக்கப்போமிளத்தை செல்லுகிறேன்கேளுமையா
சால்பூந்தாரானை எழுதினான்சித்திரத்தில்
அபிமன்னராசாவை அங்கேயெழுதிவைத்து
செந்தாரானைபிள்ளையென்று சற்றுநினையாமல்
இறந்தவன்பிள்ளையென்று எண்ணியவன்பாராமல்
அம்பலவாசலிலே அங்கேபடமெழுதி
அம்பலத்தானறிய அங்கேயவன்சட்டிவைத்தான்
தம்பியைக்கண்டுநீ தற்சோர்ந்துநில்லாதே
உடப்பிறப்பைக்கண்டுநீ உக்வுயிர்சேராதே
காப்பிளையாள்பாடிசென்று கூடிவிளையாடாதே
மைந்தரைக்கண்டுநீ மகிழ்ந்துவிளையாடாதே
பிள்ளையைக்கண்டுநீ பித்தம்பிடியாதே
நீசொல்லுதவறாமல் சொற்சிலவுசாயாமல்
நாவுதவறாமல் நல்வார்த்தைகுன்றாமல்
மாதுரைக்கமீறுமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்றுசொல்லி பொருந்திவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்
ஐவரிடஉத்தாரம் ஆணைமுத்தன்பெற்றுக்கொண்டு
தென்னமுடியானுஞ் சின்னச்சிமாளிசென்றான்

புலந்திரன் சுபத்திரையைக்காணுகிறது.

சோரவளநங்கை சுபத்திரையாள்முன்னேவந்து
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பாதமதுகழுவி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்று நான்சொரிந்து
முக்காலவலம்வந்து மூவிருகால்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
மாதாவின்பாதம் மலர்தூவிதெண்டனிட்ள

வந்துபணிந்துவரைக் கண்டுசுபத்திரையும்
நீர்கொத்தகண்கள்ரெண்டும் நீக்கிநிகர்விழியும்
கண்ணீர்கலங்கிடவே கட்டழகியேதுசொல்வாள்
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திருப்பிருக்திருப்பீர்
நிற்பாய்நிலைதரிப்பாம் நீராசையாண்டிடுவாய்
கற்பதித்தூண்போலக் கலங்காதரசாள்வாய்
விற்பதித்ததூண்போல் விளங்கஅரசாள்வாய்
என்னைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
பின்னைப்பெறுவாம் பெறுமாள்பதம்பெறுவாய்
போருக்குப்போம்விடுவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவாய்
எதிரியைவென்றிடுவால் எல்லையரசாண்டிடுவாய்
மாற்றானைவென்றிடுவாய் மண்டலபீடையாண்டுவாய்
பெற்றிடுவாய்பெற்றிடுவாய் பிள்ளைபதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காண்யென்று மனங்குளிர்வாழ்த்தினார்
வாழ்த்தியிடைகொடுத்து மடிமேலேகொண்டிருந்தி
ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
உன்னோடேகூட விளையாடுகிறானென்றிருந்தேன்
பொன்னுலகநாட்டுக்கு போனசெய்திநானறியேன்
இவ்வுலகைவிட்டு எழுந்துவிட்டான்
பஞ்சவர்கள்என்மேல் பகைமுடித்தார்கண்டீரே
பாரளந்தார்என்மேல் பகைமுடித்தார்கண்டீரே
என்றுசொல்லிமங்கையரும் இருகண்ணால்முத்துதிர்த்தகள்
முத்துப்போலகண்ணீரை முகமெல்லாஞ்சோரவிட்டாள்
பவளம்போல்கண்ணீரை பககமெல்லாஞ்சோரவிட்டாள்
போரஞ்சாமன்னர்-புனக்திரருந்தான்பார்த்து
வந்துவிழுங்கண்ணீரை வெண்துயிலால்தான்துடைத்து
மாதாவருந்வேது மன்னன்மனங் கொள்ளாமல்
இருக்கிறார்அபிமரும் செத்தார்புனந்திரரும்
உத்தசமேசெய்வதற்கு உன்புத்திரனிங்குவந்தேன்
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சிநீஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் தேன்மொழியேதேறிடும்
அப்போதுசுபத்திரையாள் ஆரணங்கேதுசொல்வாள்
ஐயோபுனந்திரரே அறிவுள்ளகண்மணியே
பொன்னுமணியே புனந்திரராசாவே
கட்டிமணியே கலிங்கத்துராசாவே
காலாளுமன்றியிலே கனகதண்டியென்றோ
திருமேனிக்காவலனே சேவகனுமில்லாமல்
வாழ்விசையன்சீமானே வந்தவனைச்சொல்லுமென்றான்
மைந்தர்புனந்திரனே வந்தவகையேது

வளநாட்டிபுத்திரரே வந்தவகைசொல்லுமென்றாள்
அல்லியிடசீர்மகனே அறியவுரையுமென்றாள்
போரஞ்சாமன்னர் புனந்திரரேதுசொல்வார்
பெற்றபெருமாளும் பிரியமுடையவரும்
ஐவரைவரும் ஆழிவங்கந்தாரும்
வேந்தர்பெருமாளும் விலாடபுரம்வந்தமர்ந்து
என்னைவரவழைத்தார் என்னைப்பெற்றராசாக்கள்
பேரப்பாரப்பார் பெரியப்பாதங்களுக்கு
விடையருளவிட்டார்கள் வீரப்பெரும்புலிகள்
தோரணயானையால் தூதுரைக்கப்போறேனென்றான்
தூந்நீலம்கண்ணாளே தூதுரைக்கப்போறேனென்றான்
சோரவளநங்கை சுபத்திரையாள் தான்கேட்டு
கதும்பிக்கதும்பிக் கண்கள் எறிபறந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
பத்தியநாகம் பவளம்போற்கண்சிவந்து
முன்னேயும்பூசல் முடிந்துமிருக்குதே
இப்பவும்பூசை யெழும்புவார்பஞ்சவர்கள்
கொல்லநினைப்பார்பஞ்சவர்கள் கூடியிருப்பார்பஞ்சவர்கள்
சிம்மாநிகட்டி கம்ப்பார்கள்பஞ்சவர்கள்
சடக்கரைக்குந் தொடருவார்பஞ்சவர்கள்
ஆலோலமென்று அழுவார்கள்பஞ்சமர்கள்
ஐவருடன்சேதி யறியாளோயல்லியரும்
வையகத்தையாண்டமவள் மதிகுலைந்துபோனாளே
இப்போதும்பிள்ளையைத்தான் பக்கல்வாவிட்டாளே
மாத்தரணபடைநடுவில் மைந்தரைப்போகவிட்டாள்
போபோபுனந்திரரே போகவிடேன்தூதுக்கென்றாள்
அப்போபுனந்திரனும் ஆச்சியற்கேதுசொல்வார்
ஐவரைவரும் ஆழிவுசந்தாரும்
போகவிடைதந்தார்கள் போர்மன்னராசாக்கள்
நீயும்விடைதாருமென்றான் நித்திலம்பூமுடியான்
சோரவளநங்கை சுபத்திரையுந்தானெழுந்து

சுபத்திரை புனந்திரனுக்குப் பிரார்த்தனைசெய்கிறது.

மண்ணளந்தான்பாதமது நோக்கிமனதிலெண்ணி
அறுபதுமுழச்சல்லா ஆரணங்குதானெடுத்து
மஞ்சள்துணிநனைத்து மங்கையவள்தானெடுத்து
ஆயிரம்பொன்னெடுத்து அடவுடனே தான்முடித்து
சோலைமலருடைய சொரிகரைதானினைத்து
ஆனைமலையுடைய அம்மனையுந்தானித்து
தொங்கலிலும்பூமுடியான் தூதுரைத்துமீண்டாக்கால்
தண்டிவரும்பொன்னையெல்லாம் சரிகைக்குடத்துடனே
கொண்டுவந்துகொட்டுவேன் கோபுரவாசலண்டை

மாத்தான்படைநடுவில் மைந்தாபுனந்திரனை
கண்ணுடையாய்பாருமென்று கர்த்தனைக்கைதொழுதாள்
மைந்தனைக்காருமென்று மங்கையரும்கைதொழுது
போய்வாருமென்றுசொல்லிப் போகவிடைகொடுத்தான்

புனந்திரன் துரோபதையைக் காணுகிறது

தோராவடிவழகி துரோபதையைத்தேடிவாரான்
தோராவடிவழகி துரோபதையாள்தாதியவள்
ஓட்டம்பெருநடையும் ஓடிவந்துஉட்புகுந்து
தோராவடிவழகி துரோபதையாள்முன்னேவந்தாள்
ஆட்டமும்கூத்தொளியும் ஆரணங்குபார்த்திருந்தாள்
நட்டுமுட்டுசாலை நாட்டியங்கள்பார்த்திருந்தாள்
தாமக்குழலாலும் தாதிவந்துதெண்டனிட்டாள்
தோராவடிவழகி துரோபதைநாயகியே
ஆட்டமும்கூத்தொளிவும் ஆரணங்குபார்த்திருந்தாள்
நட்டுமுட்டுசாலை நாட்டியங்கள்பார்த்திருந்தாள்
தாமக்குழலாலும் தாதிவந்துதெண்டனிட்டாள்
தோராவடிவழகி துரோபதைநாயகியே
இன்னாட்டார்நல்லவர்காண் இத்திசையார்நல்லவர்காண்
தென்னாடுஞ்சூழத் திசைவணங்கிவந்தவன்காண்
வையைவளநாட்டில் பெற்றெடுத்தபுத்திரன்காண்
வாழ்பாண்டிநாட்டாள் பயின்றெடுத்தகண்மணிகா
போரஞ்சமன்னர் புனந்திரவீரியரும்
உன்பிள்ளைவருகுதென்று பின்னொருக்கால்தெண்டனிட்டாள்
மைந்தர்வருகுதென்று மறுத்தொருக்கால்தெண்டனிட்டாள்
தோராவடிவழகி துரோபதையாள்தான்கேட்டு
மைந்தர்வருகுதென்று பூவைமனமகிழ்ந்து
ஆட்டமும்கூத்துகளும் அமருமென்றுகையமர்த்தி
நட்டுமுட்டுசாலையை நாளையென்றுகையமர்த்தி
அடிசிலம்புபாடகமும் ஆர்க்கக்குதித்திறங்கி
பூஞ்சிலம்புபாடகமும் பொங்கக்குதித்திறங்கி
கூடவேசோதிமின்ன கொம்பேரிடையாளும்
மற்றுமொருவாதீனத்தில் மாதரவள்வீற்றிருந்தாள்
போரஞ்சாமன்னர் புலந்திரவீரியரும்
ஓடமலர்க்கண்ணனும் உட்கட்டிற்போய்புகுந்து
தோராவடிவழகி துரோபதையாள்தானிருக்கும்
ஆதீனத்தின்முன்னேவந்தான் அல்லித்திருமகனும்
பூவும்புதுமலரும் பொன்னருகு அட்சதையும்
பொந்நீருஞ்சொம்பிலே பந்நீருங்கொண்டுவந்து
பாதமதுகழுவி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்குதெண்டனிட்டான்

நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
தோராவடிவழகி துரோபதையுந்தான்பார்த்து
அப்பாமகனே அறிவுள்ளகண்மணியே
இப்பாரையாளவே எங்கள்கண்மணியே
அல்லித்திருமகனே ஆனந்தவாழ்மார்பா
வருகவருகமெயன் வல்லமேலவருகவென்றாள்
திருவருகபூவருக தேனேவருகவென்றாள்
குடிகாரகொற்றடுமை கொண்டுவருகவென்றாள்
அங்கத்துக்குள்ளே அமர்ந்திருக்கும்பார்குடத்தை
சொக்கர்திருவாசலுக்குத் தூண்டாமணிவிளக்கே
கப்பலுஞ்சோங்கும் கரைதுரையுமுள்ளவனே
முத்துப்படுந்துரையும் முழுதிலும்கொண்டவனே
பவளப்படுந்துரையும் பத்துலட்சமுள்ளவனே
வையவளநாட்டை வாழ்விக்கவந்தவனே
வாழ்மதுரைராஜ்யத்தை ஆளவந்தரத்தினமே
ஆருவிரப்பாண்டியற்கு அழகானபேரனே
ஆனந்தவாழ்மாரி அல்லிற்திருமகனே
மகுடதுரை அல்லியற்கு மனதானபுத்திரரே
கண்ணுனகண்மணியே கட்டழகன்சீர்மகனே
பொன்னுனபொற்குடமே புனந்திராசாவே
பொன்னிரண்டுஞ்சித்தடியை பூவிரண்டும்கண்ணிலொத்தி
தங்கத்தாற்சிற்றடியைத் தார்குழலாள்கண்ணிலொத்தி
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்து
இந்திரனைத்தூக்கி எடுத்துமடியில்வைத்தான்
அப்போபுலந்திரனார் ஆனந்தவாழ்மார்பன்
மடியைவிட்டுக்கீழ்குதித்து மாதாவின்முன்னேவந்து
மாதாவின்சீர்பாதம் வணங்கினான்மன்னவனும்
காண்கிறேனுச்சியென்று கால்மேல்முடிசாய்த்தான்
தோராவடியழகி துரோபதையுந்தான்பார்த்து
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீருத்திருப்பீர்
நிற்பாய்நிலைதறிப்பாய் ரோசையாண்டிடுவாய்
கற்பதித்ததூண்போலே களங்காதரசால்வாய்
விற்பதித்ததூண்போலே விளங்காதரசாள்வாய்
என்னைப்பெறுவா யெதிர்த்தார்முடிபெறுவாய்
பின்னைப்பெறுவாய் பெருமாள்பதம்பெருவாய்
போருக்குப்போய்விடுவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டஞ்சூட்டிடுவாய்
எதிரிகளைச்சங்கரித்து யெல்லையரசாண்டிடுவாய்
மாற்றானைசங்கரித்து வையகத்தையாண்டிடுவாய்
கன்னிகளைமாலையிட்டுக் காளைதனையீன்றிடுவாய்

பெண்களைமாலையிட்டு பிள்ளைகளைப்பெற்றிடுவாய்
மங்கைகளைமாலையிட்டு மைந்தர்களைப்பெற்றிடுவாய்
பெற்றிடுவாய்பெற்றிடுவாய் பிள்ளைபதினாறும்
பதினாறும்பெற்றி பெருவாழ்வுவாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காண்என்று மனங்குளிரவாழ்த்தினார்கள்
மைந்தரைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்து
புத்திரரைக்கொஞ்சி யெடுத்துமடியில்வைத்து
காலாளுமன்றியிலே கனகதண்டியன்றியிலே
திருமேனிக்காவலனே சேவகனுமில்லாமல்
என்-வாழ்விஜயன்சீர்மகனே வந்தவகையேது
ஏதுவகையாக இங்கேவந்தீர்சொல்லுமென்றார்
அப்போபனந்துரும் ஆச்சியருக்கேதுசொல்வான்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னாச்சிநீர்கேளும் இன்னமொருவார்த்தை
பெற்றபெருமாளும் பிரியமுடையவரும்
ஐவரையரும் ஆருவுயர்ந்தாரும்
பேரப்பாரப்பார் பெரியயபருடையவரும்
விடையருளவிடார்கள் வீரப்பெரும்புலிகள்
தொரணயாய் தூதுசைக்கப்போறேனென்றான்
துந்நீலங்கண்ணனும தூதுரைக்கப்போறேனென்றான்
தோராவடிவழகி துரோபதையுந்தான்கேட்டு
மைந்தர்முகம்நோக்கி மாதாவுமேதுசொல்வாள்
மாபாவிவாசனுக்கு மன்னவரேபோரீரோ
அரும்பாவிவாசனுக்கு ஐயாநீர்போரீரோ
தாகந்தணியாதே தனஞ்செயனார்மாளிகையில்
வெற்றிலைவேண்டி விருப்பமதுகொண்டாலும்
வெற்றிலைகொள்ளாதே வேந்தர்கடைத்தெருவில்
சுண்ணாம்புகொள்ளாதே சூதுள்ளவாசலிலே
பெரும்பாவிவாசனுக்கு புத்திரரேயோரீரோ
தூதுரைக்கப்போமிடத்தை சொல்லுகிறேன்கேளுமையா
பாசத்திளவரையா பன்டைகூட்டந்தன்னுடனே
யானையின்மேல் நீயேறி அம்வீதிபோம்போது
கச்சாயம்வேண்டிக் களையாகிவந்தாலும்
கச்சாயந்திண்டாதே கண்ணிலான்மாளிகையில்
தண்ணீர்களையாகி தாகமெடுத்தாலும்
அடைக்காயும்நஞ்சிடுவார் ஆனந்தமார்பனுக்கு
அடைக்காய்தீண்டாதே ஆணழகன்அம்மலத்தில்
வாசனைகொண்டுவந்து வகையாடுயடுக்கவென்பார்
வாசனைகள்தீண்டாதே வலுவாயனம்பலத்தில்
பொய்யாதினமிடுவார் பொறகைவளபாண்டியரே
ஆதினஞ்சென்றேறாதே ஆனந்தவாழ்மார்பா

கட்டுங்கயிறும் கயிறுகளத்தனையும்
இத்தாருமென்று எடுத்தவள் கைகொடுத்து
கண்ணிலால்பெற்றெடுத்த கபடன் திரியோதிரன்
கொலுமுகவாசலிலே கோடிபலவுரைப்பார்
சிம்மாதனக்கொலுவில் சேனையெடுத்துரைப்பார்
உன்னையவன்கண்டாலும் ஒருகோடிஎடுத்துரைப்பான்
சொல்லுக்குச்சொல்லுரியும் சுந்திரப்பூமுடியே
ஆறுக்குத்தாறுரையுந் தாங்கலங்கண்ணனே
சொல்லுவழுவாமல் சொற்சிலம்புசாயாமல்
நாவுதவறாமல் நல்வார்த்தைக்குண்ணாமல்
தூதுரைத்துமீளுமையா சுந்திரப்பூமுடியே
சிந்தைகலையுற்றுத் திரும்புமையாசுந்திரரே
மனதில்பயம்நீங்கி மன்னரேபோய்வாரும்
என்னும்வருளுரைத்தாள் ஏயிப்பசுங்கிளியாள்
போரஞ்சாமன்னர் புனந்திரனார்தான்கேட்டு
அப்படிக்கேயாகுதென்று ஆச்சிசரணமென்றான்
போய்வாரேனாச்சியென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
தோராவடிவழகி துரோபதையுந்தானெழுந்து
அமுதுண்ணவாருமையா என்றுமவளெழுந்து
அமுதுண்ணுமண்டபத்தை யாரணங்குமுட்புகுந்து
செம்பொன்முக்கால்நிறுத்தி செம்பொன்தளிகையிட்டாள்
புலிமுக்கால்தானிருத்திப் பொன்னூள்தடுக்குமிட்டாள்
வாழையிலைபோட்டு மணிச்செம்பில்நீர்தெளித்து
அம்பைமலர்போல போஜனமுந்தான்சொரிந்தாள்
தாளிதமும்பச்சடியுந் தன்னில்வகைக்கறியும்
கூட்டுக்கறியும் கொழும்புவகைக்கறியும்
பொரித்தபொரிகறியும் பொன்போலசிறுபருப்பும்
ஆயிரத்தெட்டு அருங்கறியும்போஜனமும்
சத்திக்கறியைவைத்துப் புத்துருக்குநெய்வார்த்தாள்
வாருமையாசங்கமரே வந்தமுதுகொள்ளுமென்றாள்
அப்போபுனந்திரனும் ஆச்சியருக்கேதுசொல்வான்
தம்பியைநான்கொடுத்து தற்சோர்ந்துநிற்கையிலே
உடற்பிறப்பைநான்கொடுத்து உத்தவுயிர்சோர்வையிலே
நெய்யமுர்தமுண்டாலும் நிற்குமோபொந்தியிலே
பாலடிசிலுண்டாலும் நிற்குமோபொந்தியிலே
வேண்டாங்காணாச்சியென்று வண்ணமுடிசாய்த்தான்
ஆழதடங்கையால் அழுத்தியன்றேறிருந்தான்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
தோராவடிவழகி துரோபதையுமேதுசொல்வாள்
தூதுரைத்துமீளுமையா சுந்தரப்பூமுடியே
போய்வாருமென்றுசொல்லிப் பொருத்தவிடைகொடுத்தார்

விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்
அரண்மனைஎழுகட்டும் அந்தப்புரந்தாண்டி

புனந்திரன் அல்லியரசாணியைக் காண்கிறது.

அவ்வீதியாக அழகாகநடந்தான்
பொன்னுமலைநாடாளும் அண்ணுவுந்தான்கூட
இருவருமாக இசைந்தவழிநடந்தார்
குருக்ஷேத்திரபூமி குருபூமிதேசம்விட்டு
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
வாழ்மதுரைராஜ்யத்தில் வந்தாரிருவருமாய்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளண்டைவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொன்னீரும்செம்பிலே பந்நீருங்கொண்டுவந்து
பந்நீரால்காலலம்பி பட்டால்துவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
மாதாவின்பாதம் மன்றாவிதெண்டனிட்டான்
தெண்டனிட்டதன்மகனைக் கண்டந்தஅல்லியரும்
வாழ்வாய்வளர்ந்திடுவாய் வர்த்திப்பாயுந்திருப்பாய்
நிற்பாய்நிலைதறிப்பாய் நீயரசையாண்டிடுவாய்
கற்பகத்தனுண்போலே கலங்காதரசால்வாய்
விற்பதித்ததுண்போலே வெகுநாளாய்வாழ்ந்திடுவாய்
என்னைப்பெறுவால் எதிர்த்தார்முடிபெறுவாய்
பிள்ளைப்பெறுவாய் பெருமாள்பதம்பெறுவாய்
போருக்குப்போவாய் பொழுதோடேவென்றிடுவாய்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவாய்
மாத்தானைக்கொன்றிடுவாய் வையகத்தையாண்டிடுவாய்
சினத்தவர்கள்பூமுடியை செண்டாட்டமாட்டிடுவாய்
பகைத்தவர்கள்பூமுடியை பருந்தாட்டமாட்டிடுவாய்
பிள்ளைகளைப்பெற்றிடுவாய் போதவேவாழ்ந்திடுவாய்
மைந்தர்களைப்பெற்று மகிழ்ச்சியாய்வாழ்ந்திடுவாய்
வாழ்வீர்காளென்று மனங்குளிரவாழ்த்தினள்
வாழ்ந்திடுவீரென்று மனதாரவாழ்த்தினள்
வாயாரவாழ்த்தி மனதுமிகக்குளிர்ந்து
வாரியெடுத்து மார்மேலேகொண்டணைத்து
உச்சிமுகந்து உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கந்தடவி பவளவாய்முத்தமிட்டு
போய்வந்தகாரியத்தை கேட்கலுற்றார்வுத்தமியும்
அப்பாபுனந்திரரே அழகுள்ளகண்மணியே
அர்ச்சுனனார்பெற்றெடுத்த ஆனந்தவாழ்மார்பன்

புண்ணியத்தால்வந்துதித்த பிள்ளைபுனந்திரரே
சொக்கருளாலே துலங்கவந்தகண்மணியே
காலாளுமில்லாதே கனகதண்டியில்லாதே
திருமேனிக்காவலனே சேவகனுமில்லாதே
வாள்விஜயன்சீர்மகனே வந்தவகைகளெல்லாம்
மைத்தர்புனந்திரரே வந்தவகைசொல்லுமென்றாள்
ஒன்றுங்குறையாமல் வத்தமனேசொல்லுமென்றாள்
போய்வந்தகாரியத்தை புண்ணியனேசொல்லுமென்றான்

புனந்திரன் சேதியுரைக்கிறது.

அப்போபுனந்திரரும் ஆச்சியற்கேதுசொல்வார்
மடியைவிட்டுக்கீழிறங்கி வந்துமெய திரில்நின்று
கைகட்டிவால்புதைத்து காலையிடபுத்திரனும்
வளநாடியல்லியற்கும் வாய்குறிச்சேதுசொல்வாள்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
பெற்றபெருமாளும் பிரியமுடையவரும்
உடையாருங்கூடி உடனுன்மண்டபத்தில்
ஐவரையும் ஆருவுயர்ந்தாரும்
வேந்தர்பெருமாளும் மேல்மண்டபத்தில்வீற்றிருந்து
என்னைவரவழைத்து எனக்கிட்டனர்கட்டளைகள்
போப்பாப்பா பெரியப்பாதங்களுக்கு
விடையருளவிட்டார்கள் வீரப்பெரும்புலிகள்
தோரணயானையாய் தூதுரைக்கப்போரேனென்றாள்
துங்கேலங்கன்றனும் தூதுரைக்கப்போகவென்று
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்தான்கேட்டு
கதிக்குக்கனலாண்டி கண்களெரிபறந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தை எட்டிச்சிவாலயமாய்
குண்ணுபோல்கண்சிவந்து கோபமதிகமாய்
ஸ்ரீமதுரைக்குள்ளே திருவாயின்வாயின்வாயிலுள்ளே
கட்டிவரும்பாற்குடங்கள் காவலனூர்வாசலிலே
எட்டிவரவிடுவார் எம்முடையவாசலுக்கு
இத்தனையும்தள்ளிவிட்டு ஏனோநீவோறேனென்றாய்
அப்பாநீபோனால் அடியென்பொறுப்பேனோ
மைத்தாநீபோனால் மனதுதரிப்பேனோ
உள்ளந்தரித்திடுவோம் உத்தமனூர்புத்திரனே
அறிவீரறிவீர் அடியேன்குடிவிளங்க
அடியேன்குடிவிளங்க வந்துதித்தஆணழகா
எங்கள்குடிவிளங்க வந்துதித்தராத்தினமே

அல்லி-கைத்தலத்தைதான்பிடித்து கட்டழகியேதுசொல்வாள்
ஆனைகட்டிவந்தாலும் ஆந்தவாழ்மாரி
ஆளன்பெருமை தேணுமம்மா ஆரணங்கே
குதிரைகக்டிவாழ்ந்தட்டனும் கொத்தார்குழலியரே
கொண்டார்பெருமை வேணுமம்மாகொம்பனையே
தங்கமதிலெறி தானடந்துதாழ்ந்தாலும்
தாலிப்பெருமை வேண்டுமம்மாதையலரே
மஞ்சட்பெருடையது வேண்டுமம்மாதையலரே
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சியரே ஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிம் தேவியரேதேறிவிடும்
தணியுமதணியுமம்மா தனஞ்செயனார்தேவியரே.
என்றுமவளுரைதாள் ஏந்திழையாள்தாதியரும்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நாயகியும்
கொம்பனையாள்கோபம் குணப்படுத்திக்கொண்டவளும்
மங்கைநல்லாள்கோபம் வசப்படுத்திக்கொண்டவளும்
பிடித்தப்பிடியோடே பொன்மதுரைகொண்டுவந்தாள்
அணைத்தப்பிடியோடு அணிமதுரைகொண்டுவந்தாள்
வாழ்பாண்டிநாடாளும் வையைவளநாடுவந்தாள்
அரண்மனைஎழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
ஓடமயில்கண்ணாள் உட்கட்டிற்போய்புகுந்தாள்
சிம்மாதனத்தருகே சென்றாளே அல்லியரும்
போரஞ்சாமன்னர் புனந்திரனார்ஓடிவந்து

அல்லியைப் புனந்திரன் காண்கிறது.

அல்லிக்கெதிர்வந்து அடிவணங்கிதெண்டனிட்டு
போனதொருகாரியங்கள் புறத்திலேகேட்டிருந்தேன்
நீசென்றகாரியங்கள்நிண்ணயங்கள்நானறியேன்
அர்ச்சுனருமநீயும் அடுக்குமோயுத்தம்செய்ய
நீ-கோபித்துகண்சிவந்து கொல்லத்துணிந்ததுவும்
எல்லாமறிவேன்காண் என்னுடைய ஆச்சியரே
போகவிடைதாருமென்றான் போரஞ்சாபுத்திரனும்
அப்போதுஅல்லியரு மாரணங்கேதுசொல்வாள
மைந்தர்முகம்நோக்கி மாதாயெடுத்துரைப்பாள்
வம்புகள்பேசி விகடங்கள்பண்ணுதற்கு
வீம்புகள்பேசி விகடங்கள்பண்ணுதற்கு
விகடங்கள் பண்ணுதற்கு விஜயன்மகனல்லவோ
என்றுமவளுரைத்து எழுந்துநடக்கலுற்றாள்

சொக்கர்கோவிலுக்கு அல்லிபோகிறது.

மண்ணலந்தான்பாதமது நோக்கிமனதிலெண்ணி
அரண்மனைஎழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி

வைகைக்கரையோரம் வந்தாளே அல்லியரும்
ஆடைகளைந்து ஆபரணந்தான்களைந்து
பொய்கையில்ஸ்நானம்பண்ணி புனல்கங்கைநீராடி
ஈரமெடுத்து இழைசேர்த்தபட்டுடுத்தி
நனைந்ததுயில்களைந்து நாகரிகப்பட்டுடுத்தி
சிவசிவாவென்று திருநீற்றுக்காப்பணிந்து
அரகராவென்று அணிந்தாளே வெந்நீறு
திக்கெங்கும்நோக்கித் திசையெங்குமாதரித்து
ஆலாலமுண்ட அரனடிபணிந்து
ஆதிசிவனை அடிவணங்கிதெண்டனிட்டு
இந்திரனைநோக்கி இரங்கியவள்தெண்டனிட்டு
ஐயனேமெய்யனே ஆயிரங்கண்ணிந்திரனே
பொய்சொல்லார்க்கெல்லாம் புறங்காக்கும்புண்ணியனே
மெய்சொல்லார்க்கெல்லாம் விளக்கொளியாய்நின்றவனே
நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளையுந்தெண்டனிட்டு
சுத்திவிநாயவந்து செவியிலொருபூச்சொருகி
வைகைக்கரையைவிட்டு வாராளேயல்லியரும்
சொக்கரிட ஆலயத்தில் சுந்தரியும்போய்புகுந்து
முக்கால்வலம்வந்து மூவிருகால்தெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
சாமிக்கும்அம்மனுக்கும் சடுதியிலேவந்துநின்று
சொக்கரைத்தான்பார்த்து தோகைநல்லாலேதுசொல்வாள்
அம்மனைத்தான்பார்த் தல்லியருமேதுசொல்வாள்
தொங்கலிலேனும்பூமுடியான் தூதுரைத்துமீண்டாக்கால்
சிந்தனைகளில்லாமல் சிறுவன்வந்துசேர்ந்தாக்கால்
அண்ணாமலையற்கு ஆடுகிறபெண்ணிடுவேன்
உண்ணாமலையாட்கு வுடைபோடப்பண்ணிடுவேன்
தண்டிவரும்பொன்னையெல்லாம் சரிகைக்குடத்துடனே
கொண்டுவந்துகொட்டுவேன் கோபுரவாசலிலே
தூதுரைக்கப்போகுதற்கு சில்வருளவேண்டுமென்றன்
உத்தரவுதாருமென்று சற்றடிக்குதெண்டனிட்டான்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டாள்

## சொக்கர் அல்லிக்குவரம் கொடுத்தது.

அப்போதுசொக்கர் அம்மன்மனமகிழ்ந்து
போகவிடைகொடுத்தார் புனந்திரராசருக்கு
வாழ்த்திவிடைகொடுத்தார் வாளெடுத்துக்கைகொடுத்தார்
மாயத்திருநீற்றை அள்ளியிட்டார்பங்கையற்கு
வண்ணலட்சம்சேனைகளை வரவிடுகிறேன்பின்னாலே
சிந்தனைகளில்லாமல் சிறுவன்வந்திடுவானே

மனக்கவலையில்லாமல் மன்னன்வந்திடுவான்
போகஅனுப்பிவிடும் புனந்திரராசாவை
என்றுவிடைகொடுத்து யிருந்தாரேசொக்கலிங்கம்
விடைபெற்றுமீண்டாளே மேன்மையுடையல்லியரும்
ஆலசத்தைவிட்டுமெல்லோ ஆரணங்குவாராளே
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
அரண்மனைஏழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
ஓடமயில்கண்ணாளும் உட்கட்டில்போய்புகுந்து
போரஞ்சாமன்னர் புனந்திரனைதானழைத்து
சொக்கர்திருநீற்றை சுந்தரியும்அள்ளியிட்டு
சாமியார்தான்கொடுத்த திருநீற்றைஅள்ளியிட்டு
வாழ்த்திவிடைகொடுத்து வாளெடுத்தங்கைகொடுத்து
போய்வாருமென்று பொருந்தவிடைகொடுத்தாள்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்
அரண்மனைஏழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
தெத்துத்தெருக்கடந்து தேரோடும்வீதிவிட்டு
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
பாட்டனரண்மனையைத் தேடிவந்தாரிந்திரரும்

புனந்திரன் பாட்டன்மார் அரண்மனைவருகின்றது.

ஆறுயிரவர் அணிதிரளார்முன்னேவந்து
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொங்நீருஞ்சொம்பிலே பன்னீருந்தான்வார்த்து
பந்நீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
ஆறுயிரவர்க்கும் அடிவணங்கிதெண்டனிட்டான்
தெண்டனிட்டஇந்திரனைக் கண்டந்தபாண்டியர்கள்
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
தேகம்குளிர்ந்து இருதோளும்பூரித்து
மனதுமகிழ்வாக மைந்தனைவாழ்த்தலுற்றார்
வாழ்வீர்வளர்வீர் வாழ்ந்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதறிப்பீர் நிரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போல கலங்காதரசாள்வீர்

விற்பதித்ததுண்போலே வெகுநாளரசாவீர்
போருக்குபோய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டஞ்சூட்டிடுவீர்
எதிரிகளைக்கொன்றிடுவீர் எல்லையரசாண்டிடுவீர்
மாத்தானைகொன்றிடுவீர் வையகத்தையாண்டிடுவீர்
பகைந்தார்கள்பூமுடியை பருந்தாட்டமாட்டிடுவீர்
கன்னிகளைமாலையிட்டுக் காளைகளையீன்றிடுவீர்
மங்கையைமாலையிட்டு மைந்தரையீன்றிடுவீர்
பெண்களைமாலையிட்டுப் பிள்ளைகளைப்பெற்றிடுவீர்
பெற்றிடுவீர்பெற்றிடுவீர் பிள்ளைபதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவீர்
ஆலிலைபோல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்தானென்று மனங்குளிரவாழ்த்தினார்
வருகவருகவென் வள்ளல்வருகவென்றார்
திருவருகபொன்வருக தேவேந்திரன்வரும்
அதிகாரஅச்சுதனே அப்பாவருகவென்றார்
குடிகாரகொற்றடிமை கொண்டுவருகவென்றார்
அண்டத்துக்குள்ளே அமர்ந்திருக்கும்பார்குடமே
சொக்கர்திருவாசலுக்குத் தூண்டாமணிவிளக்கே
கப்பலுஞ்சோங்குங் கரைதுறையுள்ளவனே
சங்கீன்றமுத்துஞ் சல்லாபமுடையவனே
பவளம்படுந்துறையும் பத்துலக்ஷமுள்ளவனே
காங்கள் - ஆறுயிரவருக்கும் அழகானகண்மணியே
அல்லியம்பாள்பெற்றெடுத்த அழகுபுனந்திரரே
வாருமையாவென்று மடிமேலேகொண்டணைத்தார்
மைந்தர்புனந்திரரை மடிமேலேகொண்டணைத்தார்
பொன்னுரெண்டுஞ்சிவந்தடியை பூவர்ணகண்ணிலொத்தி
தங்கத்தால்சிற்றடியை தங்களிருகண்ணிலொத்தி
ஐயாபுனந்திரரே யானுரைக்கநீர்கேளும்
காலாளுமில்லாதே கனகதண்டியில்லாதே
திருமேனிக்காவலனே சேவகனுமன்றியிலே
வாழ்விஜயன்சீர்மகனே வந்தவகையேது
மைந்தர்புனந்திரரே வந்தவகையேது
வளநாடுபுத்திரனே வந்தவகைசொல்லுமென்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்

புனந்திரன் சேதியுரைக்கிறது.

ஐயாவேகேளும் அடியேனொருவார்த்தை
என்னையாநீர்கேளும் எந்தனிடவார்த்தை
ஐவரையரும் ஆழிவுசந்தாரும்

வேந்தர்பெருமாளும் வெளிமண்டபத்தில்வீற்றிருந்து.
உடையாருங்கூட வுடனேமண்டபத்தில்
எல்லவரும்வந்திருந்து என்னைவரவழைத்தார்
என்னைவரவழைத்து எனக்கிட்டகட்டளைகள்
பேரப்பாரப்பா பெரியப்பாதங்களுக்கு
விடையருளவிட்டார் வீரப்பெரும்புலிகள்
தோரணையானையாம் தூதுரைக்கப்போகிறேன்
துன்னிலங்கண்ணன் தூதுரைத்துவாரேனையா
போகவிடைதாருமென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டான்
ஆருயிரவர் அணிதிரளரார்தான்கேட்டு

புனந்திரனைப்பற்றி பாண்டியர்கள் பரதவிக்கிறது

சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
நாராசங்காய்ச்சி நடுசெவியில்விட்டாற்போல்
போரஞ்சாமன்னர் புனந்திரற்குமேயதுசொல்வார்
அறிவீர்தெரியீர் அடியேன்குடிவணங்க
அடியேன்குடிவணங்க வந்துநிற்கஆணழகா
மன்னவன்பூமுடிக்கு வாட்டங்கள்வந்ததானால்
நாங்களனைவோரும் நாடாளுங்கன்னியரும்
ஆளும்ஆரகம் அனலிலேதீப்பந்திடுவோம்
போபோபுனந்திரரே போகாதேயென்றுரைத்தார்
அப்போபுனந்திரரும் அவ்வார்த்தையேதுசொல்வார்
ஐவரையற்றும் ஆழிவசந்தாக்கும்
அவர்க்கேதெரியாதே வுமக்குத்தெரியுமோதான்
போகவிடைதாரும் போய்வாரேன் தூதுக்கென்றார்
ஆருயிரவர் அணிதிரலாம்பாண்டியர்கள்
மைந்தாபுனந்திரற்கு மறுவார்த்தையேதுசொல்வார்
ஐவரும்தேவியரும் ஆரணியம்போனபின்பு
மன்னவரும்தேவியரும் வெங்காடுறைந்தபின்பு
காவலருந்தேவியரும் காடுரைந்தபோனபின்பு
உனக்கென்னகுறைசெய்துவைத்தோ மிந்திராஜாவே
ஏதுகுறைசெய்துவைத்தோம் எங்களிருகண்மணியே
மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
மதுரையம்பத்தறுகாதம் ஆளவென்றுபட்டங்கட்டி
முத்தாரும்மன்னருடு முழுகிலும்வுன்னுதென்று
பட்டணத்திலுண்டான படைமன்னர்உன்னுதென்று
யாசத்திலவரையர் பறைகொண்டுசாத்திவைத்தோம்
பாசத்திலவரையர் பட்டந்தரிப்பித்தோம்
என்னகுறையாக போறீர்காணிந்திரரோ
ஏதுகுறையாக போறீர்காணிந்திரரோ

என்றுமவருரைக்க கேட்டார்புனந்திரரும்
வேர்த்துவிரிந்து மீசைசுருண்டேறி
சித்துடன்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகரித்து
படியைவிட்டுக்கீழ்க்குதித்து வந்துமுன்னேயதுசொல்வான்
எங்கள்-ஐவருந்தேவியரும் ஆரணியம் அற்றபின்பு
மன்னவரும்தேவியரும் வெண்காடுறைந்தபின்பு
காத்தாலுறைச்சலென்று என்னையிங்கேவிட்டுவிட்டார்
என்னைபடமானமிட்டு அளவிவிட்டுக்கொண்டாரோ
சூத்திவிட்டுப்பஞ்சவர்கள் தூவைவிட்டுக்கொண்டாரோ
கண்ணோட்டம்பஞ்சவரைக் கைவிலக்கிக்கொண்டீரோ
கொண்டாட்டமெல்லாங் கொழுப்பின்மகிமையல்லோ
பனைமூர்த்தனையும் பறையன்படைக்கில்லையோ
பண்ணைகல்லை பாட்டைபுளிகரணை
குப்பைபுளிகரணை தூறுவெளிமுள்கீரை
முன்னைமுசட்டை மூதார்க்கீரையுடன்
உங்கள்பாட்டனார்தேடும் பழம்பொருளைக்கண்டீரோ
உங்கள்ஐயமார்தேடும் ஆஸ்தியென்றெண்ணலையோ
எனக்குவிடைதாருமென்று இணையடிக்குதெண்டனிட்டான்
ஆருயிரவர் அணிதிரளார்தான்கேட்டு
மௌனமாய்த்தானிருந்தார் மன்னர்துரைராசாக்கள்
பொன்னுமலைநாடாளும் அண்ணவும்மேதுசொல்வார்

பொன்னுமலைநாடான் புனந்திரனுக்கு
உத்திரவுவாங்கிக்கொடுக்கிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரராஜாவே
ஆனந்தமார்பனே அனுப்பவிடைகொடுத்தால்
தாமமுடியான் தனிசண்டைபோடானே
போகவிடைகொடுத்து அனுப்புங்கள்புண்ணியனே
ஆருயிரவர் அணிதிரளார்தான்கேட்டு
ஐயாபுனந்திரரே அழகுள்ளகண்மணியே
போகவிடைதருவேன் போரஞ்சாராஜாவே
மனம்பொருந்தவில்லுமென்று மகுடமுடிராஜாக்கள்
கொடுத்தானகுமாரனுக்கு கூடவளநாடு
கொள்ளுங்குதிரைகளாம் கூர்வாளமாம் அம்புகளாம்
வெற்றிசேல்ப்பெண்களிலே வேணநூறாயிரமாம்
பச்சைசேலைப்பெண்களிலே பத்துநூறாயிரமாம்
அத்தனையுந்தானெடுத்தார் ஆனந்தமார்பனுக்கு
பொன்னுமலைநாடாளு மண்ணனுக்கேதுசொல்வார்
பெண்பெருமாள்பெற்றெடுத்த பிள்ளைபுனந்திரனார்

ரமமுடியான் தனித்தூதுபோகாதே
ஆளும்அரசு அடங்கலும்தான்கூடி
கூடவேநீர்போய் குணப்படுத்திவாருமென்றார்
மைந்தர்புனந்திரரை வரவழைத்துவாருமென்றார்
கோசவளநாட்டானைக் கூட்டிவந்துசேருமென்றார்
பொன்னுமலைநாடாரும் அண்ணவுந்தான்கேட்டு
அருளருளுமென்னையா அப்படியேயாகுதென்று
சொல்லப்பெற்றேனென்று சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றேனென்றுசொல்லிக் கும்பிட்டெழுந்திருந்தார்

புனந்திரன் விடைபெற்றுக்கொண்டு போகிறது.

போரஞ்சாமன்னர் புனந்திராஜனுக்கு
போகவிடைகொடுத்தார் போர்விஜயன்பாண்டியர்கள்
போய்வாருமென்று பொருத்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்திருந்தார் வேந்தர்பெருமானும்
அரண்மனைஏழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
பத்திரவீதி தெருவும்பலதாண்டி
கோசவளநாட்டான் கொலுக்கூடம்வந்தமர்ந்தான்
இவளிப்படியாக இருக்கின்றவேளையிலே
பொன்னுமலைநாடாளும் அண்ணெழுந்திருந்து
மதுரைப்பெருந்தெருவில் மண்டபத்தில்வந்திறங்கி
அங்கொருதூதுவரை ஆனழகர்தானழைத்தார்
தூதுவரும்வந்து தொழுதிறங்கிதெண்டனிட்டு
தெண்டனிட்டமன்னன் திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுது
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றார்
உன்னையழைத்தது ஒன்றும்குறைவுமில்லை
பறைபறையுப்மன்னவனை சாம்புவனைகூப்பிட்டென்றார்
தோட்டியைத்தானழைத்து வாருமென்றார்மன்னவரும்
அருளருளுமென்னையா அப்படிக்கேயாகுதென்று
சொல்லபபெற்றேனென்று சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றேனென்றுசொல்லிக் கும்பிட்டெழுந்திருந்து
யெட்டடியுமோரடியாய் விட்டுமிசநடந்து
பத்தடியுமோரடியாய்ப் பற்றியவன்நடந்து
தோட்டியருகில்வந்து தூதுவனுமேதுசொல்வான்
பொன்னுயலைநாடாரும் அண்ணவுந்தானழைத்தார்
அரைநாழியிப்போதே யழைத்துவாவென்றுசொன்னார்
வந்தாலேயாச்சுது வாராமல்நீயிருந்தால்
வாராமல்நீயிருந்தால் வல்லுயிரைவாங்கிடுவோம்

நிமிஷமரைநாழிகைக்குள் நீவருவென்றுசொன்னார்
பறையறையுமன்னவனும் சாம்புவனுந்தான்கேட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னன்மனநடுங்கி வார்த்தைகளேதுசொல்வான்
என்னாலேயேதுகுற்ற மெனக்கறியச்சொல்லுமென்றான்
சொல்லுமையாசுவாமியென்று தூதுவனைத்தெண்டனிட்டான்
அப்போதுதூதுவனும் ஆனைமுகனேதுசொல்வான்
ராஜாக்கள்காரியங்கள் நமக்குவெளிப்படுமோ
க்ஷத்திரியர்காரியங்கள் கலகம்வெளிப்படுமோ
மந்திரிகள்காரியங்கள் மருமம்வெளிப்படுமோ
தொடர்ந்துவாடாவென்று யெழுந்துநடக்கலுற்றார்
தூதுவனும்சாம்புவனும் துரிதமுடனோடிவந்து
பொன்னுமலைநாடாறும் அண்ணர்க்கெதிரில்வந்து
பறையறையுஞ்சாம்பவனும் பார்மன்னனேதுசெய்தான்
தூரவிருந்து தொழுதிறங்கித்தெண்டனிட்டு
தெண்டனிட்டமன்னன் திரும்பவெழுந்திருந்து
மோதிரபின்ன முடிமேலேகைதொழுதான்
என்னையழைத்தபணி யேதுபணிசொல்லுமென்றான்
பொன்னுமலைநாடாளும் அண்ணுவுமேதுசொல்வாள்

சாம்புவனை பறையறையும்படி உத்திரவு கொடுத்தது.

பெண்பெற்றெடுத்த பிள்ளைபுனந்திரனார்
தாமமுடியான் தனித்தூதுபோகாதே
ஆளும்அரசும் அடங்கலும்பயணமென்று
சேனைப்படைத்தலைவர் திரள்வேந்தர்பயணமென்று
ஆனைப்படைத்தலைவர் அடங்கலும்வருகவென்று
குதிரைப்படைத்தலைவர் கொற்றவர்வருகவென்று
வருகவென்றுசொல்லித் தெரியப்பறையறையும்
வாராமலேயவர்க ளிருந்துவிட்டாராமானால்
ஊருக்குமேற்கே உயிர்க்கழுவில்போட்டிடுவோம்
காமமணிகட்டி நரிக்கிடுவோம்பூமுடியை
நாக்கோடேநாக்கருத்து நரிவிட்டுஓட்டிடுவோம்
மூக்கோடேமூக்கருத்து முன்முடியைச்சங்கரிப்போம்
அப்படிக்கேசொல்லி யறையும்பறையோசை
என்றுமவருரைக்க யேதுசொல்வார்சாம்புவனும்
அருளருளமென்னையா அப்படியேயாகுதென்று
சொல்லப்பெற்றேனென்று கும்பிட்டெழுந்திருந்து
கூறப்பெற்றேனென்று கும்பிட்டெழுந்துநின்று
பொன்னுமலைநாடாறும் அண்ணையெழுந்திருந்து
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி

மாநகரமாளும் மகாராஜன்மாளிசென்று
கோசவளநாட்டான் கொலுவில்வந்துவீற்றிருந்தான்
இப்படியாக இவனிருக்கும்வேளையிலே

சாம்புவன் பறையறைகின்றது.

பறைபறையுமன்னவர்கள் பார்மன்னரோடிவந்து
வெள்ளியால்பறைகொண்டு வெங்கலத்தால்கோலாணி
முத்தாலேபறைகொண்டு முழுவயிரத்தால்கோலாணி
ஆனைமேலேவைத்து அலர்தரான்போடலுற்றான்
மதுரைப்பெருந்தெருவும் நடுவீதிவந்துநின்று
அடித்தார்பறையோசை அண்டங்கிடுகிடென்ன.
வெள்ளிமலையாள்பேரிகை விருதுமுழங்கிவிட்டார்
தங்கத்தால்பேரிகை தானேமுழங்கிவிட்டார்
என்னவென்றுசொல்லி பறையலுற்றார்பேரிகைஐய
பெண்பெருமாள்பெற்றெடுத்த பிள்ளைபுனந்திரனார்
தாமமுடியான் தனித்துப்போகாதே
ஆளும்அரசும் அடங்கலும்வாருமென்று
ஆனைபரிசேனை அடங்கலும்வாருமென்று
குதிரைப்படைத்தலைவர் கொற்றவர்வருகவென்று
சேனைப்படைத்தலைவர் சேர்ந்துவருகவென்று
வரவேண்டுமென்றுசொல்லி விருதுபறையறைத்தான்
வாராமல்நீங்கள் இருப்பீர்களானால்
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளுத்திறவு
ஊருக்குமேற்கே உயிர்கழுபோட்டிடுவோம்
தாமமுடிகழட்டி தரித்திடுவோம்பூமுடியை
மூக்கோடேநாக்கரிந்து முன்முடியைச்சங்கரிப்போம்
அப்படிக்கேயென்று அறைந்தார்பறையோசை
அறைந்தபறையோசை அந்நகரிதான்கேட்டு

சேனைகளெல்லாம் பயணப்பட்டு புனந்திரனிடம் சேருகிறது.

சிலமன்னரெல்லாம் திடுக்கிட்டெழுந்திருந்து
பலமன்னரெல்லாம் பயந்தெழுந்திருந்து
குலமன்னரெல்லாம் குலைநடுங்கிஓடிவந்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
மனதுகலங்கிமறுவார்த்தை சொல்லாமல்
முன்னேமுரசெடுத்து முன்னாலேமேற்போட்டார்
பின்னேமுரசெடுத்து பின்னாலேமேற்போட்டார்
பலமன்னரெல்லோரும் தேர்ன்மேலேறினார்கள்
சிலமன்னரெல்லோரும் குதிரையின்மேலேறினார்கள்
குலமன்னரெல்லோரும் பல்லக்கிலேறினார்

ஆனதொருமந்திரிக ளானையின்மேலேறினார்
பட்டர்புலவர் பதினெட்டுபந்திகள்
ஆயத்துராசாக்கள் துடர்ந்துவந்தமந்திரிகள்
காதத்துராசாக்கள் கடந்துவந்தமந்திர்கள்
சிங்கம்கரடிபுலி சேரமுழங்கிவர
யாளிகாரபுலி யருகில்முழங்கிவர
சின்னத்தொனிமுழங்க சிலமன்னர்வாறார்கள்
முத்துக்குடைகவிய முடிமன்னர்வாறார்கள்
பவளக்குடைகவிய பலமன்னர்வாறார்கள்
தங்கக்குடைகவிய தானடந்துவாறார்கள்
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருக்களெல்லாந்தாண்டி
புலிமுகவாசலிலே வந்துமிகநின்றார்கள்
அங்கொருதூதர் அருகாகவந்துநின்று
கோசலனாட்டான் கொலுவுக்குமுன்னேவந்து
போரஞ்சாமன்னர் புனந்திரற்குட்டியதுசொல்வான்

சேனைவந்தசமாச்சாரம் தூதன்சொல்லுகிறது.

சேனையும்வந்ததென்று திசைநோக்கிதெண்டனிட்டான்
படைமன்னர்வந்தாரென்று பார்நோக்கிதெண்டனிட்டான்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
மகுடமுடியசைக்கி மன்னவனுந்தான்பார்த்து
யானைபணிக்காரர்களை ஓடியழையுமென்றான்
அருளாருமன்னையா அப்படிக்கேயாகுதென்று
ஓடியழைத்தான் ஒருநொடியில்தூதுவனும்
யானைப்பணிக்காரில் ஆறுநூறாயிரம்பேர்
யானைப்பணிக்காரில் அதிகாரிதானெழுந்து
ஏதுக்கழைத்தார்கள் என்னுடையராசாவும்
அதுவனும்போது துரிதமுடனேதுசொல்வான்
ராஜாக்கள் காரியங்கள் நமக்குவெளிப்படும்மா
க்ஷத்திரியர்காரியங்களு கலக்கம்வெளிப்படுமோ
மந்திரிகள் காரியங்கள் மருமம்வெளிப்படுமோ
என்னமோயேதோ வெக்கொன்றுந்தெரியாது
தொடர்ந்துவருகவென்று யெழுந்துநடக்கலுற்றான்

யானைப்பணிக்கர்கள் இந்திரனைக் காணுகிறது.

யானைப்பணிக்கர்கள் ஆறுநூறாயிரம்பேர்
அத்தனைபேர்களும் அவனருகிலோடிவந்தார்
தூதனுடன்கூடி தொடர்ந்துவழிநடந்தார்

வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடுவீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
கோசவளநாட்டான் கொலுவுக்குமுன்னே வந்து
போரஞ்சாமன்னர் புனர்திராசருக்கு
யானைப்பணிக்கரெல்லாம் அடிவணங்கிதெண்டனிட்டார்
தெண்டனிட்டமன்னர் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதார்
கைதொழுதராஜருக்கு கட்டழகரேதுசொல்வார்
எங்களையழைத்தபணி யேதுகருமமென்றார்
உங்களையழைத்தது வொன்றுங்குறைவுமில்லை
அத்திப்புரம்போக யானைகொண்டுவாருமென்றார்
யானைப்பணிக்கர் ளடங்கலுமேதுசொல்வார்
எவ்வானைகொண்டுவர யெங்களிளவரசே
மேகனேமின்னனே வெளிநாடங்கொண்டவனே
கொம்பில்பெரியவனே கொளம்புலிசைபுள்ளவனே
இல்லைப்பதியோ சிவகாமிசந்தரனே
கற்பகவல்லி கதித்தமதகளுமோ
பொற்புள்ளகொம்பு நிகளமுடையவனே
எவ்வானைகொண்டுதர யெங்களிளவரசே
போரஞ்சாமன்னன் புனந்திரனுமேதுசொல்வார்
பாசுபதம்பெறுபெற்ற பார்தசனுடபோமைந்த
ஆணுலமுகுமன்னன் அர்ச்சுனனார்போமைந்த
வில்லாளிபாரத்தன் விஜயனுடபோமைந்த
அவ்வானையெந்தனுக்கு கொண்டுவரவேண்டுமென்றார்
யானைப்பணிக்கர் அடங்கலுந்தான்கேட்டு
ஐயாமேவரீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னையாநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
ஆளப்பிறந்த அபிமரைப்பாடெழுந்து
முத்துமுடிதரித்த ராஜாவைத்தானெழுந்து
ஆரெல்லாமண்டி அனலண்டிதியண்டி
கத்திபலமார்ந்து காட்டகத்தேபோயிருந்து
பிள்ளைபகையாலே பெருங்கோபங்கொண்டதுவும்
தன்னிழலைத்தான்பார்த்து தவிததுப்புலம்புறதும்
ஆள்வருவதைக்கண்டாலே அந்தமதயானை
தும்பிக்கையைத்தூக்கி சுழட்டியெறிந்துவிடும்
அவ்வானைமுன்பாக அஞ்சுவோம்நாங்களையா
தலவானைமுன்பாக கூசுவோம்நாங்களையா

போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
சித்துடன்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
அடங்காதகோபமுடன் ஆனழகனேதுசொல்வான்
அடுத்தடித்துச்சொல்லுறதும் என்சொல்மறைக்கிறதும்
அத்தனைக்கும்வந்த செருவம்அடக்கிடுவேன்
அஞ்சுவதுமென்னை யதுவேவருகவென்றான்
கூசுவதுமென்றுதே கொண்டுவருகவென்றான்
அவ்வார்த்தைதான்கேட்டும் ஆனழகனேதுசொல்வான்
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னையாநீர்கேளும் எங்களுடையவார்த்தை
அவ்வானைதான்பிடிக்க அவ்வனத்தைபோனாலே
எங்களைக்கண்டாலே யெழுப்பியதுமேல்விழுந்து
தும்பிக்கையைச்சுத்தி சுழட்டியடித்துவிடும்
போனஜனங்களெல்லாம் பின்னேவரப்போறதில்லை
சென்றஜனங்களெல்லாம் திரும்பிவந்துசேர்வதில்லை
பெண்டுகள் பிள்ளைமுகத்தில்விழிப்பதில்லை
மாளுவதுநிச்சயங்கான் மதயானைதன்னாலே
உங்களுடையாளம் ஏதாகிலும்கொடுத்தால்
அடையாளந்தந்தாலே யானைபிடித்திடுவோம்
ஆனைபிடித்திடுவோம் அணிமதுரைசேர்ந்திடுவோம்
மத்தகஜந்தான்பிடித்தும் மதுரைவந்துசேர்ந்திடுவோம்
என்றுமவருரைத்து இறங்கியவர்தெண்டனிட்டார்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு

## புனந்திரன் மோதிரங்கொடுத்து அர்ச்சுனர்பேர்கொண்ட யானையைக் கொண்டுவரச் சொன்னது.

கணையாழிமோதிரத்தைக் கழட்டியவன்முன்போட்டு
அடையாளங்கைகொடுத்து ஆனைகொண்டுவாருமென்றார்
போய்வாருமென்று பொருத்தவிடைகொடுத்தான்
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
நெஞ்சுலர்ந்துவாய்வரண்டு நித்திலங்குபூமுடியார்
ஒருவர்க்கொருவர் உவமைகள்சொல்லிடுவார்
மூர்க்கன்சோறுண்டகளை முடித்ததுயின்றோடே
அவதிசோறுண்டகளை அற்றதுயின்றோடே
போதுமையாசாமியென்று ஏகிவழிநடந்தார்
அவ்வீதிவீதி நடந்தார்அழகாக
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தங்கள்தங்கள்மாளிகையில் தார்வேந்தர்போய்புகுந்தார்

தூதர் காட்டில் யானைக்குப்பயந்து இருந்துபோவோமென்று
நினைந்து தங்கள்பிள்ளைகள் பெண்ணுக்குக்
கலியாணஞ்செய்கிறது.

வன்னிமரம்பிளந்து வாசலெல்லாம்பந்தலிட்டார்
ஈர்க்குப்பிளந்து இருகாதம்பந்தலிட்டார்
முத்துப்பிளந்து முக்காதம்பந்தலிட்டார்
பவளத்தால்கால்நிறுத்தி பதிங்காதம்பந்தலிட்டார்
கன்னியர்க்குங்காளையர்க்குங் கலியாணஞ்செய்துவிட்டார்
விருந்துகள்தான்சமைத்து வேடிக்கைப்பார்த்தார்கள்
அப்போதுமன்னவர்கள் ஆலோசனைசெய்தார்கள்
மதயானைதான்பிடிக்க வனம்போய் திரும்புவோமோ
போயித்திரும்புவோமோ பிள்ளைமுகம்பார்ப்போமோ
மறித்துத்திரும்புவோமோ மைந்தர்முகம்பார்ப்போமோ
சாவோம்பிழைப்போமோ வென்றுமனதிலெண்ணி
தங்கள்தங்கள்பெண்டுகளைத் தார்வேந்தன் தானழைத்து
கொற்றப்போர்மன்னரெல்லாம் கோடிப்புடவையிட்டு
மற்றப்போர்மன்னரெல்லாம் மதயானையைக்கைபிடிக்க
வாய்க்கரிசிகைபிடித்து வாரார்கள்மன்னரெல்லாம்
போகவிடைபெற்று புறப்பட்டார்வீரரெல்லாம்
யானைப்பணிகளில் அதிகாரிமுன்னடக்க
குதிரைப்பணிக்கர்களில் கொற்றவர்பின்னடக்க
சேனைப்படைத்தலைவர் சிலவீரர்பின்னேவர
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
வீதியும்வீதிதெருவும் பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
அரண்மனைவீதிவிட்டு அங்காடிதான்தாண்டி
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
தெருவும்பலதிசையும் தேரோடும்வீதிவிட்டு
மாலைமுடியார்கள் மதுரைக்குப்பின்னுரைத்தார்
காடுகடந்து கரியமலைதாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
சிங்கம்உலாகொடுக்கும் செந்நாய்வனந்தாண்டி
கரடியுலாகொடுக்கும் கரடிவனந்தாண்டி
கணையாழிகைப்பிடித்து கட்டழகர்கள் வாறார்கள்
வாய்வேகமாகவே வாறார்கள் தூதுவர்கள்
யானைபிடிப்பதற்கு வாறார்கள் தூதுவர்கள்

## தூதர் காட்டில் யானையைத் தேடுகிறது.

யானையிருக்கிற அடர்ந்தவனம்வந்துவிட்டார்
யானையைத்தேடுகிறார் அப்பெரியதூதுவர்கள்
சந்தமலைமேலே யிருக்குமோ அவ்வானை
சந்தச்சுனையருகில் இருக்குமென்றுநாமறிவோம்
என்றுமவர்பேசியேறினார் பூமரத்தில்
தாழ்ந்தமரத்தைவிட்டு உயர்ந்தமரமேறி
தாழ்ந்தமலையைவிட்டு உயர்ந்தமலையேறி
மலையேறிப்பார்த்தார்கள் மதயானை இருப்பிடத்தை
யானையிருப்பிடத்தை தேடுகிறார்மன்னவர்கள்
அப்போமதயானை அக்காடெல்லாந்திரிந்து
காடெல்லாந்தான் திரிந்து கண்டதழையைப்பிடித்து
கவளமெடுத்தவ்வானை காலைகமேசுத்திடுமாம்

## தூதர் யானைக்கண்டது.

தழைந்தமரத்தடி தான்வந்துபள்ளிகொள்ளும்
ஆலமரத்தடியில் ஆனைவந்துபள்ளிகொள்ளும்
பள்ளிகொண்டயானையைப் பார்த்தந்ததூதுவர்கள்
யானைதிரும்புவதற்கு அவ்வீரகேதுசொல்வார்
அவரென்னவென்றுசொல்லியப்போ ஊதுகிறார்கின்னத்தொனி
மதுரையறுகாதம் ஆளுகிறார்பாண்டியர்கள்
பொப்பனையறுகாதம் பூமதுரைமுக்காதம்
அம்பத்தறுகாதம் ஆளுகிறார்பாண்டியர்கள்
மைந்தனில்லையென்று மலைமேலேதவமிருந்தார்
மாறுகேட்டுமென்று மலைமேல்தவமிருந்தார்
மாலாதேவியென்று மலரிலவதரித்தாள்
திங்கள்தவசுசெய்து பெற்றெடுத்தஅல்லிநல்லாள்
மன்னன்விஜயன் மடலூர்ந்தகட்டழகி
காளைவிஜயன் கடலூர்ந்தகட்டழகி
ஏழுபிராயத்திலே யெதிர்த்துவந்தநீன்முகனை
நீன்முகனைச்சங்கரித்து நீலிபட்டமாண்டவள்காண்
அப்படிக்கொத்ததொரு ஆரணங்குபெற்றபிள்ளை
அல்லியம்மாள்பெற்றெடுத்த அழகுபுரந்திரனார்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
பெண்பெருமாள்பெற்றெடுத்த பிள்ளைபுனந்திரனார்
பேசப்பரப்பா பெரியப்பாமாளிகைக்கு
தாமமுடியான் தனித்துதுபோகாதே
காண்டாவனமெரித்த காளைவருகவென்று
பாசுபதம்பேறுபெற்ற பார்த்தர்வருகவென்று

வில்லாளிபார்த்தன் விஜயாவருகவென்று
கணையாழிமோதிரத்தை கழட்டியவர்கைகொடுக்க
உம்மையழைத்துவர யெங்களையனுப்பிவைத்தார்
ஐயாவருகவென்று ஊதினார்தாரிசின்னம்
ஊதினார்சின்னம் வலமேகழுந்தானதிர
ஊதினார்காளை வலமேகழுந்தானதிர
செம்பொன்னார்களை திசைவிளங்கஊதினார்
அம்பொன்னார்காளை அவனியெல்லமதிரூதினார்
பொன்னினார்காளை பொருந்தநின்றூதினார்
வருகவருகவென்றூதினார்தாரைசின்னம்
ஊதினசின்னத்தொனி கேட்டுதுஅவ்வானை
மகுடமுடியசக்தி மரத்தின்கீழ்பள்ளிகொண்டு
ஆலோசனைசெய்கிறது அந்தமதவானை
அப்போதுதூதுவர்கள் ஆனலழகரல்லாம்
மரத்தைவிட்டுக்கீழிறங்கி மன்னவர்ஓடிவந்து
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருந்தானெடுத்து
கணையாழிமோதிரத்தைக் கட்டழகர்கைபிடித்து
யானையின்முன்னேவந்தார் அழகானதூதுவர்கள்
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுவென்றுதான்சொரிந்து
கணையாழிமோதிரத்தைக் காலுக்குமுன்னேவைத்து
முக்கால்வலம்வந்து அடிவணங்கித்தெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து பல்கரிக்குத்தெண்டனிட்டார்
யானையின்பாதம் அடிவணங்கித்தெண்டனிட்டார்
தெண்டனிட்டமன்னவர்கள் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேல்கைதொழுது
பெண்பெருமாள்பெற்றெடுத்த பிள்ளைபுனந்திரனார்
தூதுரைக்கப்போனார்காண் சுந்தரப்பூமுடியான்
தாமமுடியான் தனித்துதுபோகாதே
ஐயாவருகவென்று அடிவணங்கித்தெண்டனிட்டார்
தாங்கள்வருகவென்று தார்வேந்தர்தெண்டனிட்டார்

## யானை மதுரைக்கு வருகிறது.

அப்போதுமதயானை அவர்களுக்குயேதுசொல்லும்
போவோம்மதிலிடிப்போம் பெண்சேனையும்பிடிப்போம்
நாலால்கடுந்திறலார் நூற்றொருவர்பூமுடியை
நூற்றொருவர்பூமுடியை நொறுங்கஅடித்திடுவோம்
சாயரம்புமேனி சகுனிதலையுடைப்போம்
தங்கைமணவாளன் தருதலையன்பூமுடியை
தருதலையன்பூமுடியைத் தடியாலடித்திடுவோம்

காஞ்சிகாடாறுங் கருணையிடபூமுடியை
என்றுமதயானை யெழுந்துநடந்தது
மந்திமலைபோயிறங்கி மஞ்சநீர்தாண்டி
அசைந்துநடந்தது அப்பெரியகாட்டகத்தில்
சாய்ந்துநடந்தது சாயப்பெருமானை
கானகத்தைத்தாண்டி வருகிறதுதென்மதுரை
இருண்டவனந்தாண்டி எலுமிச்சந்தோப்புவிட்டு
கருத்தவனந்தாண்டி கானகமுந்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
சிங்கமுலாகொடுக்கும் செந்நாய்வனந்தாண்டி
காடிஉலாகொடுக்கும் கருநாய்வனந்தாண்டி
வாழ்மதுரைராச்சியத்தில் வருகிறது அவ்வானை
தூதுவர்கள்முன்னும்பின்னுந் தொடரவருகிறது
மதுரைப்பெருந்தெருவில் வீதியில்வருகையிலே

மதுரையில் ராஜாக்கள் யானையைக்கண்டு திகில்படுகிறது

மதுரையில்வாழுகின்ற மன்னவர்கள் கண்டார்கள்
சிலமன்னரெல்லோரும் திடுக்கிட்டெழுந்திருந்து
பலமன்னரெல்லோரும் பதைபதைத்துதானெழுந்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
நெஞ்சுலர்ந்துவரண்டு சித்திலங்கும்முடியான்
ஒருவர்க்கொருவர் உண்மையாய்ச்சொல்லிக்கொள்வார்
ஆனைப்பிறந்த அபிமனைப்பாடெழுந்து
ஆரெல்லாமாண்டு யனலண்டிதீயண்டி
சத்தியிலமர்ந்து கானகத்தில்போயமர்ந்து
மனங்கொள்ளாக்கோபமுடன் இருக்கும்மதயானை
அந்தமதயானை யிந்தத்தெருவில்வந்தால்
ஆரூர்கள்பூமிக்கு அழும்புவந்துநேர்ந்திடுமோ
என்றுமனதிலெண்ணி யெல்லவருமோடிவந்து
கோட்டையடைத்திடுவார் கொத்தளங்கள்சாத்திடுவார்
மாளியடைத்திடுவார் மண்டபங்கள்சாத்திடுவார்
ஈக்கம்பிடித்து யிருப்பார்சிலபேர்கள்
மனதுபயமெடுத்து பன்னரிகூத்திடுவார்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே
அப்போதுயானை அசைந்துநடைநடந்து
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவந்து
புலிமுகவாசல்வந்து புகுந்துநின்றவ்வானை

அரண்மனைவாசலிலே நின்றதுஅவ்வானை
அங்குமொருதூதன் ஆணழகனோடிவந்து
போரஞ்சாமன்னர் புனந்திரற்குமுன்னேவந்து
கணையாழிமோதிரத்தை கழட்டியவன்முன்னேவைத்து
யானைப்பிடிக்க அடர்த்தவனம்போனதுவும்
போனதுவும்வந்ததுவும் புதுமைகளுள்ளதெல்லாம்
ஆனையைக்கண்டு அழைத்தோடிவந்ததுவும்
அத்தனையுஞ்சொலலி யடிவணங்கிதெண்டனிட்டார்
யானையும்வந்ததென்று யடிவணங்குதெண்டனிட்டார்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
துள்ளியெழுந்தான் துவண்டமலரெடுத்தான்
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
அத்தனையுங்கண்டுமல்லோ ஆணழகனிந்திரனும்
பன்னீரால்காலலம்பிப் பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்காலவலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
யானையின்பாத மடிவணங்கிதெண்டனிட்டான்
அப்போதுயானையது ஆணழகர்க்கேதுசொல்லும்
உந்தனுக்கோதுக்கமப்பா உத்தமனேவீரியனே
எந்தனுக்குதுக்கம் இருக்குதெழுந்திரென்று
துக்கமாய்த்தானிருந்து தும்பிக்கைதானெடுத்து
இந்திராசாவை யெடுத்துநிறுத்தியது

யானை புனந்திரற்கு தேறுதல் சொல்லுகிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து
அங்குமொருதூதுவனை ஆணழகன்தானழைத்து
செந்நெல்பயறு சிறுப்பறுதேங்காயும்
கொள்ளும்உளுந்துகளும் கொப்பரைத்தேங்காய்களும்
கூட்டிக்கவளம் கொடுமென்றான்யானைக்கு
அப்போதுயானை ஆணழகர்க்கேதுரைக்கும்
ஆளப்பிறந்த அபிமருயிர்வாங்கி
கொன்றுபழிசெய்து கொலுசெய்துபோட்டவரை
அவரைகொன்றுபழிவாங்கி குடல்பிதுங்கித்தோன்போட்டு
அத்திபுரமுழுதும் அடங்கலுந்தானிடித்து
கமதுசப்தம் முடிந்ததின்பிற்பாடு
அன்றுகவளம் எடுப்பேன்காணணழகா

யானைசப்தமிடவும் புனந்திரன் அத்திப்புரத்துக்குத் தூதுக்குச் செல்லுகிறது.

என்றுமதுவுரைத்து இருந்ததுஅவ்வானை

அப்போதுஇந்திரரும் ஆனைமுகர்தான்கேட்டு
படிபடியென்றான் படிந்ததுஅவ்வானை
முக்கம்பம்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகம்தட்டி மதயானையேறினான்
அம்மனுந்தானும் அழ்கானையேறினார்
பரமாவுந்தானும் மதவானையேறினார்
வந்தவர்பேர்களெல்லாம் வாகனங்களேறுமென்றார்
சரியானையேறினார் தன்னொத்தராசாக்கள
பக்கானையேறினார் பத்துலட்சம்ராசாக்கள்
அறுகானையேறினார் அஞ்சுலட்சம்ராசாக்கள்
மூன்றானையேறினார் மூன்றுலட்சமராசாக்கள்
இன்னஞ்சிலமன்னவர்களெழுந்தார்கள்துருசாக
முன்னைமுரசெடுத்துமுன்னைமேல்போட்டார்
பின்னைமுரசெடுத்து பின்னானைமேல்போட்டார்
சிலமன்னரெல்லோரும் தேரின்மேலேறினார்
பலமன்னரெல்லோரும் பல்லக்கிலேறினார்
குலமன்னரெல்லோரும் குதிரைமேலேறினார்
அழகானமன்னரெல்லாம் ஆனையின்மேலேறினார்
உத்தமனார்சீரியர்கள் ஒட்டையின்மேலேறினார்
பட்டர்புலவர் பதினெட்டுமந்திரிகள்
சித்தர்சுகர்சாரணர் சேனைபோமந்திரிகள்
இன்னஞ்சிலமன்னவர்களெங்குமநிறைந்தார்கள்
சிக்கங்கரடிபுலி சேர்ந்துமுழங்கிவர
இப்படியாய்ச்சேனைகளேறினார்வாகனத்தில்
ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடைகள் முழுமாணிக்கபொற்குடைகள்
தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பச்சைகுடையாம் பவளநெடுங்குடையாம்
வச்சிரக்குடையாம் வைடூரியநற்குடையாம்
எங்குந்நிறைந்தார்களெண்ணாயிரங்குடைகள்
சுத்திநிறைந்தார்கள் சூரியனைக்காணாமல்
பக்கம்நிறைந்தார்கள் பகவானைக்கண்மறைக்க
பச்சைகுடைகவிய பார்மன்னன்தேர்நடக்க
முத்துக்குடைகவிய முடிமன்னர்தேர்நடக்க
தங்கக்குடைகவிய தார்வேந்தர்தேர்நடக்க
ரத்தினக்குடைகவிய ராஜாக்கள்தேர்நடக்க
பொன்னின்குடைகவிய பூபாலர்தேர்நடக்க
ஒத்தக்குடைநடுவில் உத்தமனார்வாராரே
யானையசைந்துவர அடல்வீரர்கொக்க
சேனையசைந்துவர திரல்மன்னர்கொக்கரிக்க

குதிரையனுமாணிக்க கோடிமன்னர்சத்தமிட
யானையுஞ்சேனைகளும் அசைந்துவழிநடந்தார்
அவ்வீதிவீதி நடந்தாரழகா
அவ்வீதிதாண்டி மறுவீதிபோம்போது

புனந்திரன் அல்லிவீதி போகிறது.

அல்லியம்மாள் வீதியிலே யானைவருகிறது
வருகிறவேளையிலே வாத்தியங்கள்ஊதுகிறார்
ஊதினான்சின்னம் உலகேழுந்தானதிர
செம்பொன்மேற்காளை பொருந்துநின்றூதினார்
ஊதினசின்னத்தொனி வுத்தமியாள்கேட்டு
பிறவாமுடிதரித்த பெண்பெருமாளேதுசொல்வாள்
தனக்குகவரியிடும் தாதியர்க்குயேதுசொல்வாள்
மாத்தான்படையோ மறுமன்னர்தன்படையோ
எதிராளிதன்படையோ யிவ்வீதிவாரார்கள்
சரியொத்தராசாக்கள் சண்டைக்குவாரார்கள்
என்னைஜெயிக்கவென்று வாராரோநானறியேன்
மதுரைஜெயிக்கவென்று வழக்காடவாராரோ
யார்வரவுதாதி அறிந்தோடிவாருமென்றாள்

அல்லி தாதிகளைவிட்டுப் பார்க்கச் சொல்லுகிறது.

தனக்குகவரியிடுந் தாதியெழுந்திருந்து
திடுக்கென்றெழுந்திருந்து திமிதிமியென்றோடலுற்றாள்
வாசல்படியில்வந்து மங்கையரும்பார்க்கலுற்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
புனந்திரராசாவும் போரெழுதியண்ணனும்
மதுரைக்குடிபடைகள் மண்டலத்துராசர்களும்
தெனமதுரைகுடிபடைகள் சேனைபேர்மந்திரியும்
கண்டாளேதாதியவள் கடுகெனவேவோடிவந்து
அல்லிப்பெருமாட்கு அடிவணங்கித்தெண்டனிட்டு

தாதி அல்லிக்குச் சேதிசொல்லுகிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
பொன்னுமலைகாளாளும் அண்ணனுடனாக
தாதுரைக்கவாரார்கள் சந்திரப்பூமுடியாள்.
பிள்ளைபடையெடுத்து வருகிறாரென்னுசொன்னான்
பூரித்திருதோளும் பொன்னுபாமின்ன
திரேகங்குளிர்ந்து பிருதோளும்பூரித்து

அல்லி பிள்ளையைக்காண உப்பரிக்கையேறிப் பார்க்கிறது.

மைந்தனைக்காணவென்று மாதாவெழுந்திருந்து
எழாநிலையும் பெழுநிலையும்மேலேறி
மேலாங்கதவை விடுகதவைதாள்திறந்து
பவகோணிவாசல் துரந்தபத்தினியும்
காசிப்படியைக் கணக்கமிதித்தேறி
பவஞ்சப்படிமிதித்துப் பத்தினியாள்பார்க்கலுற்றாள்
போரஞ்சாமன்னர் புனந்திரனார்சீர்வடியை
கண்டாளேபுத்திரனைக் கட்டழகிஅல்லியரும்
அருகிருக்குந்தாதியற்கு அல்லியவளேதுசொல்வாள்
ஆரையில்சொருகழகும் ஐம்பொன்னூர்சிரழகும்
கத்திச்சொருகழகும் கத்திகட்டுவுள்மருங்கும்
கச்சுக்கட்டும்உள்மருங்கு கனிவாயின்பேரழகும்
தக்கபுகழுடைய தருமருடபேரழகும்
வெற்றிமதயானை வீமருடகால்நடையும்
காண்டாவனமெரித்த காலையுடகைவீச்சும்
நாமமுடையான் நகுலநடையழகும்
தாமமுடையான் சகாதேவன்கைவீச்சும்
காஞ்சிரானும் கருணருடபேரொளியும்
ஆறுபேர்தன்னழகை பெற்றுவந்தானழகன்
கண்ணேச்சல்சண்ணேச்சல் காண்டீபபுத்திரற்கு

புலந்திரற்கு ஆலாத்திக்காட்டுகிறது.

அர்ச்சுனனார்புத்திரற்கு ஆலாத்திகாட்டுமென்றார்
தேர்விஜயன்புத்திரற்கு திருஷ்டியைக்காட்டுமென்றார்
அங்குமொருதாதி அரிவையுடையாளோடிவந்து
இன்னுமுறையென்னுமென்று எழுந்தாளேதாதியவள்
முத்தினாலாத்தி முப்பதுநூறாயிரமாம்
பவளத்தாலாலாத்தி பத்துநூறாயிரமாம்
கற்பூர ஆலாத்திக் காட்டினாறுயிரமேபர்
திருஷ்டிகழித்து தெருவெங்கும்விட்டெறிந்து
ஆலாத்திக்காட்டி அணியிழைமார்வீற்றிருந்தார்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
அவ்வீதிவீதி நடந்தாரழகாக
மற்றுமொருவீதியிலே வாராரேயிந்திரரும்

புனந்திரன் பாண்டியர்கள் வீதிவருகிறது.

ஆராயிரவர் அணிதிரளார்தான்கேட்டு

ஆரம்பதக்கமும் அதிப்பதக்கந்தன்னுடனே
பாரப்பதக்கம் பருந்தமுத்துதாவடமும்
ஏல்லவுங்கமும் இன்பக்களிப்பாக்கும்
காச்சாகளிப்பாக்கும் சம்மாறுவெற்றிலையும்
ஆரங்கிபாக்குகளும் மோதிரங்கிவெற்றிலையும்
சாதிப்பெருங்கடலும் சங்குசுட்டசுண்ணாம்பும்
வச்சிரதட்டுகளும் வகைவகையாய்த்தானெடுத்து
ஆருயிரவர்களும் அங்கெனவேயோடிவந்து
போரஞ்சாமன்னர் புனந்திரற்குமுன்னேவந்து
இந்தாருமென்று எடுத்துஅவர்கைகொடுத்து
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து
மகுடமுடியசைக்கி மன்னவனுமேதுசொல்வான்
அழுதடங்கையமர்த்தி அணழகன்போய்நடந்தான்
மாலைமுடியானும் மதுரைக்குப்பின்னுரைத்தான்
காடுசெடிதாண்டி கரியமலைதான்தாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
சில்லென்றகாடுஞ் செடியும்வனந்தாண்டி
ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
அங்குமொருபூங்காவைக் கண்டுமந்தவாணழகன்
ஆச்சாவுந்தேக்கும் அழலேலங்கும்பாதரியும்
சண்பகமுல்லைகளும் சேர்ந்ததொருபாதிரியும்
பாதரிமுல்லைப் பருத்ததொருசண்பகமும்
சிறுமல்லிருடமல்லி சேர்ந்ததொருசண்பகமும்
மல்லிகைமுல்லை மருக்கொழுந்துசண்பகமும்
இத்தனையும்பூரித்து சொரியும்அழகாக
மரத்தில்புறுவும் மயிலும்விளையாடும்
கோவில்புறுவும் குயிலும்விளையாடும்
அன்னமுந்தாராவும் அசைந்துநிழல்காட்டும்
சாரையும்சர்ப்பமும் சறமேறியிழைந்துவிடும்
புலியும்பசுவும் ஒருதுறையில்நீர்குடிக்கும்
போரஞ்சாமன்னர் புனந்திரரும்தான்பார்த்து
யாருடையகாவிதென்றான் அல்லித்திருமகளும்
அங்கிருந்ததூதுவர்கள் ஆணழகர்க்கேதுசொல்வார்
தக்கப்புகழுடைய தருமருடபூங்காவு

தருமர் பூங்காவு இந்திரன் காணுகிறது.

பருவமதயானை பஞ்வர்களைவாது
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆளுகிறபூங்காவு
போரஞ்சாமன்னன் புனந்திரருந்தான்பார்த்து
இப்பெரியகாவும் எழில்பெரியயாதினரும்

சொற்பெரியகாவும் தோள்பெரியமண்டபமும்
இத்தனையுமிங்கிருக்க என்போனீர்பஞ்சவர்கள்
மண்டபங்களிங்கிருக்க மன்னவர்கள்காடுறைத்தார்
ஏனதுமனங்கலங்கி எங்கிமனந்தளர்ந்து
சிந்தித்துமன்னன் இருக்கண்ணில்முத்துதிர்ந்தான்
பொன்னுமலைநாடாளும் அண்ணாவுமேதுசொல்வார்
என்காணுமன்னன் இந்தமதிவுந்தனுக்கு
வந்தகருமம் முடியுங்காண்மன்னவனே
என்றுமனந்தேறி யிருக்கின்றவேளையிலே
போரஞ்சாமன்னன் புனந்திரருமேதுசொல்வார்
யானைவிட்டுக்கீழிறங்கி ஆனந்தவாழ்மார்பன்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனங்கள்விட்டிறங்கி
இன்றைக்குமத்தியானம் இங்கேவிடும்என்றார்
பொன்னினாற்கூடாரம் போட்டார்புனந்திரரும்
வண்ணவண்ணக்கூடாரம் மன்னவர்க்கும்போட்டார்கள்
ஆசனங்கள்போட்டார்கள் வந்தவந்தமன்னவர்க்கு
ஆசனத்தின்மேலேறி ஆணழகன்வீற்றிருந்தான்
மட்டார்புலவர் பதினெட்டுமந்திரிகள்
சட்டக்கொலுவிருந்தார் கொற்றம்புவீரியர்கள்
சரியாய்க்கொலுவிருந்தார் தன்னொத்தராசாக்கள்
பட்டப்புலவர்கள் பாடத்தொடங்கினார்
தருமர்வளம்பாடித் தம்பிமார்சீர்பாடி
வீமர்வளம்பாடி விசயனார்சீர்பாடி
காண்டாவனமெரித்த காளைபுகழ்பாடி
காமன்முடியான் நகுலனுபோர்முடியான்
தாமன் முடியான் சகாதேவன்சீர்பாடி
போரஞ்சாமன்னன் புலந்திரனார்பேர்பாடி
வந்தபேர்களின்மேல் பாடினார்மன்னவர்கள்
அப்போதுயிந்திரனார் ஆணழகன்தான்பார்த்து
பட்டப்புலவர் பாடினபேருக்கும்
ஆடையும்பொன்னும் அளித்துஅலைதாரான்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனங்களேறுமென்றார்
படிபடியென்றான் படித்ததுஅவ்வானை
முகக்கம்பந்தட்டி முதுகின்மேலேகாலைவைத்து
மத்தகத்தைத்தட்டி மதயானையின்மேல்ஏறினான்
அம்மானும்தானும் அழகானையேறினான்
மாதாவுந்தானும் மதவானையேறினார்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகம்சென்றேறினார்
அக்காவும்மகாவும் நடந்தாரழகாக
மற்றுமொருபூங்காவும் வாரார்கள்மன்னவர்கள்

அங்காவந்தன்புதுமை ஆணழகன்கண்டானே

திரியோதிரன் பூங்காவை புனந்திரன் கண்டழிக்கிறது.

ஆச்சாவந்தேக்கும் அனலோங்கும்பாதரியும்
பாதிறிமுல்லைப் பருத்தயிருவாட்சி
இருவாட்சிசண்பகமு மிருபுருமுங்கஸ்தூரி
மல்லிகைமுல்லை மரிக்கொழுந்துமிருவாட்சி
சண்பகமும்முல்லைகளாம் சேர்ந்தயிருவாட்சி
எங்குந்நிறைந்திருக்கும் இருவாட்சிசம்பகமும்
மருவும்மருக்கொழுந்தும் வனமெல்லாம்பூர்த்திருக்கும்
வேம்பும்அரசுமங்கே விஸ்தாரம்பூர்த்திருக்கும்
போரஞ்சாமன்னர் புனந்திரன் தான்பார்த்து
ஆருதுபூங்காவென்றார் அல்லித்திருமகனும்
அங்கிருக்குமன்னர் அரையர்துணைகளெல்லாம்
கேட்டபுனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாதே
நின்றபுனந்திரற்கு நீதிசொல்லமாட்டாதே
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்கும்பூமுடியாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்காவிதென்றான்
உங்கள்பெரியப்பாபூங்காவு யென்றார்கள்மன்னவர்கள்
ஐயருடகாவிதன்ன ஆணழகன்கேட்டு
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்குபூமுடியார்
பச்சைமுகங்கருவி பால்முகம்வேறுபட்டு
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
சித்துடன்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
யானைவிட்டுக்கீழ்பிரங்கி யானந்தவாழ்மார்பன்
பூமரத்தைசார்ந்துக்கொண்டு நின்றார்புனந்திரரும்
அங்கிருக்குந்தூதுவரை ஆணழகன்தானழைத்து
ஆச்சாவந்தேக்கும் அழலோங்கும்பாதரியும்
வேம்பரசுமெங்கே வெட்டிப்போராக்குமென்றார்
பூமரத்தைவேர்பிடுங்கி போடுமென்றார்ஓர்புரமாய்
மாமரத்தைவேர்பிடுங்கி மரத்தோடேசாடுமென்றார்
அப்போதுதூதுவர் ஆணழகர்தானெழுந்து
அவ்வளவுபோதுமென்று ஆணழகர்தூதரெல்லாம்
வேம்புமரமங்கேவெட்டிப்போரிட்டார்கள்
பூமரத்தைவேர்பிடுங்கி சாடினார்புண்ணியர்கள்
மாமரத்தைவேர்பிடுங்கி மடித்தார்ஒருபுரமாய்
பத்துபனைமரத்தை யொன்றாய்பிடுங்கிடுவார்
எட்டுபனைமரத்தை யிருதுண்டாய்போட்டிடுவார்
தென்னமரங்களெல்லாந் திரிகியெறிந்திடுவார்
இப்படியாக அழித்தார்வனங்களெல்லாம்

போரஞ்சாமன்னர் புனந்திராருந்தான் பார்த்து
போரஞ்சாமன்னர் புனந்திராருமேதுசொல்வார்
தேனல்லோதாரன் திரையெடுத்துதான்புரந்து
சாயாம்புமேனியனுஞ் சாத்திரங்கள் தான்பார்த்து
மேகமலைபோல மெள்ளநடந்தசைந்து
பணிபணியென்றான் பணிந்தது அவ்வானை
முதக்கம்பம்தட்டி மதவானையேறினார்
மத்தகத்தைதட்டி மதவானையேறினார்
அம்மானும்தானும் அழகானையேற்றார்
மாமாவுந்தானும் மதவானையேறினார்
அந்தவந்தபேர்களெல்லாம் மதவானையேறினார்
வக்காவுங்காவும் நடந்தாரழகாக

கர்னன் பூங்காவை இந்திரன் கண்டழிக்கிறது.

மற்றுமொருபூங்காவும் வாரார்கள்மன்னவர்கள்
அந்தவொருபூங்காவும் அதிசயத்தைப்பார்த்தார்கள்
சந்தனவிருட்சங்களும் சாலைகளும்சோலைகளும்
தேவதாரிவிமலையும் திகழாகசோலைகளும்
எங்கெங்கும்சோலைகளும் எத்திசையும்சோலைகளும்
மாடப்புறாவும் மயிலும்விளையாடும்
கோயில்புறாவும் குயிலும்விளையாடும்
அன்னமுந்தாராவும் அசைந்துவிளையாடும்
சாரைபுஞ்சர்ப்பமும் சற்றேநெளிந்துவிடும்
புலியும்பசுவும் ஒருதுறைவில்நீர்குடிக்கும்
காஞ்சிநாடாளும் கருணாரிடமாளிகையும்
வில்பிடித்துலாவுகிற வேந்தனதுமண்டபமும்
சனியெண்ணையாடுகிற சமர்த்தனதுமண்டபமும்
தாமமுடியான் சதுரங்கமண்டபமும்
சுந்தரப்பூமுடியான் சொக்கட்டான்மண்டபமும்
அத்தனைபுங்கண்டானே ஆணைந்தவாழ்மார்பன்
ஆறுதுபூங்காவென்றான் அல்லித்திருமகனும்
அங்கிருக்குமன்னவர்கள் அரையர்துரைகளெல்லாம்
கேட்டபுனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாமல்
நின்றபுனந்திரற்கு நீதிசொல்லமாட்டாமல்
நெஞ்சுலர்ந்துநாவரண்டு பச்சைமுகங்கருவிப்
பச்சைமுகங்கருவிப் பால்முகம்வேறுபட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
காஞ்சிநாடாளும் கருணருடகாவிதென்றார்
போரஞ்சாமன்னர் புனந்திராருந்தான் கேட்டு

வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண் டேறி
சித்தூடன்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
பிள்ளையைக்கொன்றபெரும்பாவிதுகாண்
மைந்தனைக்கொன்ற மாபாவிபூங்காவோ
வேறுவழியில்லையோ வேந்தர்பெருமானே
மற்றும்வழியில்லையோ மைந்தர்பெருமானே
அயிராவதம்போல் யானையைத்தானழைத்து
இடித்துநகத்தி யெமபுரம்சேருமென்றார்
மதிலைச்சுவரிடிகள் மண்டபங்கள்தானிடித்து
ஆலயங்கள்கோபுரங்கள் அடங்கலுந்தானிடித்து
அரைநாழிக்குள்ளே அதம்பண்ணிவாருமென்றான்
யானையதுகேட்டு யப்படிக்கேநல்லதென்று
வெங்கண்சிவந்து வெளிவால்மிருமுருக்கி
கொம்பைபகைத்தி குளம்பால்நிகங்கிறி
தும்பிக்கையாலே சுழன்றிடும்மவ்வானை
மதிலேமதிலிடித்த மண்டபத்தைவேர்பிடுங்கி
கோபுரஞ்சிகாரங்களைக் குத்திகிளப்பிவிடும்
இடுத்திமேநத்தி யெமபுரஞ்சேர்த்துவிடும்
குத்திக்கிளப்பியது கோளாறும்பண்ணிவிடும்
இந்திரனார்தன்னருகில் வந்ததுஅவ்வானை
பணிபண்ணியென்றான் பணிந்ததுஅவ்வானை
முழக்கம்பந்தட்டி முதுகின்மேல்சாலைவைத்து
மத்தகந்தட்டி மதயானையேறினார்
அம்மானுந்தானும் அழகானையேறினார்
மாமாவுந்தானும் மதயானையேறினார்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறினார்
ஏறினபோதே யெடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடைகவிய முடிமன்னர்தோசய
பவளக்குடைகவிய பார்மன்னர்தேர்நடக்க
ரத்தினக்குடைகவிய ராசாக்கள்தேர்நடக்க
வக்காவுங்காவும் நடந்தாரழகாக
இஞ்சிவனந்தாண்டி யெலுமிச்சந்தோப்புவிட்டு
மஞ்சள்வனந்தாண்டி மாதளம்பூசோலைவிட்டு
ஓங்கிவளர்ந்தநெடு மூங்கில்வனந்தாண்டி
எல்லையிளந்தோப்பு தாண்டியிளவிசையா
அத்திபுரத்தைவந்து சேர்ந்தார்கள் ஆணழகர்
இதுயாருடையவீதியென்றான் அல்லிதிருமகனும்
அங்கிருக்குமன்னவர் அரையர்துரைகளெல்லாம்
தாமமுடியான் தைலாட்டான்வீதியென்றார்

## புனந்திரன் திருதாட்டிரன் வீதிவருகுதல்.

உன்னையில்லான்வீதியென்று காவலர்கள்சொன்னார்கள்
குருடனுடவீதியென்றார் கொற்றம்பூதாதுவர்கள்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
ஊதினார்சின்னம் உலகேழுந்தானதிர
ஊதினார்காளை உலகுதனைமுழக்க
செம்பொன்னார்காளை திசைவிளங்கவென்றூதினார்
வெள்ளினார்காளை விளங்கவென்றூதினார்
வையைவளநாட்டான் வந்தேதெனென்றூதினான்
சாழ்மதுரைபாண்டியனார் வந்தேதெனென்றூதினார்
தாமமுடியான் தைலாட்டான்பூமுடியும்
தேசத்தையாளும் திரியோதிரன்பூமுடியும்
நூலாள்சடுத்திரளா நூற்றொருவாபூமுடியும்
காஞ்சிநாடாளும் கருணரிடபூமுடியும்
தங்கைமணவாளன் தருதலையன்பூமுடியும்
சாமத்துரோகி சகுனியிடபூமுடியும்
அம்மான்சகுனி யவனுடபூமுடியும்
அத்தனைபேர்பூமுடியை அறிவேன் அறிவேனென்றான்
தப்பாதுநானறிவேன் என்றுமவனூதினான்
தைலாட்டானென்றுசொல்லி தாரைசின்னமூதினார்
திரியோதினனுக்கென்று கடுங்கெடுத்தூதினான்
ஊதினான்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை உலகேழுந்தானதிர
செம்பொன்னார்காளை திசைபிளக்கவூதினான்
பொன்னினார்காளை பொருந்தநின்றூதினான்
இப்படியாயூதுகிறார் எங்கெங்குமிந்திரனும்
அந்தத்தெருவிருக்கும் அணியிழைமாரெல்லோரும்
ஒருவருக்கொருவரல்லோ வுதமைசொல்லிக்கொல்வார்கள்
பாண்டியர்கள்பேரனாந்தான் பஞ்சவர்கள்புத்திரன்தான்
ஆறுயிரவருக்கும் அழகானபேரமையோ
அல்லியம்மாள்பெற்றெடுத்த அழகுபுனந்திரனார்
மாயன்மருமகன்காண் வளநாடிப்புத்திரன்காண்
இப்படிக்குசொல்லி யிருக்கின்றவேளையிலே
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
அவ்வீதிவீதிநடந்தாரழகாக
மற்றுமொருவீதியிலே நடந்தாரேமன்னவரும்

## புனந்திரன் கர்னன்வீதி காணுகிறது.

அந்தவொருவீதியிலே அதிசயங்கள்மெத்தவுண்டு

மாடப்புறாவும் மயிலும்விளையாடும்
கோவில்புறாவும் குயிலும்விளையாடும்
எங்குமணிவிளக்கும் காத்திகையும்விளக்கும்
மாவிலைதோரணமும் மகுடகல்லதோரணமும்
அந்தநெடுவீதிதன்னை கண்டானேதுணைமுகன்
ஆருடைவீதியென்றான் அல்லிதிருமகனும்
அங்கிருக்குமன்னர் அரையர்அனைவரெல்லாம்
கேட்டபுனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாதே
நின்றபுனந்திரற்கு நீதிசொல்லமாட்டாதே
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நிக்கிலங்கும்பூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வெளுபட்டு
காஞ்சிநாடாளுங் கருணரிடவீதியென்றான்
போரஞ்சாமன்னன் புனந்திரனுந்தான்கேட்டு
கருணரிடவீதியென்ன கண்களுமிகச்சிவந்து
சித்துடன்புவேர்த்து சிறுகண்சிவப்பேரி
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேரி
பிள்ளையைக்கொன்ற பெரும்பாவிதன்தெருவோ
மைந்தனைக்கொன்ற மாபாவிதன்தெருவோ
வேறுவழியில்லையோ வேந்தர்பெருமானே

கர்ணனை இந்திரன் கொல்வேனென்று சபதமிட்டது.

மற்றுவழியில்லையோ மன்னர்பெருமானே
காஞ்சிநாடாளும் கர்ணனார்பூமுடியை
சாமத்துக்குள்ளேதாங் கொல்வேனென்றுசொல்லி
ஊதினார்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை உலகுதலைதுமுக்க
செம்பொன்னார்காளை திசைவணங்கஊதினார்
இப்படிக்காக யிவனிருக்கும்வேளையிலே

பொன்னுருவிக்கு தாதிசொல்லுகிறது.

போதேவருந்தடங்கும் பொன்னுருகிதாதியவள்
போதேவருந்தடங்கு பொன்னுருவிமுன்னேவந்து
அடிகள்முடிசாய்த்து ஆரணங்களதுசொல்வாள்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னாச்சிநீகேளும் இன்னமொருவார்த்தை
பார்த்தால்பிராயம் பதினாறுங்காணவில்லை
எண்ணைப்பிராயம் இருபதுங்காணவில்லை
துடிக்கின்றமீசையுஞ் சூரைக்கருங்குழலும்

சேர்க்கைக்கெதிராக யாத்தனிரோசூரியனே
தக்கப்புகழுடைய தருமரிடமேனியுமாய்
வெற்றிமதயானை வீமருடகால்நடையும்
காண்டாவனமெரித்த காளையுடகைவீச்சும்
நாமமுடையான் நகுலனிடையழகும்
தாமமுடையான் சகாதேவன்பேரழகும்
காஞ்சிநாடாளும் கருணநக்கொப்பிடலாம்
காஞ்சிநாடாளுங் கருணனென்றேசொல்லிடலாம்
காஞ்சிநாடாளும் கருணனுடையபூமுடியை
சாமத்துக்குள்ளே தாங்கொள்வேனென்றுசொல்லி
ஊதினன்சின்னம் உலகேழுலகதிர
ஊதினன்சின்னத்தொனி கேட்டுவந்ததேனென்றாள்
போதவருக்கடங்கும் பொன்னுருவித்தான்கேட்டு
சிந்தைகலங்கி திகைக்கட்டுப்பெய்பதைத்து
மாதுமனஞ்சலித்து மண்டபஞ்சென்றேறினாள்
ஏழாநிலையும் ஏழுநிலைமேலேறி

பொன்னுருவி உப்பரிகை யேறிப்பார்க்கிறது.

மேலாக்கனத்தில் விடுகதவைத்தான் திறந்து
பலகணிவாசல் திறந்தந்தபைங்கிளியும்
பவளப்படிமிதித்து பார்க்கலுற்றாள் பத்தினியும்
தாசிப்படியேறிக் கட்டழகிதான்பார்த்து
அரையில்சொருகழகும் ஐம்பொன்னார்சிராவும்
கத்திச்சொருகழகுங் கச்சிகட்டிஉள்மறைக்கும்
கச்சிகட்டிஉள்மறைக்கும் கனிவாயுங்கண்மலரும்
தக்கப்புகழுடைய தருமருடமேனியுமாய்
வெற்றிமதயானை வீமருடகால்நடையும்
காண்டாவனமெரித்த காளையுடகைவீச்சும்
நாமமுடையான் நகுலனிடையழகும்
தாமமுடையான் சகாதேவன்பேரழகும்
காஞ்சிநாடாளும் கருணனென்றேசொல்லிடலாம்
காசிநாடாளுங் கருணனிடபூமுடியை
சாமத்துக்குள்ளே தாங்கொள்வேனென்றுசொல்லி
ஊதினன்சின்னத்தொனி யேதுநானறியேன்
நாலுமுரசுண்டாமோடா நாயகனேவுங்களுக்கு
முடிச்சோடேமங்கிலியம் கட்டவிதித்திருந்தேன்
இழிகுலத்தானென்றுசொல்லி எண்ணியேநானிருந்தேன்
தேர்ப்பாகனென்றுசொல்லித் தீண்டாமல்நானிருந்தேன்
ஜாதிகெட்டானென்றுசொல்லித் தீண்டாமல்நானிருந்தேன்

தாலிகயற்றுக்குத் தாவுவரநாளாச்சோ
மங்கிலியமற்றுவிழ நாளாச்சோமன்னவனே
பாஞ்சாலிபட்டுறியப் பஞ்சவர்கள்காடுறைய
பஞ்சவர்கள்காடுறைய பாழுந்சிறையிருக்க
மன்னவர்கள்காடுறைய மாதுசிறையிருக்க
ஐவருங்காடுறைச நாங்கள்சிறையிருக்க
நாங்கள்சிறையிருக்க நாளாச்சுமன்னவனே
என்றுமனங்கலங்கி யேங்கிமனந்தளர்ந்தாள்
மோதிரக்கையை முகத்திலறைந்துகொண்டாள்
அடித்துப்பிரண்டழுதாள் ஆனந்தவாழ்மாரி
அகுமொருதாதி அறிவுடையாளோடிவந்து
பூரணதிரேகத்தைப் புழுதிபடதுடைத்து
பட்டுத்துயிலாடைத் தொட்டுமிகவுடுத்தி
வந்துவிழுங்கண்ணீரை வெண்துயிலால்துடைத்து
தேசத்தையாளுந் திரியோதிரற்குசொல்வேன்
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சியமே ஆறிவிடும்
தேறிவிடும்தேறிவிடும் திருவினையேதேறிவிடும்
என்றுமிகத்தேத்தி யெடுத்திருந்தாள்தாதியவர்
பட்டெடுத்துக்கட்டி பலதிரியர்தங்களைப்போல்
ஒட்டெடுத்துக்கட்டியங்கே ஓடிவாரால்தாதியவள்
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தேசத்தையாளுகிற திரியோதிரன் மாளிவந்தாள்
மாநகரமாளும் மகாராசனம்பலத்தில்

தாதி திரியோதிரன் அம்பலங்காணுகிறது.

தாமமுடியான் தையலாட்டானருகிருந்தான்
நூலால்கடுந்திரலார் நூற்றொருவரங்கிருந்தார்
காஞ்சிநாடாளுங் கருணருமங்கிருந்தார்
தங்கைமணவாளன் தறுதலையங்கிருந்தான்
சாமத்துரோகி சகுனியுமங்கிருந்தான்
அத்தனையுநீக்கி நடந்தாள்அவள்தாதி
தேசத்தையாளுந் திரியோதிரன்முன்னேவந்தார்
தேசத்தையாளுந் திரியோதிரனுக்கு
சிம்மாதனத்துக்கு முன்பாகக்கண்டனிட்டாள்

தெண்டனிட்டதாதி திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்தான்பார்த்து
பார்பெண்ணே தாதி அறியவுரையுமென்றான்
ஆர்பணியுமல்ல அடியேன் திருப்பணிதான்
பேர்பெற்றுடைய பெருமானுடன்பணிதான்
இருவர்பணியுமல்ல உம்முடையநற்பணிதான்
பொதுவருந்தடங்கும் பொன்னுருவிதாதியென்றாள்
நீயிங்கேவந்த தெனக்கரியகூறுமென்றான்
பார்த்தால்பிராயம் பதினாறுந்தோன்றவில்லை
கண்டாற்பிராயம் இருபதுந்தோன்றவில்லை
துடிக்கின்றமீசையுந் தூரக்கழுங்குறலும்
சோலைமேலேமேலே தோற்றுகின்றசூரியனும்
அலரில்சொருகமுகன் ஐம்பொன்னுற்சிரவும்
கத்திச்சொருகழகும் கத்திகட்டிவுள்மருங்கும்
கச்சைகட்டிவுள்மருங்குங் கனிவாயுங்கண்மலரும்
தக்கப்புகழுடைய தருமருடமேனியுமாய்
வெற்றிமதயானை விமரிடகால்நடையும்
காண்டாவனமெரித்த காளையுடகைவீச்சும்
நாமமுடையான் நகுலனிடையழகும்
தாமமுடியான் சகாதேவன்போழகும்
காஞ்சிநாடாளும் கருணருக்குமொப்பிடலாம்
காஞ்சிநாடாளும் கருணரிடபூமுடியை
சாமத்துக்குள்ளே தாங்கொல்வேனென்றுசொல்லி
ஊதினன்சின்னம் உலகேழுந்தானதிர
ஊதினன்சின்னத் தொனிகேட்டாளந்தரியும்
பொதுவருந்தடங்கும் பொன்னுருவிதான்கேட்டு
மாலைமுடியாளும் மண்மேல்விழுந்தழுதாள்
ஆனந்தமாரி அடித்துப்புரண்டழுதாள்
அந்தவிசேஷமது சொல்லவந்தேனென்றாள்
தேசத்தையாளும் திரியோதிரன்கேட்டு

திரியோதிரன் கருணனைவிட்டு புனந்திரனைக்
கொல்லச் சொல்லுகிறது.

செண்டாயுமன்னன் திரியோதிரன்கேட்டு
கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
சுட்டருந்தநாகங் கொடிபோலேகண்சிவந்து
நற்பிற்புருவம் நெருப்பாயனல்பறந்து

காஞ்சிநாடாளுங் கருணர்முகம்நோக்கி
காஞ்சிவளநாடாளுங் கருணருக்குரைதுசொல்வான்
வைகைவளநாடான் வந்தாலும்அத்திபுரம்
காளையவன்பெற்றெடுத்த கடுங்காளைவந்தாலும்
சந்தனத்தோப்பிலே தார்வேந்தன்போய்புகுந்து
வேம்பும்அரசுமங்கே வெட்டிப்போரிட்டாலும்
உந்தன்தலையறுக்க வந்தாலும்இந்திரனும்
பையன்தலையறுக்க பாரமில்லைஉந்தனுக்கு
நீபோய்தலையறுத்து வாருமென்றுளிப்போதே

திரியனுக்கு கர்னன் பதில் கூறுவது.

காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்குசூமுடியான்
பச்சைமுகங்கருகி பாலமுகம்வேறுபட்டு
மன்னன்மனஞ்சலித்து வார்த்தைகள்ஏதுசொல்வான்
சொல்மாத்திசொல்லுரைப்பான் திரியன்முகங்கோணுமல்
பேரப்பாரப்பா பெரியப்பாருங்களைத்தான்
காணவருகிறான் நின்றறியுங்காவலனே
பார்க்கவருகிறான் பார்த்தறியுங்காவலனே
மாமியார்வீட்டுக்கு வருகிறான்பாண்டியனும்
மச்சினியாள்மாளிகைக்கு வருகிறானென்றறியும்
பிள்ளையைப்பார்க்க வருகிறான்மன்னவனும்
மைந்தனைப்பார்க்க வருகிறான்மன்னவனும்
பிள்ளையைநீயனுப்பி பேச்சையறியுமென்றான்

புனந்திரரைக்காண சின்ன அர்ச்சுனனை யனுப்பும்படி
கர்னன் திரியனுக்குரைப்பது.

மைந்தரைநீயனுப்பி வார்த்தையறியுமென்றான்
தேசத்தையாளும் திரியோதிரன்கேட்டு
நல்லதென்றுசம்மதித்தான் நாமமுடையானும்
அங்கிருக்குந்தூதுவரை யானழகன்தானழைத்து
தோகைமயிலனையாள் துற்சடையாள்மாளிசென்று
ஐந்துவயதுடைய அர்ச்சுனரைநீர்பார்த்து
அரைநாழிபோதே யழைத்தோடிவாருமென்றான்
தூதுவனும்தான்கேட்டு தொழுதிறங்கிதண்டனிட்டு
சொல்லப்பெற்றேறுமென்றுசொல்லி சுருக்காயெழுந்திருந்து

கூறப்பெற்றேனென்றுசொல்லி கும்பிட்டெழுந்திருந்து

தூதர் துற்சடையாள் அரண்மனைக்குப் போகிறது

அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி வீதிபலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தோகைமயிலனையாள் துற்சடையாள்வீற்றிருக்கும்
சிம்மாதனந்தருகே சேரவந்தான்தூதுவனும்
செம்பொன்முடிசாய்ந்து சேரவந்துதெண்டனிட்டான்
ஐம்பொன்முடிவணங்கி அருகில்வந்துதெண்டனிட்டான்
தெண்டனிட்டதூதன் திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதான்
ஆருடையதூதுவாநீ யறியவுரையுமென்றாள்
தேசத்தையாளுந் திரியோதிரன் தூதனென்றான்
நீயிங்கேவந்த தெனக்கறியகூறுமென்றாள்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசாவை
தேசத்தையாளுந் திரியோதிரபெருமான்
அரைநாழிப்போதே அழைத்தோடிவாருமென்றார்
ஆகையினாலே அழைக்கவந்தேனென்றுசொன்னான்
தோகைமயிலனையாள் துற்சடையாள்தான்கேட்டு
ஆளும்பழுகுமன்னன் அர்ச்சுனராசதுரை
அருச்சுனனுநான்பெறடுத்த அழகுபுனந்திரனார்
புனந்திரனைப்பெற்றெடுத்த பூபாலருச்சுனனும்
சித்திரவில்போனவன் சின்னஅருச்சுனனும்
அஞ்சுவயதுடைய அருச்சுனராசதுரை.
தெனல்லோதாரன் வேட்டைக்குப்போனான்காண்
அங்கேசென்று அழைத்தோடிவாருமென்றார்

சின்ன அருச்சுனனை வேட்டையில் தூதர்காணுகிறது.

தூதுவனுந்தான்கேட்டு தொழுதிரங்கிதெண்டனிட்டு
அருளருளுபென்னுச்சி யப்படிக்கேயாகுதென்று
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
பாலனவன்போயிருக்கும் வனம்நோக்கிப்போகலுற்றான்
அருச்சுனனார்போயிருக்கும் அந்தவனம்நோக்கி

வனமாய்வனந்தாண்டி வாரானே தூதுவனும்
அங்கேஅருச்சுனனார் ஆணழகர்னதுசெய்தார்
அஞ்சுவயதுடைய அருச்சுனவீரியனும்
காட்டானைசிங்கங் கரடிபுலிகுத்திடுவான்
செந்நாய்புலிகரடி சேனைவேட்டையாடிடுவான்
காட்டானைசிங்கங் கரடிபுலியாளிகளை
கொன்றுஉருவாக்கி கொற்றவ்வீரியனும்
காவடிதன்னுடனே கழுகண்டந்தேளேந்தி
செந்நாய்சூழ்ந்துவர சேவகர்கள்முன்னடக்க
கருநாய்சூழ்ந்துவரக் காவலர்கள்பின்நடக்க
நடந்தாரருச்சுனரும் நாலுதிக்குந்தானதிர
அசைந்துநடந்துவர ஆணழகர்கண்டார்கள்
அழைக்கவந்ததூதுவர்கள் கண்டார்களாணழகர்

அருச்சுனனை தூதர்கண்டது.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனரைதான்பார்த்து
அருச்சுனரைத்தான்பார்த்து ஆணழகரேதுசொல்வார்
அரையில்சொருகழகும் ஐம்பொன்னார்சீரழகும்
கத்திச்சொருகழகும் கத்திகட்டிஉள்மருங்கும்
கச்சைகட்டுஉள்மருங்குங் கனிவாயுங்கண்மலரும்
தக்கப்புகழுடைய தருமருடமேனிகளும்
வெற்றிமதயானை வீமருடகால்நடையும்
காண்டாவனமெரித்த காளையுடகைவீச்சும்
நர்மமுடியான் நகுலனிடையழகும்
தாமமுடியான் சகாதேவனமேபொளியும்
காஞ்சிநாடாளுங் கர்னன் திரிமுடியும்
போரஞ்சாமன்னர் புனந்திரனார்வீரியனே
இவர்களழகையெல்லாம் பெற்றுவந்தான்புண்ணியனும்
ஒருமிக்கப்பெற்றுவந்தான் உத்தமனார்வீரியனும்
இப்படியாய்சொல்லி நெருங்கிவழிநடந்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனர்க்குமுன்னேவந்து
அர்ச்சுனராசருக்கு அடிவணங்கிதெண்டனிட்டான்

அருச்சுனன் தூதுவரையாரென்று விசாரிக்கிறது.

தெண்டனிட்ட தூதுவனைக் கண்டந்தஅர்ச்சுனனும்
யார்வந்தார் தூதா அறியவுரையுமென்றன்
கோனுதமாதவத்துக் குந்தியம்மாள் தூதுவனே

ரெட்டிப்புசம்பளம் நானே தருகிறேன் காண்
அஞ்சாதீர் அஞ்சாதீர் ஆணழகர் வீரியரே
எதுக்கும் அஞ்சாதீர் என்பிறகே வாருமென்றார்

சின்ன அருச்சுனன் தகப்பனைக்காண வருகிறது.

பச்சைமலையைப் பனிவந்துசூழ்ந்தாற்போல்
பாலகனுமங்கே பதறிவழிநடந்தார்
தோட்டந்திறந்தானே தொன்னைதைத்துப்பூவெடுத்தான்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பன்னீருங்கைகொண்டு பதறிவழிநடந்தான்
காடுமலைதாண்டி கரியமலைதாண்டி
ஆறுசுனைதாண்டி அதிகவனந்தாண்டி
ஓங்கிவளர்ந்த மூங்கில்வனந்தாண்டி
அத்திபுரந்தேடி அடுத்துநடந்தானே
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
நூலால்கடுந்திரளார் நூற்றொருவர் அம்பலத்தில்

சின்ன அருச்சுனன் இந்திரனைக்காணாமல் புஷ்பத்தை
காலில் சொரிந்துகொள்ளுகிறது.

அம்பலத்துவாசல் அடுத்துவந்தார் அருச்சுனனும்
எங்கெங்கும்பார்த்தான் இனியவிடமாராய்ந்தான்
சுத்திவந்துபார்த்தானே சுந்திரரைக்காணவில்லை
எங்கெங்கும்பார்த்தானே இந்திரரைக்காணவில்லை
ஐயர்வந்தாரென்று அழைத்தீரே ஆணழகா
என்தந்தைவந்தாரென்று என்னையழைத்தீர்களே
என்தந்தையைக்காணேனே தார்வேந்தர்சபைநடுவே
ஐயரைக்காணேனே அரசர்சபைநடுவே
கொண்டுவந்தபூமலரை என்செய்வேன்கொற்றவனே
ஆர்பாதம்போட்டுத் தொழுவேனான் ஆணழகா
என்றுமவருரைத்து ஏதுசொல்வார் அர்ச்சுனரும்
தன்னிரண்டுபாதமதில் தார்வேந்தர்பூச்சொரிந்து
கொண்டுவந்தபூமலரை கொட்டிக்கொண்டான் தன்பாதம்
நான்கும்மிட்டுக்கொண்டேன் நீகூறிட்டுக்கொள்ளுமென்றான்
அங்கிருக்குமன்னர் அரையர்துரையரெல்லாம்
தொப்பையசைந்திடவே தொந்திசரிந்திடவே
கைதட்டித்தானகைத்தார் கட்டழகரெல்லோரும்

ஆய்யர்குலத்திலே நூசோணவர்பார்த்து
அங்காசிதொப்பை யாசைமருங்கசைய
உடம்புகுலுங்கிடவே உத்தமனுதானகைத்தாள்

திரியோதிரன் அருச்சனனைக் கொல்லச்சொன்னது.

தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
கட்டழுந்தநாகம் கொடிபோலக்கண்சிவந்து
காந்திநாடாளுங் கருணர்முகம்நோக்கி
காசிவளநாடாளுங் கருணருக்குநேயதுசொல்வான்
தூதுரைக்கவந்தகொரு சுந்தரனார்பூமுடியை
அஞ்சுவயதுடைய அருச்சுனனார்பூமுடியை
இருவர்தலையறுத்து என்பாதத்தில்வையுமென்றான்

கருணர் திரியோதிரனுக்கு தேறுதல்சொல்லுகிறது.

காசிவளநாடாளுங் கருணரவர்கேட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
நெஞ்சுலர்ந்துநாவரண்டு சித்திலங்குபூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேவுபட்டு
மன்னன்மனஞ்சலித்து மறுவார்த்தையெடுத்துரைப்பார்
சொல்மாற்றிசொல்லுரைப்பான் திரியன்முகங்கோணாமல்
அரியாதரியுமோ ஆனந்தவாழ்மார்பா
இதற்குள்பாரப்புத்தி எங்கேகற்றானருச்சனுக்கு
நல்லதனத்தாலே கேளுமென்றான்மன்னவனும்
இன்னமொருவார்த்தை இளவரசேகேளுமென்றான்

திரியன் அர்ச்சுனனை மடியில்வைத்துக்கொண்டு கேட்கிறது.

அப்போதிரியோதிரன் ஆணழகன்தான்கேட்டு
அஞ்சுவயதுடைய அர்ச்சுனனைத்தானழைத்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
உச்சிமுகந்துமவன் உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கம்தடவி பவளவாய்முத்தமிட்டு
அஞ்சுவயதுடைய அர்ச்சுனனேநீர்கேளும்
அர்ச்சுனனார்புத்திரனும் வந்தானும்ஆணழகன்
அல்லித்திருமகனும் வந்தானும்ஆணழகன்
வையவளநாட்டான் வந்தானும்உன்தகப்பன்
சந்தனத்தோப்புதனில் தார்வேந்தன்போய்புகுந்து
வேம்புமாசுமங்கே வெட்டிப்போரிட்டானும்

உன் ஆச்சிகலந்தாரி ஆணந்தவாழ்மாரி
அவளைவைத்துசிறைகாப்பேன் வையகமும்நான்கொடுப்பேன்
தேசமுழுதும் இருந்தரசாண்டிடுவாய்
வையகமுழுதும் இருந்தரசாண்டிடுவாய்
மையைவளநாட்டான் வந்தானே உன்தகப்பன்
ஐயன்தலையறுக்க பாரமில்லையெந்தனுக்கு
உங்கள் ஐயர்தலையறுத்து வாருமென்றான் ஆணழகன்
ஐயன்தலையறுத்துப் பாதத்திலேவையுமென்றான்

திரியவுரைக்கு அர்ச்சுனன் கோபித்துச்சொல்லுகிறது.

அந்தவயதுடைய அர்ச்சுனருந்தான்கேட்டு
சித்துடம்புவேர்த்து சிறகன்றிவெப்பேறி
உன்னுடம்புநடுங்கி யுடம்புபடபடத்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனலாடி
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலையுமாய்
அக்கினிமண்டபத்தை அடித்ததுஇவன்கோபம்
மனமடங்காக்கோபமுடன் மடியைவிட்டுக்கீழிறங்கித்து
மடியைவிட்டுக்கீழிறங்கி மன்னவனுமேதுசொல்வான்
இந்தசபைநடுவே இருக்கின்றராஜர்களே
மன்னர்சபைநடுவே வீற்றிருக்கும்மன்னவர்களே
குருக்கள்மாத்துரோணரே கூறுகிறேன்கேட்டிருங்கள்
பாட்டன்மாபீஸ்மரே பாலுரைகேட்டிருங்கள்
காஞ்சிநாடாளும் கர்ணரேநீர்கேளும்
என்னாச்சிகலந்தாரி ஆணந்தவாழ்மாரி
அவளைவைத்துசிறைகாப்பான் வையகமுந்தான்கொடுப்பான்
இருத்திசிறைகாப்பா னிவ்வுலகந்தான்கொடுப்பான்
வையமுழுதும்நான் இருந்தரசு ஆண்டிடுவேன்
தேசமுழுதும் சிறப்பாகவாழ்ந்திடுவேன்
என்னாச்சிகலந்தாரி ஆணந்தமாரியற்கு
காஞ்சிநாடாளுங் கர்ணருடகாவலது
ஆழக்குழிதோண்டி ஆகாசங்கோட்டைகட்டி
மேலேகுழிதோண்டி விஷநாகக்கோட்டைகட்டி
எட்டுத்தலைவாசல் இடிமன்னர்காத்திருக்க
பத்துத்தலைவாசல் படைமன்னர்காத்திருக்க
காஞ்சிநாடாளுங் கர்ணரிடகாவல்துள்ள
அப்பெரியகாவலிலே வந்தானே ஆணழகன்
மாதுயிருக்கிற மதிலேறிச்சென்றாரே
ஆச்சியும்அப்பாவும் அக்கணமேதான்கலந்து
அன்றிரவுஅங்கிருந்து ஆணழகர்போய்நடந்தார்.

## திரியன்மேல் கோபிக்கிறது.

பாறுகுளியாகி மைந்தனென்றுனைப்பெற்றாள்
பாருகந்தகொண்டவனே மன்னவனேநான்பிறந்தேன்
ஏரிராகக்கொண்டவனே மித்திரர்குபான்பிறந்தேன்
அன்றுதலையறுத்து ஆண்டுவோராச்சியத்தை
இன்றுதலையறுக்கச் சொன்னீரேமித்திரரும்
இவன்ஆச்சிகலந்தாரி ஆனந்தவாழ்மாரி
நாலாங்குளிகுளித்து நாயிறுதித்தாற்போல்
மூன்றுக்குளிகுளித்தால் முந்தந்தவாழ்மாரி
ஏழுவருஷம் சிறையாயிருந்தார்காண்
இவளைத்தொட்டுதாலிகட்ட எல்லாரும்பயந்து
இவளைத்தொட்டாரேயாமானல் திட்டென்றுமாண்டுவார்
அந்தப்பயத்தாலே யாரும்வந்துகொல்லாமல்
மண்டலத்துராசாக்கள் மாலையிடயாருமில்லை
தேசத்துராசாக்கள் தாலிகட்டயாருமில்லை
இப்படியாக இருந்தாள்சிலகாலம்
அப்பொதொருபார்ப்பான் ஆணழகன்எதுசெய்தான்
ஆட்டுக்கடாவையாலே தாலிகட்டதானமைத்தான்
ஆட்டுக்கடாதாலிகட்ட அந்திகன்னன்பெண்டாள
பெண்டாளுங்காலத்திலே பிள்ளைகளில்லாமல்
பிள்ளைகளில்லாமல் பெருமடைப்போனார்கள்
அப்போபிலாரிஷிபம் அறிந்தார்இவள்துயரம்
துயரமறிந்து சேர்ந்துஉறவாடி
அவரைக்கலந்துஉறவாடிக் காந்தாரிபிள்ளைபெற்றாள்
ஆட்டுக்கடாதாலிகட்ட அந்திகன்னன்பெண்டாள
கருப்புக்கடாதாலிகட்ட கண்ணில்லானபெண்டாள
பிலாத்தொழுவிநூற்றொருவர் பெற்றாளேவுன்னாச்சி
உன்னாச்சிதலையறுத்து ஆண்டுவோராச்சியத்தை
கண்ணில்லான்பிள்ளையென்று கலியுகத்திலேபேராச்சி
குருடனிடபிள்ளையென்று குவலயத்திலேபேராச்சி
பிலாத்தழுவிபெற்றபிள்ளை பேருலகையாளுறீர்
ரிஷிசேர்ந்துபெற்றபிள்ளை இராச்சியத்தையாளுகிறீர்
உன்னாச்சிதலையறுத்து ஆண்டுவோராச்சியத்தை
உன்னூவர்தலையறுக்கச் சொன்னீரேஆணழகர்
என்னூவர்தலையறுக்கச் சொன்னீரேஆணழகர்
எங்களைவர்தலையறுக்க அடாதுகாணங்களுக்கு
என்றுகூறியெழுந்திருந்தான் குந்திகுருமணியும்

அங்கிருக்கும்மன்னர் அரையர்துரையரெல்லாம்
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைநகைத்தார்

திரியன் கோபிக்கிறது.

தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கோபித்துச்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனலன்டி
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலயமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலயமாய்
காஞ்சிநாடாளுங் கர்னர்முகம்நோக்கி
காசிவளநாடாளுங் கர்னர்முகம்நோக்கி
பஞ்சவர்க்குஎன்று பிறக்குமோபாற்குடங்கள்
ஐவர்கள்செய்த அதஷ்டனுன்செய்யவில்லை
தூதுரைக்கவந்ததொரு புத்திரனார்பூமுடியும்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனனார்பூமுடியும்
இருவர்முடியறுத்து என்பாதத்தில்வையுமென்றான்

திரியனுக்கு கர்னர் தேறுதல்சொல்லுகிறது.

காஞ்சிநாடாளுங் கர்னரவர்கேட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்சருகி பால்முகம்வேறுபட்டு
மன்னன்மனஞ்சலித்து வார்த்தையொன்றெடுத்துரைப்பான்
சொல்மாத்திசொல்லுரைப்பான் தோழன்முகங்கோணாமல்
குலத்தில்முடிகேடனுவேணையாகொற்றவனே
மறுத்தொருக்கால்வார்த்தைசொல்ல வாயுண்டோமன்னவனே
பாசத்திலவரையன் படைகூட்டந்தனுடனே
ஆனந்தவாழ்மார்பன் அனுப்பிவிடைகொடென்றான்
தேசத்தழகன் திரியோதிரன்கேட்டு
அஞ்சுவயதுடைய அருச்சுனரைத்தானழைத்து
பாசத்திளவரையர் படைகூட்டந்தனுடனே
ஆனந்தவாழ்மார்பன் அய்யாவைக்கானுமென்றான்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனருமேதுசொல்வார்
உந்தன்விருதுவேண்டாம் உன்மேளபாநதுவேண்டேன்

சின்ன அர்ச்சுனனுக்குப் பாட்டன் சேனையனுப்புகிறது.

அரவக்கொடிவேண்டேன் ஆள்வேண்டேன் ஊர்வேண்டேன்
ஐவரிடவிருது அடைவாகநீர்கொடுத்து.

விடைகொடுத்துநீயனுப்பும் வேந்தர்பெருமாளே
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
காஞ்சிநாடாளுங் கர்னருக்கேதுசொல்வார்
ஐவருடசேனைகளும் அவர்படையானைகளும்
கால்விலங்குபோட்டோமே காவலிலேவைத்தோமே
இணைவிலங்கைகநீகழட்டி யிவனுக்கனுப்புமென்றான்
காஞ்சிநாடாளுங் கர்னரவர்கேட்டு
சிங்காதனத்தைவிட்டுத் திகழக்குதித்திறங்கி
செம்பொன்மெரிவடியில் ஏறியந்தசீர்கருணர்
ஆத்துமெருவடியைத் தொட்டுமிகநடந்து
ஆரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
சித்திரவீதி தெருவும்பலந்தாண்டி
பஞ்சவர்கள்சேனை யிருக்குமிடத்தில்வந்தார்
ஐவருடசேனைக்கு அருகேவரும்போது
பஞ்சவர்கள்சேனையர்கள் பார்மன்னர்தான்பார்த்து
கர்னனைத்தான்பார்த்து காவலர்களேதுசொல்வார்
நெஞ்சுலர்ந்து நாவரண்டு நித்திலங்குபூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பாலமுகம்வேறுபட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
ஒருவர்க்கொருவர் உண்மையாய்ச்சொல்லிக்கொள்வார்
என்னமோவந்தா இவர்இங்கேவரலாச்சு
கர்னர்வருகிறது காரியமாய்த்தோற்றுது
என்றுமவர்பேசி இருக்கின்றவேளையிலே
காஞ்சிநாடாளுங் கர்னரருகில்வந்து

கர்னர் தேறுதல் சொல்லுகிறது.

அஞ்சாதீர் அஞ்சாதீர் அறையர்களே அஞ்சாதீர்
ஒன்றுக்கும் அஞ்சாதீர் உத்தமனார்சேனைகளே
இன்னஞ்சிலகாலம் இருந்தரசையாள்வோமே
காலங்கழித்து கர்த்தன்பதிசேர
நாளுங்கழித்தது எமன்பதிசேர
மூன்றுநாளாம்பொழுது முடிமன்னராளுவது
நாலாம்நாள்உங்களுக்கு ஆகுதுராச்சியங்கள்
நாங்கள் பார்த்தன்கையம்பாலே படுவதுநிச்சயந்தான்
மன்னர்கையம்பாலே மாளுவதுநிச்சயந்தான்
தர்மருக்குஇப்போ சனியன்துலைந்தது
வீமருக்குஇப்போ விதிதுலைந்தது
மாதுமயிர்முடிக்க நாளாச்சுயிப்போது
கோதிகுழல்முடிக்க நாளாச்சுயிப்போது

பத்தினியாள் சாபம் ப[illegible]ந்ததுவங்களுக்கு
உத்தமியாள் சாபம் உடனே பலித்தது
என்றுமே சொல்லியல்லோ இணைவிலங்கை தட்டிவிட்டான்
கால்விலங்கு கழட்டினான் காவலனுமப்போது
ஆடைகொடுத்தான் அடைக்காயுந் தான்கொடுத்தான்
சேனைமதவீரருக்கு சேன திரவியங்கொடுத்தான்
இனிவாருமென்றுசொல்லி எழுந்திருந்தார் கர்ணரும்
மேகமலைபோலே மெள்ளநடந்துவந்தார்
காவலர்கள்சூழ்ந்துவரக் கர்ணர்வழிநடந்து

### திரியன் சபைக்குவருகிறது.

தேசத்தையாளுந் திரியோதிரன்சபையில்
வந்துநுழைந்தார்கள் மன்னர்பெருஞ்சபையில்
காஞ்சிநாடாளுங் கருணர்வந்துவீற்றிருந்தார்
வந்ததொருசேனையெல்லாம் மன்னர்களைக்கண்டார்கள்
தேசத்தையாளுந் திரியோதிரன் சபையில்
தேசத்தையாளும் திரியோதிரன் பார்த்து
மகுடமுடியசக்கி மன்னவனும்சாய்ந்திருந்தான்
கெண்டனிட்டமன்னர் திரும்பியெழுந்திருந்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனரும்ஏதுசொல்வார்

### அர்ச்சுனன் தேறுதலுரைப்பது.

அஞ்சாதீர்அஞ்சாதீர் அரையர்களேஅஞ்சாதீர்
மூன்றுநாளார்பொழுது முடிமன்னர்ஆளுவது
நாலாநாள்எங்களது ஆகுதுகாண்ராச்சியங்கள்
ரெட்டிப்புசம்பளங்கள் நானே தருகிறேன்
தர்மருக்குயிப்போ சனியன்தொலைந்தது
வீமருக்குயிப்போ விதிதொலைந்தது
மாதுமயிர்முடிக்க நாளாச்சுமன்னவனே
கோதிகுழல்முடிக்க நாளாச்சுமன்னவனே
ரெட்டிப்புசம்பளம் நானே தருகிறேன்
எதுக்குமஞ்சாதீர் என்பிறகேவாருமென்றார்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கடுகடுத்துவீற்றிருந்தான் கடுநாகங்கொண்டவனும்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனர்தான்பார்த்து

### அர்ச்சுனர் கர்ணருக்குச் சொல்லுகிறது.

சாஞ்சிநாடாளுங் கர்ணரே திரில்வந்து
யானைக்கொடுத்தீர் அடுக்காய்மிகக்கொடுத்தீர்
சேனைகொடுத்தீர் திரவியமுந்தான்கொடுத்தீர்

ஒன்றாகுறைநீக்கி விட்டீரேவுத்தமரே
அந்தக்குறைநீக்கி யனுப்புமென்றான் உத்தமனும்
காஞ்சிநாடாளும் கர்ணரவர் கேட்டு
அஞ்சுவயதுடைய அர்ச்சுனர்க்குவது சொல்வார்
என்னகுறையாக்கி விட்டேன்காண் இந்திரரே
ஏதுகுறையாச்சு எந்தனுக்குச்சொல்லுமென்றான்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனருமேது சொல்வார்
அர்ச்சுனர்க்கு வெள்ளையானை கொடுத்தது.
சிற்றப்பாரேறிவந்த செல்வமதக்களிறே
வேந்தரவரேறிவந்த வெள்ளையானை வேணுமென்றார்
வெள்ளானைநீகொடுத்து விடையருளுமென்றார்கள்
காஞ்சிநாடாளும் கர்ணரதுகேட்டு
பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
நிரேகங்களார்பரித்து யிருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெங்கும்பூரித்து
அரைச்செழுந்தசந்தனத்தில் வீற்றிருந்தபாவனைபோல்
வெள்ளானைச்சோடித்து வேந்தர்க்கனுப்புமென்றான்
அங்கிருக்குந்தூதவர்கள் ஆனைமுகன்தான்கேட்டு
சொல்லப்பெற்றோமென்றுசொல்லி சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்றுசொல்லிக் கும்பிட்டெழுந்திருந்து
அவ்வித நடந்தார்அழகாக
யானைப்பணிக்கர் இருக்குமிடத்தில்வந்து
வெள்ளையானைசோடித்து வாருமென்றான் தூதவனும்
யானைப்பணிக்கர்கள் அவ்வார்த்தைதான்கேட்டு
யானையவிழ்த்து அலைதாரரோடிவந்து

## தூதுவர் யானைகொண்டுவருவது.

யானைக்குநீராட்டி அலர்கண்ணுக்குமையெழுதி
கண்ணுக்குமையெழுதிக் கஸ்தூரிப்பொட்டுமிட்டு
நாலுகால்வெண்டயமாம் நடுநெற்றிக்குற்சுகளாம்
வெள்ளிக்கொலுசுகளாம் வெண்முத்துத்தாவடமாம்
கண்ணாடிசல்லிகட்டி கவரிமான்தங்குவிட்டு
யானையைசோடித்து வந்தார்அலைதாரர்
அரண்மனைவாசலிலே யானைவந்துநின்றது
காஞ்சிநாடாளுங் கர்ணருக்குதெண்டனிட்டு
யானைவந்ததென்றான் அழகான தூதவனும்
யானையும்வந்ததென்று அடிவணங்கிதெண்டனிட்டான்
காசிநாடாளுங் கர்ணரவரதுசொல்வார்
பாசத்திளவரை படைகூட்டந்தன்னுடனே

ஆனந்தவாழ்மார்பா என் ஐயாகாணுமென்றான்
வெள்ளையானைமேலேறி வேந்தனைக்காணுமென்றான்
வெள்ளையானைமேலேறி வேந்தனைக்காணுமென்றான்

## அர்ச்சுனன் யானையில்வருகிறது.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனருந்தான்கேட்டு
துள்ளியெழுந்தான் துவண்டமலரெடுத்தான்
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொன்னுனசொம்பினிலே பன்னீருங்கொண்டுவந்து
யானையின்முன்னேவந்தான் அர்ச்சுனரானவரும்
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நார்க்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
வந்துபணிந்தவரைக் கண்டதுவெள்ளானை
உந்தனுக்கேதுக்கம்ஐயா உத்தமரேவீரியனே
எந்தனுக்குதுக்கம் இருக்குதெழுந்திருந்து
துக்கமாய்தானிருந்து தும்பிக்கையால்தூக்கிறது
அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசாவும்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
நீண்டிடுங்கால்களுக்கு நெரிஞ்சிப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சல்லடமாம்
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
உருவினகத்தியுடன் உத்தரியந்தோளிலிட்டு

## அர்ச்சுனன் யானையின்மேலேறிப் பயணப்படுகிறது.

படிபடியென்றான் படிந்ததுஅவ்வானை
முகக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகத்தைதட்டி கருத்தானையேறினான்
வீரமதயானை வெள்ளானைமேலேறி
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறுமென்றான்
அப்படிக்கேயாகுதென்று ஆனந்தவாழ்மார்பன்
கரியானையேறினான் தன்னோடொத்தராசாக்கள்
சிலமன்னரெல்லோருந் தேறின்மேலேறினார்
பலமன்னரெல்லோரும் பல்லக்கிலேறினார்
குலமன்னரெல்லோருங் குதிரையின்மேலேறினார்
அழகானமன்னரெல்லாம் ஆனையின்மேலேறினார்
முன்னேமுரசெடுத்து முன்னானைமேற்போட்டான்

ஒருகோடிவாத்தியங்கள் ஒருமிக்கச்சத்தமிட
இருகோடிவாத்தியங்கள் எங்குமேசத்தமிட
பட்டபுலவர் பதினெட்டுமந்திரிகள்
சிங்கங்கரடிபுலி சேர்ந்துமுழங்கிவர
இப்படியாய்வீரரெல்லாம் ஏறினார்வாகனங்கள்
ஏறினபோதே எடுத்தார்விருது
முத்துக்குடையாம் முழுமாணிக்கப்பொற்குடையாம்
தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பட்டுக்குடையாம் பவளக்குடையாம்
வச்சிரக்குடையாம் வைடூரியக்குடையும்
எடுத்துப்பிடித்தார்கள் எண்ணாயிரங்குடைகள்
சுற்றிநிறைந்தார்கள் சூரியனைக்காணாத
பக்கம்நிறைந்தார்கள் பகலவனைக்கண்மறைக்க
ஒத்தைக்குடைநடுவில் உத்தமர்வாராரும்
பூச்சக்கரக்குடைநடுவில் பூபாலர்வாராரும்
அலங்காரக்குடைநடுவில் அருச்சுனனும்வாராரே
பச்சைக்குடைகவிய பார்மன்னர்தேர்நடக்க
முத்துக்குடைகவிய முடிமன்னர்தேர்நடக்க
இரத்தினக்குடைகவிய ராசாக்கள்தேர்நடக்க
பாரினிலக்கிறன்ன அணிமன்னர்கொக்கரிக்க
குதிரையதுமாணிக்க கோடிமன்னர் சத்தமிட
ஊதினான்சின்னம் உலகேழலகதிர
ஊதினான்காளை வலுத்தலைமுடிக்க
செம்பொன்னூற்காளை திசைவிளங்கஊதினான்
பொன்னினூற்காளை பொருந்தநின்றூதினான்
அப்படிநடந்தார் அழகாக

அருச்சுனன் பெருந்திருவாள்வீதி வருகிறது.

தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
மற்றொருவீதியிலே வாராரே அர்ச்சுனரும்
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்வீதியிலே
பெருந்திருவாள்வீதியிலே வாராரே அருச்சுனனார்
அந்தவயதுடைய அர்ச்சுனராசதுரை
அருச்சுனன்போறேனென்று ஊதினான்சின்னத்தொனி
ஊதினசின்னத்தொனி கேட்டாளேஉத்தமியும்
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்தான்கேட்டு
நூலார்கடுந்திறலார் நூற்றொருவர்பெண்டுகளும்
அத்தனைபெண்டுகளும் அல்லவருந்தான்கூடி

அம்மானையாடி அழலாடி பந்தாடி
சொக்கட்டான்சூது சதுரங்கந்தானாடி
கொம்பனைமாரெல்லோரும் கூடிவிளையாடிருந்தார்
திருவினைமாரெல்லோரும் கூடிவிளையாடிருந்தார்
அந்தச்சமயத்திலாரணங்குதான்பார்த்து
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாளைதுசொல்வாள்
பந்தாடும்பெண்டுகளே பார்த்தர்வருகிறார்
வளநாடுபோனவன் வருகிறான்வீதியிலே
வல்லிடும்போனவன் வாரான்டிவீதியிலே
இந்தமனைபுகுந்து யாவரையுங்கண்டாலே
பாட்டிமாரென்றுசொல்லி பரியாசம்பண்ணிடுவான்
கொம்பனைமாரெல்லோருங் கூடியொளியுமென்றாள்
அங்கிருக்குமங்கையர்கள் அனைவோருஞ்சம்மதித்து
அப்படிக்கேயாகுமென்று அனைவோரும்போயொளித்தார்
மங்கையர்களெல்லோரும் மறைவாகப்போய்மறைந்தார்
திரியோதிரன்தேவி திருவினைநாயகியும்
என்னசெய்யப்போறான் இளவிசயனருச்சுனனும்
அதுவும்அறிவோம் அவனுடையவித்தைகளை
என்றுமவள்சொல்லி இடும்மாளிகையிலிருந்தாள்
இப்படியாக யிவனிருக்கும்வேளையிலே
அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசதுரை
பாசத்திளவரையன் படைகூட்டந்தன்னுடனே
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்வாசல்வந்து
யானைவிட்டுகீழிறங்கி யானந்தவாழ்மார்பன்
வாளுருவிகைபிடித்து வள்ளயத்தைதோளிலிட்டு
பாசத்திளவரையன் படைகூட்டந்தன்னுடனே

பெருந்திருவாளரண்மனையில் திஷ்டோதிரன்தேவியை
சின்ன அர்ச்சுனன் மானபங்கமாய் சேலையுரிகிறது.

பேடைமயிற்கண்ணாள் உட்கட்டில்போய்புகுந்தாள்
திஷ்டோதிரன்தேவி திருவினையாள்முன்னேவந்து
அவளோடுங்கழல்பறித்தான் அம்மானைதான்பறித்தான்
பாடுங்கழல்பறித்தான் பள்ளாங்குழிபறித்தான்
கொம்பனையாளோடுமவன் கொஞ்சுங்கிளிபறித்தான்
பெண்பெருமாளோடும் அவன்பேசுங்கிளிபறித்தான்
பட்டான்விளையாடிப் பரியாசம்பண்ணும்போல்
சிரித்துவிளையாடி சேலைகளைந்தானே
கொஞ்சிவிளையாடி கூறையவிழ்த்தானே
பாசத்திளவரையன் படைகூட்டந்தன்னுடனே
மாலைமுடியானும் மந்திரிகள்கைகொடுத்தான்
மந்திரிகள்கைகொடுத்து மன்னவனும்யேதுசெய்தான்

## அருச்சுனன் சாட்சிவைத்தது.

கண்டீரோராசாக்கள் காணவில்லையென்றீர்
பார்த்தீரோராசாக்கள் பார்க்கவில்லையென்றீர்
அடர்பலத்தில் அரசர்சபைநடுவே
பேரம்பலத்தில் பெரியோர்சபைநடுவே
தோராவடிவழகி துரோபதையாள்என்றுச்சி
அவளழகும்ஒப்பனையும் ஆருமில்லைவையகத்தில்
திருவழகும்மொப்பனையுந் தேசத்தில்கண்டதில்லை
துரோபதையைக்கொண்டுவந்து தூங்குமஞ்சமேற்றிவைத்தான்
ஆரணங்கைகொண்டுவந்து அம்பலமேற்றிவைத்தான்
ஆடம்பலத்தில் அவையார்சபைநடுவே
பேரம்பலத்தில் பெரியோர்சபைநடுவே
பஞ்சவர்கள்தேவியைப் பங்கப்படுத்தவென்று
சொல்லாதுஞ்சொல்லித் துகிலுரிந்தானே
பேசாதும்பேசி புடவையவிழ்த்தானே
அவிழ்க்கப்பட்டபுடவை அநேகஅம்பலத்தில்
உரிந்தபுடவையது கோடானகோடியுண்டு
ஆராலுஞ்சொல்லி யளவிடலாகாது
ஒருவராற்சொல்லி உவமையிடப்போகாது
அதுசத்தேறமுனி உடைகுலையுமானல்
மாறுவதுஅன்றல்லவோ ஐவர்பஞ்சபாண்டவர்கள்
பிடித்ததுவில்லுமல்லோ போர்விஜயர்பஞ்சவர்க்கு
மாயனருளாலே மானமிருந்தது
தேவனருளாலே நின்றான்காண் பூமியிலே
ஏதிராளிசெய்த இடும்பைத்திருப்பினேன்
பங்காளிசெய்த பருவந்திருப்பினேன்
சரிக்குச்சரியாய் துகிலுரிந்தேன்மன்னவனே
ஐயாவுக்கிப்போதடை யாளங்கொண்டுபோறேன்
என்றுமவன்சொல்லி எழுந்துநடக்கலுற்றான்

## அர்ச்சுனன் பெருந்திருவாளைக்கண்டது.

பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்நாயகியை
கண்ணாலேகண்டானே காளைஅருச்சுனனும்
ஓடியொளித்தாயே ஓடமயிற்கண்ணாளே
உன்னையுங்கூட வுடனேகத்தான்சேர்த்து
வெட்கங்கொடுப்பேன் வேடிக்கையைப்பார்ப்பேன்
பலவற்குமுன்பாக பவிஷைகெடுப்பேன்
மறைந்திருந்ததனால் பிழைத்தீர்காண்பெண்ணணங்கே
என்றுமவன்சொல்லியல்லோ எழுந்துநடக்கலுற்றார்

## அருச்சுனன் யானையேறுகிறது.

படிபடியென்றான் படித்ததுஅவ்வானை
முக்கம்பல்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
மத்தகம்தான்பிடித்து மதயானையேறினான்
கைத்தளத்தைதட்டி கறுத்தானையேறினான்
வீரமதயானை வெள்ளானைமேலேறி
வந்தவந்தபேர்களெல்லாம் மதயானையேறினார்
அப்படிக்கேயாகுதென்று யானையின்மேலேறினார்
அவ்வீதிவீதி நடந்தார்அழகாக
மற்றுமொருவீதி மன்னர்கள்தாண்டியல்லோ
சோலையடுத்தார்கள் சுந்திரப்பூமுடியார்
தென்னமரச்சோலை திரும்பியந்ததேர்விஜயன்
மாமரச்சோலைத் திரும்பியந்ததேர்விஜயன்
அஞ்சுவயதுடைய அர்ச்சுராசதுரை
யானைவிட்டுக்கீழிறங்கி யானந்தவாழ்மார்பன்

## அருச்சுனன்பூங்காவில் கோலிகுண்டு ஆடுகிறது

உப்புகந்தமாடுகிறான் உத்தமனார்வீரியனும்
செண்டுவிளையாடுகிறான் சேனைகள்தன்னுடனே
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே
பேடைமயிற்கண்ணாள பெருந்திருவாளஏதுசொல்வாள்
திஷ்டோதிரன்தேவி திருவினைக்கேஏதுசொல்வான்
அப்போதேசொன்னானே தப்புவருமென்றுசொல்லி
என்வார்த்தைக்கேளாமேதயிருந்தாயே ஆணங்கே
வெட்கங்கெடுத்தானே வீணாகிப்பார்த்தானே
சிலபேரைக்கூட்டிவைத்துப் பற்றித்துநிறுத்தான்
மண்டலத்தார்முன்பாக மானங்கெடுத்தானே
பாகைவிரைபோட்டால் பயித்தங்காய்காய்ந்திடுமோ
சுத்திரிசெடிபோட்டால் கஸ்தூரிப்பூத்திடுமோ
மரமல்லிசெடியதுதான் குடமல்லிபூர்த்திடுமோ
நாகத்தின்குட்டிக்கு நல்லவிஷமில்லையோ
சென்னாகங்குட்டியது சீறுமல்லிடுவதுண்டோ
என்றுமவள்சொல்லி இருந்தாள்பெருந்திருவாள்
சிந்தைகலங்கிடவே திஷ்டோதிரன்தேவி
மாரடித்துமங்கையரும் மண்மேல்பிரண்டழுது
மோதிரக்கையை முகத்திலறைந்துகொண்டு
சாவேன்கெடுவேன் சமுத்திரத்திலபோய்விழுவேன்
மானங்குலைந்தபின்பு மண்மேலிருப்பேனோ
புடவையவிழ்ந்தபின்பு பூமியிலேதங்குவேனோ

என்றுமவள் அழுதாள் ஏலங்கருங்குழலும்
அங்குமொருதாதி அறிவுடையாளோடிவந்து
வாரியெடுத்து மடிமேலேகுந்தவைத்து

தாதி சீர்திருத்துகிறது.

பூஞாகேசகத்தில் புழுதிபலதுடைத்து
ஆபரணந்தான் திருத்தி அழகாகசொப்பனிட்டு
கொப்புத்திருத்தியவள் கோர்வைகள்தான் திருத்தி
அவிழ்ந்ததலைமயிரை அள்ளியவள்சொருகி
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னாச்சிநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
மருமகள்பெற்றெடுத்த மதயானைக்கண்ணல்லோ
அஞ்சுவயதுடைய அறியாதபாலகன்றான்
அவன்மேலேகுற்றஞ் சொல்லலாகுமோஎன்னாச்சி
பாட்டியாரென்றுசொல்லி பார்த்தன்விளையாடினன்
சிறுபாட்டியென்றுசொல்லி சிறித்துவிளையாடினன
கோபித்துக்கொள்வாரோ கொத்தார்குழலாரே
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சிநீ ஆறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடுந் திருவினையேதேறிவிடும்
என்றுமவளுரைக்க ஏதுசொல்வாள் திருவினையும்
ஒருத்தனைவந்தாளு வுத்தமியாள்தாதியரே
பலபேரைக்கூட்டிவந்து பற்றுந்துகிலுரிந்தான்
சேனைகளைக்கூட்டிவந்து சேலையவிழ்த்தானே
மானங்குலைந்தபின்பு மண்மேலிருப்பதில்லை
இன்னமொருநாழி நில்லேனுன்மண்மேலே
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
தாமக்குழலாளுந் தாதியவளேதுசொல்வாள்

திரியோதிரனுக்கு சமாச்சாரந் தாதிகளுரைப்பது.

தேசத்தையாளுந் திரியனுக்குச்சொல்லுவோம்
அம்பலத்துவாசலிலே யனைவோர்க்குஞ் சொல்லிடுவோம்
அனைவோர்க்குஞ்சொல்லி அவன்தலையைவாங்கிடுவோம்
ஆறிவிடும்ஆறிவிடும் ஆச்சியரேயாறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடும் திருவினையேதேறிவிடும்
பட்டெடுத்துக்கட்டி பலஸ்திரியர்தங்களைப்போல்
ஒட்டெடுத்துக்கட்டியங்கே ஓடிவாராள்தாதியவள்
எட்டடியும்ஓரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியும்ஓரடியாய் பதறிமிகநடந்து
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தேசத்தையாளுந் திரியோதிரன்கொலுவில்

சிங்காதனத்துக்கு முன்பாகதெண்டனிட்டு
தெண்டனிட்டதாதி திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
நீயார்பெண்ணேதாதி அரியவுரையுமென்றான்
யார்பணியுமல்ல பெருமாள் திருபணிதான்
பேர்பணியுமல்ல பெருமாள் திருபணிதான்
ஒருவர்பணியுமல்ல உம்புடையநற்பணிதான்
திஷ்டோதிரன்தேவி திருவினையாள்தாதியென்றாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
செண்டாடுமன்னன் திரியோதிரனேதுசொல்வான்
நீயிங்கேவந்ததெனக் கரியக்கூறுமென்றான்
ஐயாவேநீர்கேளும் அடியாளொருவார்த்தை
என்னையாநீர்கேளும் இன்னமொருவார்த்தை
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்மாளிகையில்
தூலார்கடுந்திரளார் நூற்றொருவர்பெண்டுகளும்
கொம்பனைமாரெல்லாம் கூடிவிளையாடினார்கள்
திருவினைமாரெல்லாருஞ் சேர்ந்துவிளையாடினார்கள்
பந்துகழலாடிப் பைங்கிளிமார்வீற்றிருந்தார்
அந்தச்சமயத்தில் அர்ச்சுனவீரியனும்
பாசத்திளவரையன் படைகூட்டந்தன்னுடனே
ஓடமயிர்க்கண்ணாளும் உட்கட்டிற்போய்புகுந்தான்
திஷ்டோதிரன்தேவி திரிவினையாள்நாயகியாள்
ஆடுங்கழல்பறித்தான் அம்மானைதான்பறித்தான்
பாடுங்கழல்பறித்தான் பள்ளாங்குழிபறித்தான்
கொம்பனையாளோடுமவன் கொஞ்சுக்கிளிபறித்தான்
பெண்பெருமாளோடுமவன் பேசுங்கிளிபறித்தான்
பாட்டன்விளையாடிப் பரியாசம்பண்ணப்போல்
சிறித்துவிளையாடி சேலைகளைந்தானே
கொஞ்சிவிளையாடிக் கூரையையவிழ்த்தானே
திஷ்டோதிரன்தேவி திருவினைநாயகியும்
சாவேன்கெடுவேன் சமுத்திரத்தில்போய்விழுவேன்
செத்துமடிவேனென்றாள் சிலவழித்துபோவேனென்றாள்
மாண்டுமடிவேனென்றாள் வைகுண்டஞ்சேர்வேனென்றாள்
இனியிருப்பதில்லையென்று ஏலங்கருங்குழலும்
அழுதும்புலம்புகிறாள் ஆனந்தவாழ்மாரி
அந்தவிசேஷம் அதுசொல்லவந்தேனென்றாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
வெட்கம்பெரிதாகி வேல்புருவக்கண்ணாளும்

## திரியன்வெட்கித் தலைகுனிந்தது.

நாகமுடியான் தலைகுனிந்துவீற்றிருந்தான்
அங்கிருக்குமன்னர் அரையர்துரையரெல்லாம்
கெக்கலிகொட்டி நகைத்தாரேமன்னரெல்லாம்
கைகொட்டித்தானகைத்தார் கட்டழகரெல்லாரும்
திரியோதிரன்தம்பி திஷ்டோதிரன்பார்த்து
கோபித்துக்கண்சிவந்துகொல்லுங்குருளையைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
நெற்றிபுருவப் நெருப்பாயனல்பறந்து
மீசைதுடிக்க முடிகள்பொறிபறக்க
சிந்தைகலங்கிடவே திஷ்டோதிரனேதுரைப்பான்
அர்ச்சுனன்செய்ததெல்லாம் ஆனந்தமாச்சுதே
பார்த்தனவன்செய்ததெல்லாம் ஆனந்தமாச்சுதே
சிரிக்கவுடலெடுத்தோம் சீயென்னப்பேரெடுத்தோம்
நகைக்கவுடலெடுத்தோம் சீயென்னப்பேரெடுத்தோம்
அருந்தவமதுடைய அர்ச்சுனனோர்விபுயத்தை
அரைநாழிகொள்ளையிலே யல்லவரும்பார்த்திருக்க
அவன்தலையைவாங்கி வருகிறேன்பாரென்று
அண்ணன்முகம்நோக்கி ஆண்டமன்னனேதுசொல்வான்
ஒரு அக்குரோணிசேனையது உத்தமனேநீகொடுத்தால்
திஷ்டோதிரன் யுத்தத்திற்குப்போக அண்ணனைசேனைகேட்பது
துவாரைக்கவந்ததொரு சுந்தரனோர்பூமுடியும்
அருந்தவமதுடைய அர்ச்சுனனோர்பூமுடியும்
இருவர்தலையறுத்து இப்போதேகொண்டுவந்து
அண்ணாவுன்பாதமதில் அடைவுடனேவைப்பேனென்றான்
தேசத்தையாளுந் திரியோதிரன்தான்கேட்டு
செண்டாடுமன்னன் திரியோதிரன்தான்கேட்டு
மெத்தமகிழ்ந்தானே வேல்பொருதுங்கண்ணனும்
சந்தோஷமாகி சரீரங்கள்பூரித்து
தேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
ஒரு அக்குரோணிசேனையது உத்தமனுந்தான்கொடுத்து
திஷ்டோதிரனுக்கு சேதிகளேதுசொல்வான்
துவாரைக்கவந்ததொரு சுந்தரனோர்பூமுடியும்
அருந்தவமதுடைய அர்ச்சுனனோர்பூமுடியும்
அரைநாழிகொள்ளையிலே அறுத்துவந்துசேருமென்றான்
போய்வாருமென்று பொருத்தவிடைகொடுத்தான்
விடைபெற்றெழுந்திருந்தான் வேந்தர்பெருமானும்
சிந்தைகலங்கிடவே திரியோதிரன்தானெழுந்தான்

கருணர்வேண்டாமென்று தடுக்கிறது.

காசிநாடாளுங் கருணாகரவர்பார்த்து
திஷ்டோதிரனுக்கு சொல்வான்ஒருவார்த்தை
போகாதேபோகாதே போர்மன்னுபோகாதே
[illegible]பாதனையையென்று அமருக்குப்போகாதே
சரி[illegible]னையையென்று சண்டைக்குப்போகாதே
ஐவரிடகும்புக்கு எல்லாபலமுமுண்டு
மாயர்வலுமையுண்டு மாயோனவர்கிருபையுண்டு
சுவாமிவலுமையுண்டு தேவர்கிருபையுண்டு
ஆதிசிவன்சங்கரனார் அவர்வலுமை[illegible]
பரமனுடன்வாதாடி பாசுபதம்பெற்றவன்
பாசுபதம்பெற்ற பார்த்தனுடேபோனல்லவோ
அவர்களுடன்யுத்தஞ்செய்ய [illegible]
போகாதேபோகாதே [illegible]
சண்டைக்குப்போகாதே [illegible]
என்றுசொல்ல[illegible]
[illegible]
காசிநாடாளுங் கருணாகரர்கேட்டு
சித்தத்துக்கேற்றபடி செய்கருளுமென்றுசொன்னார்
கொலுவைவிட்டுநீங்கியல்லோ கொற்றம்பூவிரியனும்
காசிவளநாடாளுங் கருணர்பெருமாளும்
அரண்மனையேழுமட்டும் அக்கப்புரந்தாண்டி
மாளிகைக்குவந்து படுத்தாரேமன்னவரும்
பஞ்சணைமெத்தையிலே பள்ளிகொண்டார்கருணருடம்
இப்படியாக இவரிருக்கும்வேளையிலே

திஷ்டோதிரன் யுத்தத்திற்குப்போகிறது.

சிந்தைகலங்கிடவே திஷ்டோதிரன்தானும்
அவர்-அக்குரோணிசேனையுடன் உத்தமனும்வெளியானான்
சிந்தைகலங்கிடவே தேரின்மேலேறினான்
திஷ்டோதிரராஜன் தேரின்மேலேறினான்
ஒரு-அக்ரோணிசேனையுடன் உத்தமர்கள்வந்தார்கள்
ஊதினான்சின்னம் உலகெழுல்கதிர
ஊதினான்காளே பிறகுதலைதுடிக்க
அஞ்சுவயதுடைய அர்ச்சுனன்வீரியன்மேல்
போர்பொருத்தவாரேனென்று ஊதினான்தாரைசின்னம்
சண்டைக்குப்போறேனென்று சங்கெடுத்துஊதினான்
அவ்வீதிவீதி நடந்தாரழகாக
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தென்னமரச்சோலை திரும்பினார்தேர்விசையார்
மாமரச்சோலையிலே வந்தானேமன்னவனும்
திஷ்டோதிரன்வந்தானென்று சின்னமெடுத்தூதினான்

சண்டைக்குலந்தேநமென்று சங்கமெடுத்தூதினான்
சண்டையென்றுசொல்லி சண்டைகொடிபடுத்து
நிசாணங்கள்நிசாணங்களொன்று ரணபேரியடித்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனருந்தான்கேட்டு
எதிர்முகம்பார்த்தான் எத்திலங்குபூமுடியான்

### சின்ன அருச்சுனன் யுத்தஞ்செய்கிறது.

அண்ணாந்துபார்த்தான் அரையன்றிருமுகத்தை
கொட்டிநகைத்தானே குலுங்கவிருபுஜமும்
கைகொட்டித்தானகைத்தான் காவலன்பேர்வீரியனும்
ஆனந்தமார்பன் அட்டங்கால்தான்துடைத்து
மாலைமுடியானும் மண்கையைதானுதறி
படிபடிபடியென்றான் படித்தது அவ்வானை
வீரமதயானை வெள்ளானைமீதேறி
முக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
கைத்தலத்தைத்தட்டிக் கறுத்தானைவறினன்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனவீரியனும்
இப்பேடாதிரனுக்கு சொல்வானொருவார்த்தை
முன்னேயும்பூஜை முதற்பூசைவந்தாயோ
சற்றேமணந்தளர்ந்து சண்டைக்குவந்தாயோ
தாமமுடியானே தருமமாயச்சொல்லுகிறேன்
சரியாயிருந்தல்லவோ சண்டைபண்ணிவெல்லுவையே
எதிராயிருந்தல்லவோ சண்டைபண்ணிவெல்லுவையே
எதிராயிருந்தல்லோ என்னைநீவெல்லுவதற்கு
உந்தனாலாகுமோ உத்தமனார்வீரியனே
ஓடிப்பிழைத்திரென்றான் உத்தமனார்வீரியனே
உந்தனாலாகாது வோடிப்பிழையுமென்றான்
பாலனல்லவென்றுசொல்லிப் பதறியங்கேவில்லெடுத்தான்
அஞ்சுவயதுடைய அருச்சுனனைத்தான்பார்த்தான்
அறியாதபாலகன்மேல் அரசன்வந்துதானெதிர்த்தான்

### அருச்சுனன் மாயவரை நினைக்கிறது.

உலகையுங்காக்கின்ற மாயவரேவாருமையா
ஏழுலகமாளுகிற எம்பெருமாள்வந்தருளும்
சோலைமலருடைய சொக்கரே வந்தருளும்
ஆனைமலருடைய அகிலாண்டஈஸ்பரரே
அல்லியிலைமேலே பிறப்பித்தயாச்சியரே
அறியாதுசண்டைசெய்ய அருகாகவந்தருளும்
வானுமுனையிலே வந்தருளுமீஸ்பரரே
என்றுமவன்சொல்லி யெடுத்தானேவில்லதனை

அருச்சுனன் யுத்தம்.

வில்லெடுத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
விட்டான்ஒருபாணம் விண்ணதிரமண்குலுங்க
விண்ணதிரமண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
மற்றுமொருகணையை மறுகணையைத்தான்தொடுத்தான்
இன்னுமொருபாண மெடுத்துவிட்டானிந்திரனும்
திஷ்டோதிரன்பார்த்து சிந்தைகலங்கிநின்றான்
மற்றுமொருகணையை மறுகணையைத்தான்தொடுத்தான்
அக்ரோணிசேனைகளை அடங்கலும்பட்டார்கள்
ஒருமிக்கப்பட்டார்கள் உத்தமனார்சேனைகள்
சண்டைக்குவரவில்லையென்று சலாம்பண்ணிஓடுவாராம்
பிச்சைக்குவந்தோமென்று பூநூலைக்காட்டிடுவார்
நாமத்தைக்காட்டிடுவாரும் நான்தாதனென்பாரும்
பூநூலைக்காட்டுவாரும் பிராமணனென்பாரும்
அஞ்சுவபதுடைய அர்ச்சுனருந்தான்பார்த்து
மற்றுமொருகணையை மறுகணையைத்தான்தொடுத்தான்
இன்னஞ்சிலகணையை யெடுத்தானே இந்திரனும்
விட்டான்சிலகணையை விண்ணதிரமண்குலுங்க
மண்ணதிரவிண்குலுங்க மாற்றான் திடுக்கிடவே
சிந்தைகலங்கிடவே திஷ்டோதிரன்பார்த்து

திஷ்டோதிரன் தோற்றது.

கால்நடுங்கக்கைநடுங்கக் கட்டழகன்வீரியனும்
கொலைகள்நடுங்கிடவே குப்புறவேதான்படுத்தான்
தேரின்மேல்தான்படுத்தான் திஷ்டோதிரப்பெருமான்
அஞ்சுவபதுடைய அருச்சுனருந்தான்பார்த்து
நெற்றிக்குநேர்பிடித்து விட்டான்ஒருபாணம்
வந்துசிலபாணம் வல்லிடிபோலேவிழுந்து
திஷ்டோதிரனும் தோற்றான்சிகரமற்றான்
தோற்றான்சிகரமற்றான் தேர்ப்பாகன்முடியுமற்றான்
அரசுஅற்றான் ஆணியற்றான் அம்புறாத்தூணியற்றான்
தேரைவிட்டுக்கீழ்குதித்து திருடன்போலாடுறான்
தேருமுடைந்தது செப்புரவிசெத்தது
ஒருத்தனாய்ஓடுகிறான் உத்தமனார்வீரியனும்
பதாதியாய்ஓடுகிறான் பாவிதிஷ்டோதிரனும்
திஷ்டோதிரன்ஓடுவதை சிறுவனவன்பார்த்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனருமேதுசொல்வார்
போகாதேபோகாதே போர்மன்னா போகாதே
முன்னையும்பூசை முதற்பூசைவந்தாய்ப
சண்டைபண்ணிவெல்லாமல் போகலாமோதார்வேந்தா
மின்காட்டப்பின்கொடுத்து போகாதேபுண்ணியனே
இப்படியாகச்சொல்லுகையிலோடுகிறான் திஷ்டோதிரன்

அப்போதருச்சுனனும் ஆமழகாவே துசொல்வார்
போகாதே போகாதே புண்ணியனே போகாதே
பங்காவிற் பெற்றெடுத்த படிக்கனே போகாதே
அக்குகன்னன் பெற்றெடுத்த ஆணழகா ஓடாதே
துட்டனவன் பெற்றெடுத்த குலக்கொழுந்தே ஓடாதே
கண்ணில்லான் பெற்றெடுத்த கட்டழகா ஓடாதே
உன்னையர் திருவாணை கண்டாய் ஆச்சிமேலாணை கண்டாய்
அண்ணன் மேலாணை கண்டாய் இனி திரும்பி ஓடாதே
அண்ணன் மேலாணையென்ன அநசிப்பசந்தானே

திஷ்டோதிரன் அர்ச்சுனனைக் கேட்டுக்கொள்ளுகிறது.

ஆயுதந்தனைக் கீழ்ப்போட்டு அடியேன் சரணமென்றான்
உன் புண்ணியத்தினாலே பிழைத்தோடிப்போறேனென்றான்
கருமத்தினாலே பிழைக்கவழி பாருமையா
அஞ்சுவயதுடைய அர்ச்சுனன் தான் கேட்டு
அந்நேரக் குமன்னவர்க்கு ஆணழகனே துசொல்வான்
சபர்த்துள்ள வீரியன் போல் சண்டை பண்ணவந்தானே
என்னைக் கெலியாமல் ஏன் திரும்பி ஓடுகிறான்
அப்படிக் காத்தவொரு வாணழகன் வீரியனை
வெட்கங் கெடுக்கவேண்டும் வேந்தர் சபைநடுவே

திஷ்டோதிரனை அர்ச்சுனன் பண்ணிவடிவமாக்கி
பாட்டன்மார்க்கனுப்புதல்.

மானங் கெடுக்கவேண்டும் மன்னவர்கள் மண்டபத்தில்
பங்கப்படுத்தவேண்டும் பாட்டனுக்கனுப்பவே தான்
என்றுமவை யுரைத்து எழுந்திருந்தார் அர்ச்சுனனும்
உரைக்கொடியறுத்தான் உத்தமனார் வீரியனும்
பக்கரைக்கொடியறுத்தான் பாலகனருச்சுனனும்
திஷ்டோதிரன் கைகாலை சிறுவனவன் பிடித்து
கால்கட்டிக் கைகட்டுங் கட்டியந்த காவலனும்
அசையாமல் கட்டினான் ஆனந்தவாழ்மார்பன்
காலுகால் மத்தியிலே நடுவே வொரு கொம்பைவிட்டு
பன்னிவடிவாக பார்த்தனை சோதித்து
கூர்மவடிவாகக் கொற்றவனைச் சோதித்து
என்னவென்று சாபம் இடுகிறானருச்சுனனும்
கட்டவிழ்க்கவந்தவொரு காவலனோர் அத்தனையும்

திஷ்டோதிரனுக்குச் சாபம்.

தச்சன் கருமான் மறிந்தசிப்பாச்சாரி
மந்திரி பிரதானிகள் மற்றுமுள்ள ராசாக்கள்
கட்டவிழ்க்கவந்தவொரு கனமுள்ள வீரியரும்
ஓட்டிக்கொண்டு போகவென்று உத்தமனுஞ் சாபமிட்டான்
கெட்டுவந்த மன்னரெல்லாம் ஓட்டிக்கொண்டு போகவென்றான்
எந்தன் வம்மிசத்தார் வந்து தொட்டால் விட்டுவிடவேணுமென்று

தூதுவரைத்தானழைத்து தூக்கிநடவுமென்றான்
நாலுபேர்தூதுவர்கள் நன்றாகத்தானெடுத்தார்
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தான்
நாலுபேர்தூக்கி நடந்தார்கள்வீதியிலே
அந்தந்தவீதிகளில் வாழ்கின்றமன்னவர்கள்
இதுஎன்னகோரமென எல்லவரும்வோடிவந்து
கட்டையவிழ்த்தார்கள் காவலனார்வீரியர்கள்
குய்யோமுறையோவென்று கூவினர்மன்னவர்கள்
ஐயையோதெய்வமென்று அலறிப்புலம்புகிறார்
அந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
தச்சன்கருமான் தாமறிந்தசிற்பாசாரி
மந்திரிபிரதானி மற்றுமுள்ளராசாக்கள்
கட்டவிழ்க்கவந்தார்கள் காவல்னார்வீரியர்கள்
தொட்டுஅவிழ்த்திடவே ஓட்டமிகநடந்தார்கள்
ஒருஅக்ரோணிசேனையுடன் உத்தமர்கள்போறார்கள்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுப்போறார்கள்

திரியோதிரனம்பலத்தில் போய்விழுந்தது.

தேசத்தையாளுந் திரியோதிரன்சபையில்
அம்பலத்துவாசலிலே எல்லவரும்போய்விழுந்து
அங்கிருக்குமன்னவர்கள் அரையர்துரைகளெல்லாம்
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைத்தார்கள்
தட்டிநகைத்தார்கள் தாமமுடியார்கள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
மன்னன்மனஞ்சிலித்து மறுமம்வெளிப்பட்டு
தலைகுனிந்துவீற்றிருந்தான் தாமமுடியானும்
துய்யகளத்துதித்த துரோணரவர்பார்த்து
அங்கிருந்ததூதுவரை யாணழகர்தான்பார்த்து
காஞ்சிநாடாளும் கருணரைக்கூப்பிடென்றார்

தூதுவன் கருணரைக் கூப்பிடுகிறது.

தூதுவனுந்தான்கேட்டுத் தொழுதிரங்கிதெண்டனிட்டு
அருளருளுமென்னையா அப்படிக்கேயாகுமென்று
எட்டடியும்ஓரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியுமோரடியாய் மற்றிவருநடந்து
காஞ்சிநாடாளுங் கருணருக்குத்தெண்டனிட்டான்
தெண்டனிட்டதூதன் திருப்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதான்
காஞ்சிநாடாளும் கருணரவர்பார்த்து
நீயாருடையதூதன் அறியவுரையுமென்றான்

யாருடையதூதனல்ல அடியேனுன்தூதன்
அம்பலத்தார்தூதனென்று அடிவணங்கித்தெண்டனிட்டான்
நீயிங்கேவந்த தெனக்கறியக்கூறுமென்றான்
ஐயர்குலத்திலே துரோணக்குருக்களும்
உம்மையழைத்துவரக் கட்டளையிட்டார்காண்
அரைநாழிபோதே அழைத்தோடிவாருமென்றான்
வாருமையாவென்று வருந்தியேதெண்டனிட்டார்
இன்னேரமங்கே யிருந்துநான்வந்தேன்
நானறியாக்காரியங்கள் வுண்டோடாநாயகனே
ஏதுவகையா என்னைவரவழைத்தார்
வரவழைத்தகாரியங்கள் வாய்திறந்துசொல்லுமென்றான்
அப்போதுதூதுவனும் அடிவணங்கியேதுசொல்வான்
என்னமோவேதோ எனக்கொன்றுந்தெரியாது
ராசாக்கள்காரியங்கள் நமக்குவெளிப்படுமோ
க்ஷத்திரியர்காரியங்கள் கலக்கம்வெளிப்படுமோ
மந்திரிகள்காரியங்கள் மருமம்வெளிப்படுமோ
வருகவருகவென்று வருந்தியேதெண்டனிட்டான்

கருணர் திரியணம்பலத்துக்குப் பயணப்பட்டுவருகிறது.

காஞ்சிநாடாளுங் கருணரெழுந்திருந்து
முத்துமெரிவடியைத் தொட்டுமிகநடந்து
அம்பலத்துவாசலிலே ஆணழகன்வந்திருந்து
ஐயர்குலத்திலே துரோணரவர்பார்த்து
கருணர்பெருமாளுக்குங் கண்சாடைகாட்டினார்
காஞ்சிநாடாளுங் கருணரதுவறிந்து
இப்போதிரணறிய திட்டெனவேவந்து
அப்போதுசொன்னேனே தப்புவருமென்றுசொல்லி
முன்னமேசொன்னேனே மோசவருமென்றுசொல்லி
என்பேச்சைக்கேளாமல் எழுந்துநடந்தீரே
அறியாதான்என்றுசொல்லி அமருக்குப்போனீரோ
அமருக்குப்போனிடத்தே அவகேடுகண்டீரே
சண்டைக்குப்போனிடத்தே சதிசெய்தான்கண்டீரே
காஞ்சிநாடாளும் கருணரவருரைத்து
கட்டையனிழந்தாரே காவலனார்வீரியரும்
அவர்அக்ரோணிசேனைகளும் உத்தமனார்வெளியானார்
காறுதறிக்கையுதரிக் கடுவழிகடந்தார்
அவரவர்மாளிகைக்கு அவரவர்போய்ச்சேர்ந்தார்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
போராஞ்சாமன்னர் புணந்திரவீரியரும்
காஞ்சிநாடாளுங் கருணருடனீதிவிட்டு

புணந்திரற் றூர்ச்சபைவீதி வருகிறது.

மற்றுமொருவீதியிலே வாரார்புணந்திரரும்
மாதிரத்தைக்சுக்கம் உலகேழ்லகதிர

உஉ திறன் காளை உருக்குதலை துமுக்க
செம்பொன்னுற்காளை திசைவிலங்க உஉ திறன்
பொன்னிறுற்காளை பொருந்தநின்றா திறன்
உஉ திறன்சின்னத் தொனிகேட்டாளுத்தமியும்

துற்சடைக்குத் தாதி சேதியுரைக்கிறது.

தாமக்குழலாளுந் தாதியவள்கேட்டு
எட்டடியும்ஓரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடிஓரடியாய் பதறிமிகநடந்து
தோகைமயிலனையாள் துற்சடையாள்மாளிசென்று
சிம்மாதனத்துக்கு முன்பாகத்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டதாதி திரும்பஎழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுது
நீயார்பெண்ணேதாதி அரியவுரையுமென்றாள்
யார்பணியுமல்ல அடியேன் திருப்பணிதான்
ஒருவர்பணியுமல்ல உம்முடையநற்பணிதான்
பேர்பெற்றுடைய பெருமானே உன்பணிதான்
நீயிங்கேவந்ததென்ன காரியமென்றாள்
வந்ததொரு காரியத்தை வாய்திறந்து சொல்லுமென்றாள்
சந்தோஷமாக உங்கட்கு [illegible] யல்லவென்றாள்
இந்நாட்டானல்லகாண் இத்திசையானல்லகாண்
தென்னாடு [illegible] தலைவன்காண்
வைகைவளநாட்டான் வந்தான்காண் வீதியிலே
மாதுமணவாளன் வந்தான்காண் வீதியிலே
மாதுமணவாளன் வரவுசொல்லவந்தேனென்றாள்
தேவிமணவாளன் வரவுசொல்லவந்தேனென்றாள்

துற்சடை சந்தோஷப்படுகிறது.

தோகைமயிலனையாள் துற்சடையுந்தான்கேட்டு
தேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
சந்தோஷப்பட்டுச் சரீரங்கள்பூரித்து
வளநாடுபுத்திரனும் வந்தானோ அத்திபுரம்
மாதுமணவாளன் வந்தானோ வீதிதனில்
தென்னாடிசீர்மகனும் வந்தானோ திசைவிலங்கி
தேவிமணவாளன் வந்தானோ வீதியிலே
என்றுமனமகிழ்ந்து இருந்தாளே துற்சடையும்

தாதிக்கு வெகுமதிகொடுத்தது.

மாதுமணவாளன் வரவுசொன்ன தாதியற்கு
என்னத்தைநான்கொடுப்பேன் ஏலங்குழலியற்கு,
வச்சிரமாணிக்கம் வாரிக்கொடுக்கவென்றாள்
தோகைமயிலனையாள் துற்சடையாளேதுசெய்தாள்

ஏழாநிலையும் எழுநிலையுமேலேறி
மேலாந்தளத்தை விடுகதவைத்தான் திறந்து
பேகோணிவாசல் துறந்தந்தைபைங்கிளியும்
காசிபடியேறி கணக்கமிதித்தேறி
பவழப்படிமிதித்து பைங்கிளியும்பார்த்திருந்தாள்
போரஞ்சாமன்னர் புலந்திரனார்சீர்வடிவை
அரையில்செருகழகும் அம்பொன்னார்சேலையும்
உந்திச்செருகழகும் கச்சுகட்டியுள்மருங்கும்
கச்சுகட்டுவுள்மருங்கும் களிவரயும்பேரழகும்
காசிவளநாடாளுந் தர்னருடசீர்வடிவும்
காஞ்சிவளநாடாளும் கருணர் திருவழகும்
தக்கதப்புகழுடைய தருமரிடமேனிகளும்
வெற்றிமதயானை வீமருடகால்நடையும்
காண்டாவனமெரித்தக் காளைபுடைவீச்சும்
நாமமுடியான் நகுலதிடையழகும்
தாமமுடியான் சகாதேவன் பூமுடியும்
ஆறுபேர்தன்னழகை பெற்றுவந்தான் ஆணழகன்
அடியாருடன்பிறந்த நூற்றொருவர் அரசர்கள்
எந்தனுடன்பிறந்தார் இளவிசையர் நூற்றொருவர்
நூற்றொருவர்ராசர்களும் இவனுக்குள திரலேவ
நூற்றொருவர்பேரழகும் இவனழகுக்கீடாமோ
காஞ்சிநாடாளுங் கருணருமீடலவே
எல்லாரைப்போலே யிருக்கிறானிந்திரனும்
மன்மதனைப்போலே யிருக்கிறான்மன்னவனும்
மாதுமணவாளன் மன்மதனைபோல்தோணுது
கலந்தாரிக்கேத்தவன்காண கட்டழகன்சீர்மகனும்
மாதுக்கிசைந்தவன்காண் மணவாளன்பெற்றபிள்ளை

தாதிகள் ஆலாத்திசுத்தி காட்டுகிறது.

கண்ணேச்சல்கண்ணேச்சல் காவலனார்வீரியற்கு
ஆலாத்திக்காட்டுமென்றார் அர்ச்சுனனார்புத்திரற்கு
அங்கொருதாதி அறிவுடையாளோடிவந்து
இன்னமுறையெந்தனது என்றுசொல்லித்தாதியவள்
முத்தினுலாலாத்தி வேணநூறுயிரமாம்
பவளத்தாலாலாத்தி வேணதூறுயிரமாம்
கற்பூரஆலாத்திக் காட்டியந்ததாதிமார்
திருஷ்டிகழட்டித் தெருவெங்கும்விட்டெறிந்தார்
ஆலாத்திகாட்டி அணிபிழைமார்நீங்கின்றார்
தோகைபயிலனையாள் துற்சடையாள் ஏதுசொல்வாள்

மருமகன் வரக்கண்டு பள்ளியறை ஜோடிக்கிறது.

நாமக்கருங்குழலாள் தாதிமுகம்நோக்கி
மாதுமணவாளன் வருவானேமாளிகைக்கு

பாங்கிகளேநீங்களெல்லாம் பள்ளியறைசோடியென்றாள்
அங்குகிலநாதியர்கள அறிவுடையாளோடிவந்து
சொல்லப்பெற்றேமென்று சுருக்காயெழுந்திருந்து
கூறப்பெற்றோமென்று குமபிட்டெழுந்திருந்து
பள்ளியறையை பெருக்கிப் பைங்கிளிமார்தான் திறந்து
சாந்துநலங்கிட்டு எத்திசையுந்தெளித்து
சாந்துநல்தரையெழுகி சந்தனத்தால்கோலமிட்டு
குங்குமத்தாலே குளிரத்தரைமெழுகி
கட்டில்மெத்தைதனைக் கவிரித்துதரி
ஏழாயிரம்பொன்பெற்ற இந்திரவர்ணப்பட்டெடுத்து
இந்திரவர்ணப்பட்டெடுத்து எங்குமலங்கரித்து
காம்பரிந்தஜுங்கலைப்பூ கட்டிலின்மேல்பரப்பி
பொன்னூல்திரைவளைத்துப் பூமாலைச்சூட்டினார்
சன்னலின்மேலபன்னீரை சாடினாரெத்திசையும்
குடம்குடமாய்ப்பன்னீரைக் கொட்டித்தெளித்தார்கள்
கெண்டிகையும்பூமலரும் வைத்தார் அழகாக
கிண்ணியிற்சந்தனமும் கெண்டியில்தீர்த்தம்வைத்தார்
கச்சாயங்கொண்டுவந்து வைத்தார்கிளிமொழிக்கு
சோடித்தோமாச்சியென்று தொழுதிறங்கிதெண்டனிட்டாள்
இப்படியாக யிவரிருக்கும்வேளையிலே
போரஞ்சாமன்னர் புனந்திரனூர்வீரியரும்
மந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
மற்றுமொருவீதியிலே வாராமேனமன்னவனும்
திரளேமுடியானும் மன்னவனும் வாராமேன
நன்றுநிலாவெரிக்கும் நீலமணிமண்டபமும்
நடந்தால்நிலவெரிக்கும் நீலமணிமண்டபமும்
பவளத்தால்கால்நிறுத்திப் பதிங்காதம்பந்தலிட்டு
முத்தாலேகால்நிறுத்தி முக்காதம்பந்தலிட்டு
இப்படியாக இருக்குமந்தவீதிகளை
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து
யாருடையவீதியென்றான் அல்லித்திருமகனும்
புனந்திரன் மாமனார்வீதி வருகிறது.
அங்கிருக்குமன்னவர்கள் அறையர்துரையெல்லாம்
கேட்டபுனந்திரர்கு கேள்விசொல்லமாட்டாமல்
நின்றபுனந்திரற்கு சொல்லவுமாட்டாமல்
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்கும்பூமுடியார்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னவர்முகங்கருகி வார்த்தைகளேதுசொல்வார்

மாலைமுடியானை மாமன்மார் வீதியென்றான்
தங்கைமணவாளன் தறுதலையன் வீதியென்றான்

புனந்திரன் சபதங்கூறல்.

போரகுசாமன்னர் புனந்திரனுரேதுசொல்வார்
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
சீறிஎறிபறந்து சிங்கக்குட்டிபோலுரைப்பான்
பிள்ளையைக்கொன்றான் பெரும்பாவிதன்தெருவோ
மைந்தனைக்கொன்றதொரு மாபாவிதன்தெருவோ
வேறுவழியில்லையோ வேந்தர்பெருமானே
மறித்துவழியில்லையோ வேந்தர்பெருமானே
பிள்ளைகொன்றவீதியிலே போகலாமா மன்னவரே
மைந்தர்கொன்றவீதியிலே வரலாமோ மன்னவரே
தாமமுடியான் தறுதலையன்பூமுடியை
சாமத்துக்குள்ளே தாக்கொல்வேனென்று
அஞ்சாநாழிக்குள்ளே அறிந்துஎறிவேனென்று
கொட்டினான்மேளங் குமரவிட்டான்பேரிகையை
ஆழிசுரைப்பான அடித்தான்ரணபேரி
ஊழிகாலத்திடிபோல் ஊதினார்சின்னத்தொனி
ஊதினான்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை உலகுதலைதுமுக்க
செம்பொன்னாற்காளை திசைவிளங்கவூதினார்
பொன்னினாற்காளை பொருந்தநின்றூதினார்
இப்படியாகஇந்திரு மிவிருக்கும்வேளையிலே
ஊதினசின்னத்தொனி கேட்டாளாமுத்தமியும்

துற்சடை புலம்புதல்.

தோகைமயிலனையாள் துற்சடையாள்தான்கேட்டு
மரம்வெட்டிசாய்த்தாப்போல் மாதருங்கிழ்விழுந்து
என்-மாலுக்குவாழ்வு வருகிறதுஎன்றிருந்தேன்
என்-மங்கிலியம்போரசேதி மண்மேலேநானறியேன்
தாலிபறிபோகுமென்று தரணியிலேநானறியேன்
என்றுமனதுருகி எங்கிபுலம்புகிறாள்
தாமமுடியாள் தரையில்புரண்டழுதாள்
ஆனந்தமாரியரு அடித்துபுரண்டழுதாள்
அந்தக்குரல்கேட்டு ஆனந்தவாழ்மாரி
கருநீலப்பூங்குழலாள் கலந்தாரியோடிவந்து
வாரியெடுத்து மாதாவைகொண்டணைத்து
தொட்டிட்டுமாதா துகிலால்முகந்துடைத்து
வந்துவிழுங்கண்ணீரை வெண்துகிலாள்தான்துடைத்து

பூணாரகேசத்தைப் புழுதிபலதுடைத்து
கலந்தாரி பிள்ளையை வரவழைத்தல்.
பட்டுத்துகிலாடை தொட்டுமேலுடுத்தி
அஞ்சுவயதுடைய அருச்சுனரைத்தானழைத்து
ஐவருக்குமுன்பாக அரசனைப்போகவிட்டு
மைந்தரைப்போகவிட்டு வார்த்தையறிந்திடலாம்
பிள்ளையைபோகவிட்டு பேச்சியறிந்திடலாம்
ஆறிவிடும் ஆறிவிடும் ஆச்சியரே ஆறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடுந் தேவியரே தேறிவிடும்
கருநீலபூங்குழலாள் கலந்தாழிநாயகமும்
அங்குமொருதாதியரை ஆரணங்குதானழைத்து
அஞ்சுவயதுடைய அருச்சுனவீரியரை
தாதி அழைக்கிறது.
அவன்யெங்கேயிருந்தாலும் எவ்விடத்தில்சென்றாலும்
அரைநாழிப்போதே அழைத்தோடிவாருமென்றாள்
அப்படிக்கேநல்லதென்று யானந்தவாழ்மாரி
பொருளவள்தாதி பொன்னுபரணமின்ன
பொற்பிறப்பங்கோல்பிடித்துப் போருளவள்தாதி
தென்னமரச்சோலைத் திரும்பியந்ததாதியரும்
மாமரச்சோலைவந்து மன்னவரைக்கண்டாளே
உப்புகந்தமாடுகிற உத்தமனாண்டைவந்து
அமுதுபொசிப்பதற்கு யாச்சியழைத்தாள்காண்
வாருமையாசுந்திரரே வந்தமுதுகொள்ளுமென்று
தூக்கிமடியில்வைத்து துருசாய்வழிநடந்தாள்
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
தேரோடும்வீதி தெருவும்பலதாண்டி
தோகைமயிலனையாள் துற்சடையாள்பாவிவந்து
கருநீலபூங்குழலாள் கலந்தாரிமுன்னேவந்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனரும்வந்தார்காண்
அர்ச்சுனர்க்கு போசனமிட்டு சிங்காரித்தல்.
அமுதுபடையுமென்றார் ஆனந்தம்வாழ்மாரி
கருநீலபூங்குழலாள் கலந்தாரிதான்கேட்டு
அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசருக்கு
மஞ்சனீராட்டி மயிர்முடிந்துபின்னல்போட்டு
ஈரமுலர்த்தி யிழைசேர்ந்தபட்டுடுத்தி
சீரானநெற்றியிலே திருநீற்றுக்காப்புமிட்டு
கமலதிருமுகத்தில் கஸ்தூரிபொட்டுமிட்டு
ஐவரதுமோதிரம் அழகுபெறச்சாற்றினார்
வட்டபதக்கங்களும் மார்பிலைந்ததாழ்வடமும்
தாலிபதக்கங்களும் சன்னல்பின்னல்தாழ்வடமும்
தொப்பிளிலேமாணிக்கம் வைததாளேசுந்திரற்கு

கொம்பில்சிறுதேனுங் கோதுபடாசர்க்கரையும்
மலையில்சிறுதேனும் பங்காளச்சர்க்கரையும்
கூட்டி குழப்பியந்த கொற்றவர்க்குவூட்டினாள்
தள்ளிப்பிசைந்துமந்த தார்வேந்தர்கூட்டினாள்
உண்டுபொசித்தபின்பு உத்தமற்குகையலம்பி
பொன்னினாற்துப்பட்டி போர்த்தியவள்மூடி
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனரேநீர்கேளும்
வைகைவளநாட்டார் வந்தாராம்உங்களையர்
உங்களையருக்குஇப்போது அதிசயமாய்நீபேசி
மன்னவரைக்கூட்டி வரவழைத்துவாருமென்றாள்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனனுந்தான்கேட்டு

அர்ச்சுனன் மாதாவுக்கு உத்தரவுகூறுதல்.

மாதாவுரைகேட்டு மைந்தர்மனமகிழ்ந்து
ஆச்சியுரைகேட்டு ஆணழகன்சம்மதித்து
படியைவிட்டுக்கீழிறங்கி மன்னவன்யேதுசொல்வான்
கைகட்டிவாய்புதைத்து கட்டழகன்யேதுசொல்வான்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னாச்சிநீர்கேளும் என்னுமடயநல்வார்த்தை
இவர்கள்பட்ட அக்கிரமம்நீயறிவாய்
பஞ்சவர்கள்பட்ட பரிபோகந்தானறிவாய்
நூலார்கடிந்திரளார் நூற்றொருவர்அம்மான்மார்
மண்டலத்தார்தானறிய மன்னவரைத்தானழைத்து
ஐவர்பஞ்சபாண்டவரை அங்கேவரவழைத்து
மாயத்தால்சூதாடி மண்ணுருகமண்பறித்து
மானைதுகிலுரிந்து மன்னவரைக்காடோட்டி
கோதைதுகிலுரிந்து கொற்றவரைக்காடோட்டி
பருக்கல்உறுத்த பனிவந்துதலைமோத
ஓடும்பருக்கலது உள்ளங்கால்தானுறுத்த
கவிந்தமரத்தருகில் கனபள்ளிகொண்டிருந்தார்
வைகைவளநாடான் சுவர்ந்தாரேயாமாகில்
தண்ணியிலேநஞ்சிடுவார் தாமமுடியார்க்கு
அடைக்காயுங்நஞ்சிடுவார் ஆனந்தமார்பனுக்கு
பொய்யாதினமிடுவார் பொய்கைவளநாட்டாற்கு
உன் அம்மான்மார்செய்த அக்கிரமம்நீகேளாய்
மாமன்மார்செய்த வஞ்சனைகள்நீயறிவாய்
அம்மான்மார்யெல்லாம் அழுங்கலுமாண்டபின்பு
மாமிமார்தாலி யறுத்தபிரகாக
அத்தைமார்தாலி யடங்கலும்அறுத்தபின்பு
ஐபாவைத்தேடி அழைத்தோடிவாரதுவும்
வைகைவளநாட்டார் வருவாருன்மாளிகைக்கு

பாலமுர்தமுண்பதுவும் பத்தியுலாவதுவும்
அடிசல்சமைப்பதுவும் ஆலித்துவாழ்வதுவும்
அன்றைக்கும்ஆகட்டும் ஆச்சியரேயென்றுரைத்தான்
கருநீலப்பூங்குழலாள் கலந்தாரிதான்கேட்டு
மைந்தருரைத்ததற்கு மாதாமனமகிழ்ந்து
உச்சிமுகந்துபிள்ளை உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கம்தடவி பவளவாய்முத்தமிட்டு
மைந்தனைத்தானிடுக்கி வந்தாளேமாதாயிடம்

அர்ச்சுனன் துற்சடையென்னும் பாட்டியாரைக் காணுகிறது.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனராசாவும்
பாட்டியார்பாதமது பார்த்தன்வணங்கிநின்றான்
துற்சடையாள்பாதம் செல்வன்வணங்கிநின்றான்
தோகைமயிலனையர் துற்சடையுந்தான்பார்த்து
வாழ்வீர்வளந்திடுவீர் வர்த்திப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூணதுபோல் கலங்காதரசாள்வீர்
என்னைப்பெருவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைபெறுவீர் பெருமானைப்போல்வாழ்வீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதேதாமேடவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டஞ்சேர்த்திடுவீர்
மாத்தானைவென்றிடுவீர் மண்டலத்தையாண்டிடுவீர்
எதிரிகளைக்கொன்றிடுவீர் எல்லையரசாண்டிடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்தான்

சின்ன அர்ச்சுனனுக்கு துற்சடையாள் தன்சடையாள்
காப்பாற்றும்படிகூறுதல்.

அஞ்சுவயதுடைய அர்ச்சுனரேநீர்கேளும்
ஆர[illegible]பட்டாலும் அம்பலத்தார்பட்டாலும்
எவ்வெவர்கள்பட்டாலும் இளவரைசிமாண்டாலும்
நூலார்சுமித்திரனார் நூற்றிருவர்பட்டாலும்
[illegible] கர்ணனவர்மாண்டாலும்
[illegible]
தாலிதருவீரே சுவாமிபெருமானே
மங்கிலியம்வாங்கி வருவீரேமன்னவரே
வைகைவளநாட்டான் வந்தாரேயுங்களையர்
உங்களையருக்கிப்போது அதிசயமாநீயுரைத்து
மங்கிலியம்நிற்கவேதான் வழியாருமன்னவனே
தாலிகயிறிருக்க வரந்தாரும்புண்ணியனே
என்றுமவருரைக்க ஏதுசொல்வானருச்சுனனும்

பாட்டியார் தூர்சடைக்கு சின்ன அர்ச்சுனன் உத்தரவுகூறுதல்.

மடியைவிட்டுக்கீழ்குதித்து வந்துமுன்னேநின்றல்லவோ
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகனேதுசொல்வான்
ஆச்சிநீர்கேளும் அடியேனொருவார்த்தை
என்னாச்சிநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
நாலார்கடுந்திரளார் நூற்றொருவரனைவோரும்
ஐவரையுங்கொண்டுவந்து ஆட்டிவைத்தாரனைவோரும்
பாஞ்சாலியைக்கொண்டுவந்து பற்றிதுகிலுரிந்தார்
துரோபதையைக்கொண்டுவந்து துகிலுமுரிந்தாரே
துரோபதைநாயகியைத் தூங்குமஞ்சமேற்றிவைத்தார்
அம்பலத்தார்தங்கள்முன்னே ஆட்டாதுமாட்டிவைத்தார்
ஆட்டினதுமல்லாமல் ஓட்டிவிட்டாரூரைவிட்டு
கட்டழகரைவருமே கானகத்தில்வாசம்பண்ணார்
ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையும்
எப்போதுமேயுமென்று ஏங்கிமனந்தளர்ந்து
வனமாய்வனந்திரிந்தார் வையகங்கள்தானறிய
நாட்டைத்துறந்தார்கள் நல்லபதியிழந்தார்
பட்டணத்துறந்தார்கள் வேந்தர்களைவருமே
ஊரைத்துறந்தார்கள் உற்றபதியிழந்தார்
மன்னரைவருந்தேவியுமாய் வனத்திலேவாசம்பண்ணார்
கோதாரவடிவழகி துரோபதைநாயகியாள்
அவனமுறுகிப்போப்பனையும் ஆருமில்லைவையகத்தில்
திருவமுறுகிப்போம்பனையும் தேசத்தில்கண்டதில்லை
தேசத்தையாளும் சிரீயாதிரன்தானும்
காலமுடியானும் மைத்துனனைதானழைத்து
துரோபதையைக்கொண்டுவந்து தூங்குமஞ்சமேற்றிவைத்தால்
பாவையைக்கொண்டுவந்து படுக்கமஞ்சமேற்றிவைத்தால்
இப்பெரியநாடும் எழில்பெரிசீமைகளும்
என்னுடையநாடுங் கர்ணமறையாதினவும்
அத்தனையுந்தாரேனென்றான் ஆனந்த[illegible]மார்பன்
நல்லதென்றுசம்மதித்தான் காமமுடியானும்
துரோபதைதன்பகைகொண்டுவந்து சேர்க்கிறேனென்றுசொல்லி
தாம்பூலம்பெற்றானே காமமுடியானும்
ஒண்டியாகப்போய் உத்தமனும்போகலுற்றான்
அவரொளித்திருக்குமவ்வனத்தை உத்தமனுந்தான்தேடி
ஒக்கப்பிறந்த உடற்பிறப்பெண்ணாதே
மைத்துனரோர்தேவியென்று மனதிலெண்ணாமல்
பஞ்சவர்கள்தானிருக்கும் பாரவனம்புகுந்து
ஒருவரில்லாவேளையிலே ஆணழகர்வந்துநின்று
கோதாரவடிவழகி துரோபதையாள்தன்னுடனே

நல்லத்தனமாக நாயகிக்குத்தானுரைத்து
அவளையழைத்துப்போக வாலோசனைகள்செய்து
ஆயுதத்தைகீழ்போட்டு ஆணழகன்தேரேறி
துரிதமுடன் தேரைநடத்தலுற்றான்
துரோபதையுந்தான்பார்த்துத் துடித்துமிகவெழுந்து
ஆயுதத்தைதானெடுத்து அண்ணுமேவதானழைத்தாள்
இந்தாருமாயுதங்கள் என்றழைத்தாள் துரோபதையும்
மூன்றும்படியேறி கொடுத்தாள்மொய்குழலும்
அவளெட்டிக்கொடுக்கையிலே தட்டிநடத்திவிட்டான்
அப்போதுதுரௌபதையாள் அலறிப்புலம்பினுள்
குய்யோமுறையோவென்று கூச்சலிட்டுத்தானழுதாள்
கூச்சல்குரல்கேட்டு கொற்றவர்களோடிவந்தார்
அலறினசொற்கேட்டு ஐவர்களுமோடிவந்தார்
இவ்வுலகந்தானறியும் எம்பெருமாள்தானறியார்
மண்டலங்கள் தானறியும் மன்னர்கள்தானறியார்
சோலைமலருடைய சொக்கரவர்தானறியார்
உந்தன்மணவாளன் வந்தபெருங்கோலம்
கழுதையாய்போகவிட்டார் கட்டழகர்வீரியர்கள்
பஞ்சவர்கள்பட்டதொரு பாடுகள்மெத்தவுண்டு
உங்களால்பட்டதெல்லாஞ் சொல்விமுடியாது
உனக்குத்தாலிதருகிறது எப்படிகாண்தையலரே
எல்லார்தாலிகளை அந்திக்கறுத்தாலே
பாட்டியேஉன் தாலி பகலிக்கறுப்பேனென்றான்
தோகைமயிலணையாள் துற்சடையுந்தான்கேட்டு

சின்ன அருச்சுனன்சொல்லப் பாட்டி புலம்புகிறது.

தூதுவரைத்தானழைத்து தூக்கிடவுமென்றான்
நாலுபேர்தூதுவர்கள் நன்றாகத்தானெடுத்தார்
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தான்
நாலுபேர்தூக்கி நடந்தார்கள்வீதியிலே
அந்தந்தவீதிகளில் வாழ்கின்றமன்னவர்கள்
இதுஎன்னகோரமென எல்லவரும்வோடிவந்து
கட்டையவிழ்த்தார்கள் காவலணர்வீரியர்கள்
குய்யோமுறையோவென்று கூவினர்மன்னவர்கள்
ஐயையோதெய்வமென்று அலறிப்புலம்புகிறார்
அந்தத்தெருதாண்டி மற்றுமொருவீதியிலே
தச்சன்கருமான் தாமறிந்தசிற்பாசாரி
மந்திரிபிரதானி மற்றுமுள்ளராசாக்கள்
கட்டவிழ்க்கவந்தார்கள் காவல்ணர்வீரியர்கள்
தொட்டுஅவிழ்த்திடவே ஒட்டமிகநடந்தார்கள்
ஒருஅக்ரோணிசேனையுடன் உத்தமர்கள்போனார்கள்
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தான்

விடைபெற்றெழுந்திருந்தான் வேந்தன்பெருமானும்

## அருச்சுனன் புறப்படுகிறது.

வீரமதயானை வெள்ளானைமேலேறி
முக்கம்பம்தட்டி முதுகின்மேல் கல்லைவைத்து
தேசத்தையாளுந் திரியோதிரன்சபையில்
அம்பலத்துவாசலிலே எல்லவரும்போய்விழுந்து
அங்கிருக்குமன்னவர்கள் அரையர்துரைகளெல்லாம்
குஞ்சிரிப்புக்கொண்டு குலுங்கநகைத்தார்கள்
தட்டிநகைத்தார்கள் தாமமுடியார்கள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
மன்னன்மனஞ்சிவித்து மறுமம்வெளிப்பட்டு
தலைகுனிந்துவீற்றிருந்தான் தாமமுடியானும்
ஐயகளத்துதித்த துரோணரவர்பார்த்து
அங்கிருந்ததூதுவரை யானைமுகர்தான்பார்த்து
காஞ்சிகொடாளும் கருணைக்கூப்பிடென்றார்
தூதுவனுந்தான்கேட்டுத் தொழுதிரங்கிதெண்டனிட்டு
அருளாருநுமன்னையா அப்படிக்கேயாகுமென்று

## குதிரையின் சிறப்பு.

ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடைகள்
கால்நடுங்கக்கைநடுங்கக் கட்டழகன்வீரியனும்
கொலைகள்நடுங்கிடவே குப்புரவேதான்படுத்தான்
தேரின்மேல்தான்படுத்தான் திஷ்டோதிரப்பெருமான்
அஞ்சுவயதுடைய அருச்சுனருந்தான்பார்த்து
நெற்றிக்குநேர்பிடித்து விட்டானொருபாணம்
வந்தசிலபாணம் வல்லிடிபோலேவிழுந்து
திஷ்டோதிரனும் தோற்றான்சிகரமற்றான்
தோற்றான்சிகரமற்றான் தேர்ப்பாகன்முடியுமற்றான்
அரசுஅற்றான் ஆணியற்றான் அம்புறுத்தூணியற்றான்
தேரைவிட்டுக்கீழ்குதித்து திருடன்போலாடுகிறான்
தேருமுடைந்தது செப்புரவிசெத்தது
ஒருத்தனாய் ஓடுகிறான் உத்தமனார்வீரியனும்
பதாதியாய் ஓடுகிறான் பாவிதிஷ்டோதிரனும்
திஷ்டோதிரன் ஓடுவதை சிறுவனவன்பார்த்து
அஞ்சுவயதுடைய அர்ச்சுனருமேதுசொல்வார்
போகாதேபோகாதே போர்மன்னாபோகாதே
முன்னையும்பூசை முதற்பூசைவந்தாயே
பொன்றைக்கானை பொருந்தநின்றாதினேன்

சின்ன அருச்சுனன் பாட்டன்மார்பேர் சொல்லுவதும்
பாட்டிமார் ஏழுபேரையும் தான் மாலையிட்டதாக
தாரைசின்ன மூதுகின்றது.

என்னவென்றா திஞன் எழில்விஜயன்போனவன்
பொய்யாதவாசகஞர் புகழுடைய தருமலிங்கம்
தச்சன்கருமான் மறிந்தசிப்பாச்சாரி
மந்திரிபிரதானிகள் மற்றுமுள்ளராசாக்கள்
கட்டவிழ்க்கவந்ததொரு கனமுள்ளவீரியரும்
ஓட்டிக்கொண்டுபோகவென்று உத்தமனுஞ்சாபமிட்டான்
தெட்டுவந்தமன்னரெல்லாம ஒட்டிக்கொண்டுபோகவென்றான்
எந்தன்வம்மிசத்தாரவர் து தொட்டால்விட்டுவிடவேணுமென்று
மானங்கெடுக்கவேண்டும் மன்னவர்களமண்டபத்தில்
பங்கப்படுத்தவேண்டும் பாட்டனுக்கனுப்பவேதான்
என்றுமவனுரைத்து எழுந்திருந்தார் அர்ச்சுனனும்
உனருக்கொடியறுத்தான் உத்தமனார்வீரியனும்
பச்சைக்கொடியறுத்தான் பாலகனருச்சுனரும்
இஷ்டோதிரன் கைகாலை சிறுவனவன்பிடித்து
கால்கட்டுங்கைகட்டுங் கட்டியந்தகாவலனும்
அசையாமல்கட்டினுன் அனந்தவாழ்மார்பன்
காலுகால்மத்தியிலே நடுக்கம்வொருகொம்பைவிட்டு
பண்ணிவடிவாக பார்த்தனைசோடித்து
கூர்மவடிவாகக் கொண்டுவலனைச்சோடித்து
என்னவென்றுசாபம் இடுகிருனருச்சுனனும்
கட்டவிழ்க்கவந்ததொரு காவலனார் அத்தனையும்
எட்டடியும்ஓரடியாய் விட்டுமிகநடந்து
பத்தடியுமோரடியாய் மற்றிவருநடந்து
காஞ்சிநாடாளுங் கருணருக்குத்தெண்டனிட்டான்
தெண்டனிட்டதுதன் திருப்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதான்
காஞ்சிநாடாளும் கருணரவர்பார்த்து
நீயாருடையதுதன் அறியவுரையுமென்றான்
ஓடிப்பிழைத்தீரென்றான் உத்தமனார்வீரியனே
உந்தனுலாகாது வேடிப்பிழையுமென்றான்
பாலனல்லவென்றுசொல்லிப் பதறியங்கேவில்லெடுத்தான்
உந்தனுலாகுமோ உத்தமனார்வீரியனே
அஞ்சுவயதுடைய அருச்சுனரைத்தான்பார்த்தான்
அறியாதபாலகன்மேல் அரசன்வந்துதானெதிர்த்தான்
பூதக்கிடங்கதனில் போட்டுஅடையுமென்றான்
அதுக்கும்பிழைத்தேனே ஆயருடபுண்ணியத்தால்
அங்கேகஒருநாளில் ஆண்டிவடிவெடுத்தான்

படம்விரித்துப்பிச்சைகேட்டுப் பாவாடைவாங்கிவந்தேன்
பாப்பானும்பாப்பாத்தி போலவடிவெடுத்தான்
அல்லியுடமாளிகையில் அங்கேவந்துதானமர்ந்து
இலட்சமிநோன்பு நடத்தினேமப்போது
குஷ்டரோகிவேஷங்கொண்டு கட்டினேனப்போது
அவளுடனிருந்துப் போய்சேர்ந்தேனத்திபுரம்
அவளை-வந்துமடலூர்ந்த மைத்துனனென்றாதினான்
மேசம்பயின்றெடுத்த மின்னொளியாள்நாயகியை
தாலிகட்டிக்கொண்ட தனஞ்செயனென்றாதினான்
வந்துமடலூர்ந்த மன்னவனென்றாதினான்
பங்கயஞ்சீர்கண்ணாள் அவளக்கொடியாளை
மைந்தனுக்குத்தேர்வேண்டி வந்தேனவள்ராச்சியத்தில்
வேட்டைகளாடியவர்தான் வேல்பொருதுங்கண்ணாளும்
கட்டழகிநாயகியைக் கண்டுமையலானேன்
அன்னவடிவெடுத்து அவளைவந்துமாலையிட்டேன்
அவன்-மாலையிட்டுக்கொண்ட மணவாளனென்றாதினான்
தாலிதரித்த தனஞ்செயனென்றாதினான்
கட்டாதபொன்னாலகம் ஏறிப்போயித்திரபடை
புட்பமலர்கொண்டுவந்த புண்ணியனென்றாதினான்
நாயமுடையான் நகுலனென்றாதினான்
சத்திரக்கொடிவேந்தன் சகாதேவனென்றுஊதினான்
விருதுமுழங்கிடவே வேந்தன்நடக்கலுற்றான்
ஊதினான்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை உலகுதலைதூக்க
செம்பொன்னாற்காளை திசைவிளங்கஊதினான்
பொன்னிறற்காளை திசைவிளங்கஊதினான்
அருச்சுனனார்போகிறனென்று யாற்றுதாரைசின்னம்
விசயனார்வாரோனென்று முரசுமுழங்குது
ஐவர்களும்வாறோமென்று யாற்றுதாரைசின்னம்
காதவழிக்கிப்பாலே ஊதுகாரைசின்னம்
போருஞ்சாமன்னர் புலந்திரராசாவும்
ஊதினசின்னத்தொனி கேட்டானுத்தமனும்

சின்ன அர்ச்சுனன் ஊதுகிறதாரை சின்னத்தை பொன்னு
மலைநாடானுடன் புலந்திரன் ஆலோசனைசெய்கிறது.

மாமாமுகம்நோக்கி மன்னனுமேதுசொல்வான்
ஐவருடவிழுது அதுவாசமுழங்கிற்றே
ஆர்வரவுமாமா அறியவுரையுமென்றான்
பொன்னுமலைநாடானும் அண்ணவும்ஏதுசொல்வார்
மைந்தர்படையெடுத்து வருகிறான்மன்னவனே

பிள்ளைபடையெடுத்து வருகிறான் புண்ணியனே
எதிர்போய்காணுமென்றார் எத்திலங்குபூமுடியார்
போரஞ்சாமன்னவன் புனந்திரனுந்தானகேட்டு
ஐவர்திசைநோக்கி யானைமுகனதெண்டனிட்டான்
யானைவிட்டுக்கீழிறங்கி யானைந்தவாழ்மார்பன்
தகப்பனும்பிள்ளையும் யானைவிட்டிறங்கி எதிர்கொண்டுகாண்கிறது.
காலால்நடக்கலுற்றான் காவலன்வீரியனும்
கயிலாசவாசனை ஞாயறுகித்தாற்போல்
எட்டிநடைநடந்தான் எதிரேநிற்குஞ்சூரியன்போல்
அஞ்சுவயதுடைய அருச்சுனருந்தானபார்த்து
ஐயர்குறிப்பறிந்து அடிவணங்கிதெண்டனிட்டு
யானைவிட்டுக்கீழிறங்கி யானைந்தவாழ்மார்பன்
வீரமதயானை வெள்ளானைவிட்டிறங்கி
தோட்டமதுதிறந்து தொன்னைதைத்துபூவெடுத்து
மல்லிகைமுல்லை மருவுமருக்கொழுந்து
பாதிரிமுல்லை பருத்ததொருசெண்பகமும்
இருவாட்சிபுன்னை இசைந்ததொருகஸ்தூரி
இருமல்லிகுடமல்லி சேர்ந்ததொருபுட்பமெல்லாம்
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
வீசிநடந்தானே வேல்புருவங்கண்ணனும்
அய்யருக்கெதிரேவந்து அருச்சுனராசாவும்
தகப்பனுக்குப்பிள்ளை சாஷ்டாங்கிக்கிறது.
பன்னீரால்காலலம்பிப் பட்டாலடிதுவட்டி
வண்ணவண்ணப்பூமலரை விதவிதமாய்த்தானெடுத்து
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுவாள்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
அஞ்சுவயதுடைய அருச்சுனன்வீரியனும்
நின்றானேபூமியிலே நெடுங்கால்கடுத்துவிழ
போரஞ்சாமன்னர் புனந்திரவீரியனும்
ஏதொன்றுகேளாமல் ஏறமுகம்பாராமல்
வாயைத்திறவாமல் மறுவார்த்தைசொல்லாமல்
மறுவார்த்தைசொல்வாமல் மாமாகிநின்றுவிட்டார்
எண்ணுதுஎண்ணுது இந்திரவீரியற்கு
தோணுந்தோணுது தோகைநல்லாள்புத்திரற்கு
அங்கொருதூதனை அருகாகவோடிவந்து
தூதர்பொன்னிமலைநாடானை அர்ச்சுனனுக்கு
அம்மானென்றுரைத்தது.
அஞ்சுவயதுடைய அர்ச்சுனர்க்குச்சொல்லுவான்

உங்கள்-ஐயருக்கம்மான் அவர்காணும்என்றுசொன்னான்
அஞ்ஞவைபுதுடைய அருச்சுனருந்தான்கேட்டு
மோப்பிமகனாரே முன்னமேசொல்லொணாதோ
அறியாதபாலனுக்கு அப்போதேசொல்லொணாதோ
என்றுஅவன்கோபங்கொண்டு எத்திலக்குமுடியான்
கோபித்துகண்சிவந்து கொல்லும்புலியது
வேர்த்துவிரிவிரித்து விழிகள்சிவப்பேறி
அத்தனைகோபமெல்லாம் அடங்கிஒருபுறமாய்
பூவும்புதுமலரும் பொன்னுறுஅட்சதையும்
பன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
பொன்னுமலைநாடாரும் அண்ணருக்கெதிரில்வந்தார்
கொண்டுவந்தபூமலரைக் குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
அறியாதான்செய்தபிழை ஐயாபொறுத்தருளும்
பார்த்தனவன்செய்தபிழை பாட்டாபொறுத்தருளும்
பொறுத்தருளவேண்டுமென்று பின்னொருகால்தெண்டனிட்டான்
இன்னம்பொறுக்கவென்று இனியொருக்கால்தெண்டனிட்டான்

பொன்னுமலைநாடான்; அருச்சுனனை ஆசிர்வதிக்கின்றது.

பொன்னுமலைநாடானும் அன்னா அவர்பார்த்து
பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
திரேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
அருச்சுனராசாவை அவருமேவாழ்த்துகிறார்
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திப்பீருந்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீராசையாண்டிடுவீர்
விற்பதித்ததூணதுபோல் விளங்கஅரசாள்வீர்
சாந்தனைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைப்பெறுவீர் பெருமானைப்போலிருப்பீர்
போருக்குப்போயிடுவீர்பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளத்திலே வீரபட்டங்கட்டிவைப்பீர்
ஆலேபோலேதழைத்து அறுகுபோல்வேரூன்றி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திருப்பீர்
வாழ்வீர்காணென்று மனதாரவாழ்த்துகிறார்
மைத்துனரைக்கொஞ்சி எடுத்துமடியில்வைத்து
வருகவருகவென்று வள்ளல்வருகவென்றார்
அதிகாரஅச்சுதரே அய்யாவருகவென்றார்
திருவருகபொன்வருக தேவேவருகவென்றார்
குடிகாரகொற்றவருமைக் கொண்டுவருகவென்றார்

சொக்கர்திருவாசலுக்குத் தூண்டாமணிவிளக்கே
கப்பலுஞ்சோங்கும் கரைதுறையுமுள்ளவனே
சங்கின்றமுத்துஞ் சலாபமுடையவனே
ஐவர்க்குநூற்றுவர்க்கும் அழகானபொம்மையே
அழகியசீர்கொம்பனையாள் அல்லியும்பொம்மையே
ஐயாவருகவென்று அணைத்தார்மடியேலே
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்தார்
உச்சமுகந்துபிள்ளை உள்ளங்கால்முத்தமிட்டு
பச்சந்தடவி பவளவாய்முத்தமிட்டு
போரஞ்சாமன்னர் புனந்திரவீரியர்மேல்
கண்சாடைக்காட்டினார் காவலன்பூவீரியரும்
காட்டினசாடை யறிந்ததகாதலனும்
மடியைவிட்டுக்கீழ்குதித்து மன்னர்பெருமாளிடம்
அஞ்சுவயதுடைய அருச்சுனராசாவும்
உரிந்தொருசேலையது வுத்தமனுங்கைபிடித்து
போரஞ்சாமன்னர் புனந்திரனார்முன்னேவந்து
ஐயாவின்பாதம் அடிவணங்கிதெண்டனிட்டான்
மன்னவனார்பாதம் வணங்கினான்மன்னவனும்
பொன்னுமலைநாடாளும் பேரழிஅண்ணாவும்

### பொன்னுமலைநாடான் புனந்திரனை பிள்ளையை எடுக்கச்சொல்லுவது.

போரஞ்சாமன்னர் புனந்திரர்க்குஎதுசொல்லுமென்றார்
வந்துபணிந்தவனை வாரியெடுக்காமல்
வாரியெடுக்காமல் வண்ணமடிவைக்காமல்
நின்றனருச்சுனனும் நெடுங்கால்கடுத்துவிழ
மண்மேலேநிற்கையிலே மைந்தன்கால்நோகாதே
பூமியிலேநிற்கையிலே பொன்னுங்கால்நோகாதே
மைந்தனைக்கொஞ்சி எடுங்காணுமன்னவனே
பிள்ளையைக்கொஞ்சி எடுங்காணும்புண்ணியரே
என்றுமவருரைக்க ஏதுசொல்வாரிந்திரரும்
ஐவர்பஞ்சபாண்டவரும் ஆரணங்குதுரோபதையுப்
அவர்களெடுக்காதே அருங்குழந்தைதீண்டேனென்று ஐ
மன்னரெடுக்காதே மைந்தனைத்தீண்டேனென்றான்
புண்ணியர்கள்தீண்டாதே பிள்ளைஎடுக்கேனென்றாள்
ஆச்சாரியர்காணாதே அருங்குழந்தைதீண்டேனென்றான்
பொன்னுமலைநாடாளும் அண்ணாவுமேதுசொல்வார்
எங்காணுமன்னவனே இந்தமதிவுந்தனுக்கு
மைந்தனைக்கொஞ்சி எடுங்காணுமன்னவனே
பிள்ளையைக்கொஞ்சி பிடிங்காணுமன்னவனே

### புனந்திரன் சின்ன அருச்சுனனை எடுக்கிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
நாளதுகேட்டு நடுநாள்முகூர்த்தமிட்டு
தேனல்லோதாரன் திரையெடுத்துத்தான்பரப்பி
தட்டோடேவெற்றிலையாம் சாதிக்களிப்பாக்காம்
கொத்தோடேவாழைப்பழம் கொண்டுவரச்சொல்லி
காயாம்புமேனியனும் சர்க்கரைதான்வணங்கி
காணிகள்பூமிகள் கடுகெனவேதானம்பண்ணி
நாமமுடியானுக்கு நாமகரணம்பண்ணி
அருச்சுனராசனென்று அவனுக்குப்பேருமிட்டு
ஐயாவருகவென்று அழைத்தாரேஇந்திரரும்
அஞ்சுவயதுடைய அருச்சுனனுக்தான்பார்த்து

### தகப்பன் பிள்ளையை ஆசீர்வதிக்கிறது.

வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூணதுபோல் கலங்காதரசாள்வீர்
கற்பதித்ததூண்போல் விளங்கவரசாள்வீர்
என்னைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைப்பெறுவீர் பெருமாள்பதம்பெறுவீர்
போருக்குப்போயிடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவீர்
மாதர்களைமாலையிட்டு மைந்தர்களைப்பெற்றிடுவீர்
கன்னிகளைமாலையிட்டு பிள்ளைகளைப்பெற்றிடுவீர்
பெற்றிடுவீர்பெற்றிடுவீர் பிள்ளைபதினாறும்
எதிரிகளைச்சங்கரித்து எல்லையரசாண்டிடுவீர்
மாத்தானைவென்றிடுவீர் வையகத்தையாண்டிடுவீர்
எதிரிகளைச்சங்கரித்து எல்லையரசாண்டிடுவீர்
மாத்தானைவென்றிடுவீர் வையகத்தையாண்டிடுவீர்
மதுரையரசாண்டு மனதாரவாழ்ந்திடுவீர்
ஆலைபோல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாழ்ந்திருப்பீரென்று மனங்குளிரவாழ்த்தினார்
மைந்தனைவாழ்த்தி மனங்குளிரவாழ்த்தினார்
வருகவருகவென வள்ளல்வருகவென்றான்
திருவருகபொன்வருக தேனேவருகவென்றான்
அதிகாரஅச்சுதனே அப்பாவருகவென்றார்
குடிகாரகொற்றருமை கொண்டுவருகவென்றான்
அக்கத்துக்குள்ளே அமர்ந்திருக்கும்பாற்குடமே

### சின்ன அருச்சுனனை புனந்திரன் கொஞ்சுகிறது.

சொக்கர்திருவாசலுக்கு தூங்காமணிவிளக்கை

கப்பலுஞ்சோங்கும் கரைதுறையுமுள்ளவனே
சங்கின்றமுத்துஞ் சலாபமுடையவனே
ஐவர்க்கும்நூற்றுவர்க்கும அழகானபேரமையே
அழகியசீர்கம்பனையாள் ஆச்சியுடபேரமையே
தோராவடிவழகி துரௌபதையாள்பேரமையே
சோரவளநங்கை சுபத்திரையாள்கண்மணியே
மின்னொளிக்குஎற்ற விளங்குங்குலக்கொழுந்தே
நாககன்னிகண்மணியே ராசாங்கரத்தினமே
பவளக்கொடியாட்குப் பட்சமுடையவனே
கோணகமாதவத்துக் குந்திக்குருமணியே
ஐயாவருகவென்று அருச்சனரைத்தானெடுத்தார்
மைந்தரைக்கொஞ்சி மடிமேலேவைத்துக்கொண்டு
என்-ஐயன்சிறுகைத்தலத்தை யாரோடேஒப்பிடுவேன்
சினத்தார்கள்பூமுடியை செண்டாட்டமாட்டுங்கையோ
பகைத்தார்கள்பூமுடியை பந்தாட்டமாட்டுங்கையோ
மூத்தோர்கள்சொல்லை முடிமேலேவைக்குங்கையோ
இளையார்கள்சொல்லை எடுத்தெறியுங்கைகளிகோ
என்-ஐயன்சிறுகைத்தளத்தை யாரோடேஒப்பிடுவேன்
தக்கப்புகழுடைய தருமரேவாருமையா
பாசுபதம்போற்ற பார்த்தரேவாருமையா
நாமமுடியான் நகுலாசேவாருமையா
தாமமுடியான் சகாதேவாவாருமையா
என்-ஐயன்சிறுகைத்தளத்தை யாருடன்ஒப்பிடுவேன்
பச்சைமடல்விரியும் பாளைவிரிபூமணக்கும்
பாஞ்சாலமகாராஜன் சுயமணப்பந்தலிலே
வில்வளைத்துமாலையிட்ட விஜையரும்நீர்தானோ
பாஞ்சாலிதன்னுடனே பந்தல்மணம்பொருந்தி
சுண்டுவிரல்பிடித்த சுந்தரனார்நீர்தானோ
அரசாணிசுத்திவந்து அம்மிமிதித்தீரோ
அருந்ததிபார்த்தீரோ ஆனந்தவாழ்மார்பன்
என்மாதாவைமாலையிட்ட மன்னவனும்நீர்தானோ
துரோபதைமாலையிட்ட சந்திரரும்நீர்தானோ
என்னாச்சிமணவாளா ஐவர்களும்நீர்தானோ
பிறவாமுடிதரித்த பெண்பெருமாள்நீர்தானோ
மதுரைகருவந்திருந்து மங்கையரைமாலையிட்டு
அவளைமணம்புரிந்து ஆணழகர்நீர்தானோ
அல்லிமணவாளன் அருச்சுனரும்நீர்தானோ
சோரவளநங்கை சுபத்திரையாளென்னாச்சி
சந்நாசிவேஷங்கொண்டு சடுதியிலேவந்திறங்கி
ஒண்டிரதத்தோடே வுத்தமியைக்கொண்டுவந்து

மயக்கமடலூர்ந்த மணவாளர்நீர்தானோ
மேகம்பயின்றெடுத்த மின்னொளியாளென்னாச்சி
மின்னொளியைமாலையிட்ட வேந்தனும்நீர்தானோ
நாகப்பயின்றெடுத்த நாககன்னிஎன்னாச்சி
அந்தக்கன்னியைமாலையிட்ட காளையரூபநீர்தானோ
பொற்கலசைவாழ்முலையாள் போகவதிஎன்னாச்சி
போகவதிக்கேற்ற புருஷனும்நீர்தானோ
பங்கயஞ்சேர்கண்ணாள் பவளக்கொடிஎன்னாச்சி
பவளக்கொடிக்கேற்ற பாண்டியனும்நீர்தானோ
என்னாச்சிகளைமாலையிட்ட ஆணழகாநீர்தானோ
என்ஐயன்சிறுகைத்தலத்தை எவரோடேஒப்பிடுவேன்
இவருடையகைத்தலத்தை எவரோடேஒப்பிடுவேன்

சின்ன அருச்சுனன் குழந்தையில்பழகிய ஆட்டங்களை
தகப்பனுக்குமுன்பாக ஆடுகிறது.

அஞ்சுவயதுடைய அருச்சுனரோநீர்கேளும்
நீஅறியாக்காளையிலே ஆச்சியருகிருந்து
உன் - ஆச்சியவள் ஆடின ஆட்டமெல்லாம்
இந்திரனார்பேரமையே எனக்குமெள்ளகாட்டுமென்றார்
அருச்சுனனார்பேரமையே யருகில்மெள்ளவாருமையா
அஞ்சுவயதுடைய அருச்சுனரும்தான்கேட்டு
மாவைவிட்டுக்கிழிறங்கி வந்துமெள்ளவதுசொல்வார்
மாரால்தகந்து மண்மேல்தவருது
முன்கந்துபாயுறதும் பின்கந்துபாயுறது
தவழ்ந்துவிளையாடுவதுந் தானேநடிக்கிறதும்
எட்டிஎட்டிப்பார்க்கிறதும் எகிறிநடிக்கிறதும்
தம்பிபறக்கிறதும் தம்தாவாலடிக்கிறதும்
பண்டிப்பிடிக்கிறதும் பாலடிசலுண்ணுகிறதும்
போரஞ்சாமன்னர் புலந்திரனார்தான்பார்த்து
மைந்தர்முகம்பார்த்து சிந்தைகலங்கினார்
மாதாவைத்தானினைந்து மன்னருருகினார்

புலந்திரன் விசனப்படுகிறது.

காணாதேஎன்னாச்சி கண்ணற்றுளானேனே
பாராதேஎன்னாச்சி பாவியாளானேனே
குன்றின்மேற்பெய்ந்த மழையானாள்மாபாவி
குடத்திலேயிட்ட விளக்கானாள்என்னாச்சி
என்று - இத்தித்துமன்னன் இருகண்ணில்முத்துதிர்த்தான்
பொன்னுமலைகோடானும் அண்ணாவுமேதுசொல்வார்
ஏன்காணும்மன்னவரே இந்தமதியுந்தனுக்கு
வந்தகருமம் முடியுங்காண்இந்திரனே
வந்துவிழுங்கண்ணீரை வெண்துகிலாள்கண்துடைத்து

மைந்தரைக்கண் டுடைத்து என்காணுமன்னவனே
புத்திரரைக்கொஞ்சி எடுங்காணுமன்னவனே
போரஞ்சாமன்னர் புனந்திருந்தான்பார்த்து
அஞ்சுவயதுடைய அருச்சுனரைத்தான்பார்த்து

மறுபடியும் சின்ன அருச்சுனனை புனந்திரன்மடிமேல்வைத்து
சேலைகளைந்தவரலாறு கேட்கிறது.

வண்ணமடிமேலே வைத்தார்புனந்திரரும்
அஞ்சுவயதுடைய அருச்சுனரேநீர்கேளும்
சேலைகளைந்துவந்தீர் யாருதுகாண் இந்திரரே
கூரையிதுயாருதுகாண் கொற்றவரேசொல்லுமென்றார்
அஞ்சுவயதுடைய அருச்சுனருமேதுசொல்வார்.
ஐயாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
திரியன்சபைவிட்டுத் திரும்பிவருகையிலே
வெள்ளானைமேலேறி வீதிவருகையிலே
பேடைமயிற்கண்ணாள் பெருந்திருவாள்மாளிசென்றேன்
உள்ளேநுழைந்தேனே ஒருகோடிசேனையுடன்
திஷ்டோதிரன்தேவி திருவிளையாள்நாயகியாள்
தனியாகவீற்றிருந்தாள் தாமமுடியாளும்
அவளாடுங்குழல்பறித்தேன் அம்மான்மார்தான்பறித்தேன்
பச்சைகழல்பறித்தேன் பன்னாங்குழிபறித்தேன்
கொம்பனையாளோடுமல்லோ கொஞ்சுங்கிளிபறித்தேன்
பெண்பெருமாளோடுமல்லோ பேசுங்கிளிபறித்தேன்
பாட்டன்விளையாடி பரியாசம்பண்ணுப்போல்
சிரித்துவிளையாடி சேலைகளைந்துவந்தேன்
ஆடம்பலத்தே அவ்வையார்சபைநடுவே
பேரம்பலத்தே பெரியோர்சபைநடுவே
ஆரணங்கைக்கொண்டுவந்து அம்பலங்களேறிவைத்தான்
துரோபதையைக்கொண்டுவந்து துரைகள்சபைநடுவே
சொல்லாதுஞ்சொல்லித் துகிலுரிந்தானே
பேசாதும்பேசிப் புடவை அவிழ்த்தானே
அந்தவிசேஷம் அதுகொண்டுசிந்தையிலே
படைகூட்டந்தன்னுடனே பற்றித்துகிலுரிந்தேன்
எதிராளிசெய்த இடும்பைகாண்தீர்த்துவைத்தேன்
பங்காளிசெய்த பருவங்கொலையைவைத்தேன்
அய்யாவேவுந்தனுக்கு அடையாளங்கொண்டுவந்தேன்

சின்ன அருச்சுனன் அடையாளங்காட்டுகிறது.

இதோபாருமென்று யெடுத்தான்துயிலாடை
போரஞ்சாமன்னன் புனந்திரனார்தான்பார்த்து
குழந்தையைத்தானெடுத்து கொஞ்சிமடியில்வைத்து
எந்தன்குலம்விளங்க வந்துதித்தரத்தினமே

ஊதினன்காலே உலருதலைதருக்க
செம்பொன்னூற்காலை திசைவிளங்கவூதினான்
பொன்னினூற்காலை பொருந்தவின்றூதினான்
வையைவளநாட்டான் வந்தேனென்றூதினான்
வளநாடப்புத்திரன் வந்தேனென்றூதினான்
ஊதினசின்னத் தொனிகேட்டாரு தமியும்
பஞ்சவர்கள்தாதிபரும் பைங்கிளியாள்தான்கேட்டு
மஞ்சள் துகில்களைந்து மற்றுந்துகிலுடுத்தி
வெல்பொருதுங்கண்ணாரும் வெள்ளைத்துகிலுடுத்தி
வீதியும்வீதி தெருவும்பலதாண்டி
போரஞ்சாமன்னர் புனைந்திரனார்முன்னேவந்து
பாவையின்முன்னேவந்து அடிவணங்கிதெண்டனிட்டாள்
போரஞ்சாமன்னர் புனைந்திரனார்தான்பார்த்து

பஞ்சவர்தாதி புனைந்திரனைக்காணுகிறது.

பஞ்சவர்கள்தாதியென்று பாண்டியனுந்தானறிந்து
ஐயருடதாதியென்று ஆனமுகன்தானறிந்து
ஆடையுமபொன்னுமா அனுப்பவேதானறிந்து
செல்வமும்பொன்னும் கொடுத்தனுப்பவேயிருந்தோம்
துக்கம்பெரிதானேனும் துன்னிலங்கண்ணாளே
சினம்பெரிதானேனும் வேல்புருவங்கண்ணாளே
ஆனந்தம்பெரிதானேனும் ஆனந்தவாழ்மாரி
உந்தனுக்கேதுயம்மா வுத்தமியாள்தாதியரே
உந்தனுக்குத்துக்கம் இருக்குதஎழுந்திரம்மா
தாமக்குழலாளுந் தாதியவளேதுசொல்வாள்
ஆருமதுரைவிட்டு அந்திபுரம்வந்ததென்ன
செங்கோல்மதுரைவிட்டு தேசம்வந்துசேர்ந்ததென்ன
வந்தவகையேது மன்னவரேசொல்லுமென்றாள்
எங்வந்திரிக்கிரோ எனக்கரியச்சொல்லுமென்றாள்

புனைந்திரன தாதிக்குச் சேதியுரைப்பது.

போரஞ்சாமன்னர் புனைந்திரனாரேதுசொல்வார்
பேரப்பாபாரப்பா பெரியப்பாதங்களுக்கு
ஐவரையரும் ஆழிவசந்தாரும்
வேந்தர்பெருமானும் வெளிமண்டபஞ்சேர்ந்து
விடையருளவிட்டார்கள் வேந்தர்பெருமானும்
துன்னிலங்கண்ணாளும் தூதுரைக்கவந்தேனென்றான்
தாமக்கருங்குழலாள் தாதியவள்கேட்டு
முன்னேயும்பூசை முடித்துமிருக்குமே
முத்துமுடிபாண்டியனும் பட்டமிருக்கையிலே
இப்பவும்பூசை யெழுப்பினார்பஞ்சவர்கள்

பார்த்தால்பிராயம் பதினாறுக்காணவில்லை
என்றால்பிராயம் இருபதுங்காணவில்லை
நடுக்கென்றமீசையும் நூக்கருங்குழலும்
சோலைக்கெதிராக மாதளம்பூச்சூரியனை
சாலைக்கெதிராக சந்திரனைப்போல்விளங்கும்
காஞ்சிநாடாளுங் கருணாதிருமுகமும்
தக்கப்புயமுடைய தருபரிடமேனியையும்
வெற்றிமதயானை வீமரிடசால்நடையும்
காண்டாவனமெரித்த காளைபுடைவீச்சும்
நாமமுடியான் நகுலனிடையழகும
அணையின்சொருகழகும் சத்திகட்டுவள்மருங்கும்
கத்திசொருகழகும கத்திகட்டுவள்மருங்கும்
கச்சைகட்டுவள்மருங்கும் கனிவாயுங்கண்மலரும்
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபொட்டழகும்
பாரப்பதக்கம பருத்தமுத்துத்தாழ்வடமும்
தாளிப்பதக்கமுஞ் சண்ணபின்னல்தாவடமும்
ஐந்துவிரல்சனிமேல அழகானமோதிரமும
பத்துவிரலிலே பாக்கானமோதிரமும்
அவன்-ஆபரணஞ்சோதிமின்ன அடி அடியென்றேனே
அடி அடியென்றேனே அண்டமதிர்ந்துவிழ
பிடிபிடியென்றேனே பிண்டங்கலங்கிவிழ
அவனுடையவாயாலே அடியென்னகாளாச்சோ
மன்னவரிடவாயாலே வாடியென்னலாளாச்சே
இன்னபெருந்தராசர்க்கள் என்னடியென்பாரோ

## வார்கொள்ளி கோபித்து வழிநடப்பது.

இனியிருப்பதில்லையென்று எழுந்திருந்தாள்மங்கையரும்
வாளெடுத்துக்கீழ்போட்டு வழிபட்டார்மங்கையரும
கத்திசுழட்டிவிட்டுக் கடுசெனவேபோகலுற்றாள்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
தட்டிநகைத்தார்கள் தார்வேந்தரெல்லாரும்
கைகொட்டிதானழைத்தார் கட்டழகரெல்லாரும்
ஐயர்குலத்திலே துரோணரவர்பார்த்து
அவர்-அங்காணிதொப்பை யசையமருங்கசைய
வாரோடிவாரோடி வார்கொள்ளிவாரோடி
அடியென்றுசொன்னவனும் ஆரென்றுநீயிருந்தாய்
எட்டாதபொன்னுலகங் கிட்டகதிபெறுவேன்
வானேழுலோகம் வழியுங்கதிபெறுவேன்
தேவர்கள்சொர்க்கமது சேறுங்கதிபெறுவேன்
உன்னையடியென்றவனை தன்பேருரைக்கிறேன்கேள்

துரோணர் வார்கொள்ளிக்கு பதிலுரைப்பது.

உன்னை-வாடியென் றுசொன்னவன்தான் வானவர்கள்புத்திரண்டி
வானவர்கள்புத்திரண்டி மங்கைமணவாளனடி
தேவர்கள்புத்திரண்டி தேவிமணவாளனடி
கருநீலம்பூக்குழலாள் கஸ்தூரிநாயகனடி
தோகைமயிலனையாள் துரசடையாள்புத்திரண்டி
பாசுபதம்பெறவேபெற்ற பார்த்தீன்புத்திரண்டி
ஆணழகுமன்னன் அர்ச்சுனனார்புத்திரண்டி
ஐவர்பஞ்சபாண்டவற்கு அழகானபுத்திரண்டி
ஆயிரம்பாண்டியர்க்கு அழகானபேரனுமதான்
தேசத்தையாளுங் கிரியோதிரன்புத்திரண்டி
நாலாங்குடித்திரளார் நூற்றொருவர்புத்திரண்டி
அவனடியென்றதனால் ஆணைக்கேபழுதமில்லை
என்றுமவருரைக்க யேதுசொல்வார்வார்கொள்ளியும்

வார்கொள்ளி பதிலுரைப்பது.

வானவர்கள்புத்திரன் என்றுந்தாமறியேன்
மங்கைமணவாளன் என்றும்வகையறியேன்
தேவர்கள்புத்திரன் என்றுந்தாமறியேன்
வையவனாண்டான் என்றுந்தவமறியேன்
என்றுமவருரைத்து எழுந்துநடக்கலுற்றாள்
வாருருவினைப்பிடித்து வந்தாளே மங்கையவள்
பொருஞ்சரமன்னர் புளந்திரன்முன்னேவந்து
பாதத்தின்கீழ அடிவணங்கித்தெண்டனிட்டாள்
தெண்டனிட்டமாதர் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுதாள்
பொருஞ்சரமன்னர் புளந்திரற்கேதுசொல்வாள்
ஐயாபுளந்திரரே அடியேனொருவார்த்தை

வார்கொள்ளி புளந்திரனுக்கு வழிவிட்டது.

வானவர்கள்புத்திரன் என்றும்வகையறியேன்
மங்கைமணவாளன் என்றுந்தாமறியேன்
தேவர்க்குப்புத்திர னென்றுந்தாமறியேன்
தேவிமணவாளன் என்றுந்தாமறியேன்
வாழ்பாண்டிநாட்டானே வழிவிட்டுநிற்கிறேன்
பாசத்திளவரையன் படைகூட்டத்தனுடனே
ஒடமயில்கண்ணுனே வுட்கட்டில்போங்காணும்
என்றுமவருரைக்க ஏதுசொல்வாரிந்திரரும்
தர்மமகனுகையினால் தர்மமாய்நான்பொறுத்தேன் .

வீமர்மகன்வந்தாக்கால் என்படுமோவுன்வாசல்
அர்ச்சுனனார்புத்திரனுகையால்நான்பொறுத்தேன்
வீமன்மகன்வந்தாக்கால் வெட்டிவெறிந்திடுவான்
வெட்டிவெறிந்திடுவான் வீரமணிவாளாலே
குத்திவெறிந்திடுவான் குடல்கள்சரிந்திடவே
புண்ணியத்தைவெண்ணிப் பொறுத்தேன்காணுந்தமியே

புனந்திரன் வார்கொள்ளிக்கு தேறுதல் புத்தியுரைப்பது

வாழ்பாண்டிநாட்டார் வருவார்சிலபேர்கள்
வந்தபடைமன்னவர்க்கு வழிவிட்டுநீங்கிநின்று
மூன்றுநாளாய்பொழுது முடிமன்னராளுவது
நாலாநாளெங்களது ஆகுதுகாண்ராச்சியங்கள்
ஒட்டிப்புசம்பளம் நானேதருகிறேன்காண்
அஞ்சாதேஅஞ்சாதே ஆணழகிஅஞ்சாதே
எதுக்குமஞ்சாதே யிருமென்றனிந்திரனும்
நல்லதிருமென்று நடந்தாரேபுனந்திரனும்
மற்றோர்படிநடந்தான் மன்னவனும்போகலுற்றான்
அங்கிருக்கும்வண்மைகளைக் கண்டானேமன்னவனும்
ஆனதவாதினமும் அவியாத்திருவிளக்கும்
ஆருதுகாவலென்றான் அங்கித்திருமகனும்
அங்கிருக்குமன்னவர்கள் அவரவர்நாமகளெல்லாம்
கேட்டபுனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாமல்
நின்றபுனந்திரற்கு நீதிசொல்லமாட்டாமல்
நெஞ்சலர்ந்துகாவலர் நித்திலந்துமுடியார்
பச்சைமுகங்கருகி பால்முகம்வேறுபட்டு
மன்னர்மனஞ்சலித்து மருமமாய்வீற்றிருந்தார்

புனந்திரனை தாதிவந்து காணுகிறது.

அந்தமொருதாதி அறிவுடையாளோடிவந்து
இராங்கியேயானைமுன்னே எதிராகதெண்டனிட்டு
தெண்டனிட்டதாதி திரும்பவெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுது
போராஞ்சாமன்னர் புனந்திரற்கேதுசொல்வார்
தக்கப்புகழுடைய தருமரிட்டபூமுடியும்
வெற்றிமதயானை வீமரிட்டபூமுடியும்
காண்டாவனமெரித்த காளையவர்பூமுடியும்
நாமமுடியான் நகுலரிட்டபூமுடியும்
சாஸ்திரக்கொடியுடைய சகாதேவர்பூமுடியும்
ஐவருடமுடியும் அறிவேன்அறிவேனென்று
அறிவேன்அறிவேனென்று ஆணழகன்சோதித்தான்

அப்போதுதாதி அரியவெடுத்துரைப்பாள்
ஆணைமுகராதினமும் அழியாத்திருவிளக்கும்
மனுஷர்களேறாத மண்டபமுந்திருவிளக்கும்
காஞ்சிநாடாளுங் கருணரிடகாவலென்றாள்
போரஞ்சாமன்னர் புனந்திரனார் தான்பார்த்து

புனந்திரன்கோபித்து கர்னருடைய மாளிகையை

யானையைவிட்டு இடிக்கிறது.

கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கணசிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபம்பெரிதாகி
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தை கட்டிச்சுவாலயமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலயமாய்
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
சித்துடம்புவேர்த்துச் சிறுகண்சிவப்பேறி
ஐராவதம்போலே யானையைத்தானழைத்து
இடித்துநகர்த்தி எமபுரஞ்சேருமென்றான்
குத்திப்பிளந்து அதைக் கோளாறுசெய்யுமென்றான்
யானையதுகேட்டு அப்படிக்கேநல்லதென்று
செங்கண்சிவந்து வெளிவால்மிகமுறுக்கி
தும்பிக்கையைதூக்கி வருகுதகாண் அவ்வானை
மண்டபத்தன்னருகில் மதயானைவந்துநின்று
கொம்மையசக்கிக் குளம்பால்நிலமபேர்த்து
தும்பிக்கையாலே சுழட்டி அடிக்கிறது
மண்டபத்தைவேர்பிடுங்கி மண்ணோடேசாடுமாம்
அரியதிருவிளக்கை அஞ்சனவேசாடுமாம்
ஆனேறுமண்டபத்தை யடங்கலுந்தானிடித்து
ஆகோரமுள்ளடக்கி அவ்வானை தான்திரும்பி
போரஞ்சாமன்னர் புனந்திரற்குதெண்டனிட்டு
இடித்துநகர்த்தினேன் எமபுரஞ்சேர்த்துவந்தேன்
என்றுமேசொல்லியிருந்தது அவ்வானை
போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்கேட்டு
இன்னஞ்சிலதூதுவரை மன்னவனுந்தானழைத்து

புனந்திரன் தூதுவரைவிட்டு தனக்கு சிம்மாதன

மண்டபம் நிருமிக்கிறது.

அங்குமொருவாதினங்கள் அழகாகசோடியென்றான்
அந்தநல்லதூதுவர்கள் அவ்வார்த்தைதான்கேட்டு

சொன்னபொழுதிலவர் சோடித்தார்மண்டபங்கள்
புனந்திரனுர்சொன்னபடி பொட்டெனவேசோடித்தான்
சோடித்துஆச்சுதென்று தொழுதிரங்கிதெண்டனிட்டார்
அப்போபுனந்திரனுர் அவ்வார்த்தைதான்கேட்டு
ஆளேறுவாகனமும அழியாத்திருவிளக்கும்
மண்டபங்களுண்டுபண்ணி மன்னவனுமேலேறி

புனந்திரன் சபதம்.

நூலால்கடுந்திரளாற் நூற்ருருவர்பூமுடியை
காஞ்சிநாடாளுங் கருணரிடபூமுடியும்
தங்கைமணவாளன் தறுதலையன்பூமுடியும்
சாமத்துரோகி சகுனியுடபூமுடியும்
தாமமுடியான் தைலாட்டன்பூமுடியும்
அறிவேன்அறிலேனென்று ஆதினங்கள்ஏறினுன்
ஒறுமிக்கஅறுத்திடுவேன் என்றுமிகயேறினுன்
ஏறியேதானிருந்து இறங்கினுன்மன்னவனும்
மண்டபத்தைவிட்டலவோ மன்னவனுங்கீழ்குதித்து

புனந்திரன் திரியோதிரன் கொலுவுக்குச் செல்லுகிற ஜனங்களைப்பார்த்து அதிசயப்படுகிறது.

படிபடியென்ருன் படிந்ததுஅவ்வானை
முகக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
கைத்தலத்தைததட்டி கறுத்தானையேறினுன்
அம்மானுந்தானும் அழகானையேறினுன்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனங்களேறுமென்ருன்
அப்படிக்கேநல்லதென்று அனைவோறும்ஏறினுர்கள்
ஏறினபோதே யெடுத்தார்ரணவிருது
வாகனங்களேறியபின் வாசித்தார்சங்கத்தொனி
போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்
மற்ருேர்படிகடந்தான் மன்னர்படையுபர்ந்தான்
மற்ருேர்படிதாண்டி மன்னவனும்போகலுற்ருன்
திரியோதிரன்கொலுவில் செல்லுகின்றராசாக்களும்
முடியோடேமுடிநெருங்கும் முடிமன்னரம்பலத்தில்
இரத்தினமுடிநெருங்க இராசாக்கள்போய்நடந்தார்
வச்சிரமுடிநெருங்க வாரார்கள்மன்னவர்கள்
செம்பொன்முடிநெருங்க சேனைபேர்சூழ்ந்திருப்பார்
தங்கமுடிநெருங்கத் தார்வேந்தர்அங்கிருக்க
தூரத்துராசாக்கள் சுருளோலைகொண்டுநிற்க
காதத்துராசாக்கள் கையோலைகொண்டுநிற்க

தேசத்துராசாக்கள் சேனைபேர்வந்திடுவார்
அங்கங்கேகூத்துகளும் அரிச்சந்திரநாடகமும்
ஊராவழிதனிலே வண்ணநல்லகூத்துகளும்
நடக்கும்வழிதனிலே ராசாக்கள்கூட்டங்களும்
அத்தனையுங்கண்டானே ஆணழகுமன்னன்
பொரஞ்சாமன்னர் புனந்திரனார்தான்பார்த்து

புனந்திரன் போரெழுதி அம்மானுக்கு
திரியன் செல்வச்சிறப்பு கூறுதல்.

பொன்னுமலைநாடாளும் அண்ணைமுகம்நோக்கி
அய்யாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
ஏன்னையாநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
இவர்பெருமையாருக்குண்டு இந்திரற்குநேராக
தேவேந்திரராசன் சிறப்புடையனென்பார்கள்
இந்திரராசாவும் இவருக்குஈடலவே
தேவேந்திரன்தானும் இவர்சிறப்புக்கீடலவே
குபேரனதுபட்டணங்கள் கோடியுண்டுஎன்பார்கள்
இவருடையராச்சியத்துக் கீடுசொல்லலாகாது
உத்தமனோர்பட்டணத்துக் குவமைசொல்லலாகாது
அத்திபுரத்திற்கு அளகாபுரியீடலவே
வாழ்மதுரைபட்டணமும் மன்னர்பதிக்கீடலவே
எங்கள் அத்திபுரத்தானுக்கு யாருமெதிரலவே
இந்திரராசாவும் இப்படிக்கேசொல்லனுமே
பொன்னுமலைநாடாளும் அண்ணவும்ஏதுசொல்வார்

பொன்னுமலைநாடான் புனந்திரற்கு சொல்லுவது.

என்காணுமன்னவனே இந்தமதியுந்தனுக்கு
மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
அம்பத்தறுகாதம் ஆண்டிருந்தராச்சியங்கள்
அப்பெரியராச்சியத்தை ஆண்டிருந்தார்பாண்டியர்கள்
மைந்தருமில்லாதே மன்னர்மனஞ்சலித்து
மாளுகிறோமென்று மலைமேல்தவமிருந்தார்
மாளாதேயென்று மலரிலவதரித்தாள்
ஆறுபிரவர்க்கும் ஆணுமவள்பெண்ணுமவள்
பெண்பட்டங்கட்டியல்லோ பூமியரசாளுகின்றார்
எல்லையரசாண்டு யிருந்தாளே அல்லியம்மாள்
ஏழுபிராயத்திலே எதிர்த்துவந்தநீன்முகனை

வெட்டித்தலைசீனந்து வீரபட்டமாண்டானே
மன்னர் அருச்சுனனார் மாலையிடவேணுமென்று
கட்டழகியவல்லியரைக் கலியாணம்பண்ணவென்று
மதுரைக்குவந்திருந்தார் மாயவரும் அர்ச்சுனனும்
மாறுவடிவுகொண்டு மறைந்திருந்தார் மன்னவரும்
வேல்புருவக்கண்ணாளும் வேட்டைக்குப்போனாள்காண்
கானகத்துவேட்டைகளாடிவருகையிலே
பெண்வேஷங்கொண்டாரே போர்விசையப்பெருமானும்
ஆணழகியல்லியற்கு அம்புபொறுக்கித்தந்தார்
காலும்பிடித்தானே கதையொன்றுரைத்தானே
கதையொன்றுரைக்கையிலே கண்டாளேயல்லியரும்
ஆண்பிள்ளையென்றுசொல்லி யதட்டியெழுந்தாளே
கத்தியெடுக்கையிலே கடுகிநடந்துவிட்டார்
வேட்டைகளாடிவந்தாள் வேல்புருவக்கண்ணாளும்
மற்றுநாள்காலமே மன்னர் அருச்சுனரும்
தண்ணிக்குளத்தருகே தார்வேந்தர்வந்திறங்கி
அல்லியென்றுமெல்லியென்றும் அழுதுபுலம்புகிறார்
தண்ணிக்குவந்தவொரு தாதியர்கள்தான்கேட்டு
அல்லிக்குரைத்தார்கள் ஆக்கினைகள்செய்யவென்று
அப்போது அல்லியம்மாள் ஆக்கினைகள்செய்யலுற்றாள்
தூக்குமரத்திலே போடச்செலவுதந்தாள்
தூக்குமரஞ்சொப்பனிடப் போனதொருசெங்கமலம்
போனதொருசெங்கமலம் பொன்னுலகம்போய்ச்சேர்ந்தாள்
ஆற்றுமணலிலே போட்டுப்பிரட்டுமென்றாள்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தார்காண் அருச்சுனரும்
மாயனிட புண்ணியத்தில் மன்னவருந்தான்பிழைத்தார்
காளியம்மன்கோவிலுக்கு காவுகொடுங்களென்றாள்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தார்காண் புண்ணியனும்
பூதக்கிடங்குகளில் போட்டடைக்கச்செலவுதந்தாள்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தார்காண் புண்ணியனும்
பாம்புகளைவிட்டுமே கொல்லுமென்றாளல்லியம்மாள்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தார்காண் மன்னவனும்
யானைமதமேற்றிக் கொல்லுமென்றாளல்லியரும்
அத்தாலுஞ்சாகாமல் பிழைத்தார்காண் புண்ணியனும்
நாகமதமேற்றிக் கொல்லுமென்றாள்நாயகியும்
அத்தாலுந்தப்பிப் பிழைத்தார்காண் அருச்சுனரும்
பைங்கிளியாள்தங்கையிலே பாவைப்பிச்சைவாங்கி
அள்ளியேநீருமிட்டு ஆணழகன்போய்நடந்தார்

மற்றுமொருநாளில் மாதவள் அல்லியம்மாள்
வேட்டைகளாடிவந்தாள் வேல்புருவங்கண்ணாளும்
தண்ணிக்கலையாகித் தனித்துப்புலம்புகையில
மாயன்பெருமாளும் மன்னவனருச்சுனரும்
பார்ப்பாரும்பாப்பாத்தி போலேவடிவெடுத்து
தண்ணிப்பந்தல்போட்டார்கள் தாங்களிருவருமாய்
அல்லிக்குத்தாகங் கொடுத்தார்காண் அருச்சுனரும்
வந்தசனங்களெல்லாந் தாகந்தெளிந்தபின்பு

அல்லி கிருஷ்ணாருச்சுனரை வளப்பம் விசாரித்தது.

ஆரம்மாவென்றுசொல்லி அல்லியவள்கேட்க
இன்னவயதல்லோ தெய்வப்பிராமணப்பெண்
துஷ்டப்ரோகினான்புருஷன் கண்டீரோ ஆச்சியரே
இலட்சுமிநோன்பதுதான் நாளைக்குவருகுதம்மா
கையிலேகைக்காசுமில்லை கடன்கொடுப்பாராருமில்லை
என்றுபுலம்புகையில் ஏதுசொல்வாளல்லியரும்
ஆனால்தேவ ஆச்சியரே அரண்மனைக்குவந்தக்கால்
வேண்டியதனந்தருவேன் விரதமுடித்திடுவாய்
கேட்டதனந்தருவேன் நோன்புமுடித்திடுவாய்
அப்பச்சேநல்லதென்று ஆரணங்குசம்மதித்தாள்
கூடிவந்துசேர்ந்தார்கள் கொம்பேரிடையாளை
மாளிகைவாசலிலே வந்தாரிருவருமாய்
இலட்சுமிநோன்பதுதான் நடத்துமென்றாள்மங்கையரும்

அல்லிக்குத்திருட்டுத்தாலி சம்பவித்தது.

சடங்குகள்செய்தாளே சதிரானபாப்பாத்தி
விஸ்தாரமாகவேதான் வேள்விநடத்தினளே
நடுச்சாமவேளையிலே நடத்துகிறார்நோன்புதனை
அந்தச்சமயத்தில் அல்லியருந்தூங்கிவிட்டாள்
அந்தச்சமயம் அதுவேளைதானறிந்து
பானைத்தலைபோலே அழகானமங்கிலியம்
அல்லியம்மாள் தன்கழுத்தில் கட்டினனப்போது
மங்கிலியந்தரித்து மன்னர்மறைந்துவிட்டார்
தாலிதரித்து நடந்தாரே அர்ச்சுனரும்
கட்டினவிருதயத்துக் கடுகெனவேபோய்நடந்தார்
பொழுதுவிடிந்தது பகலவனுதித்தது
அங்கம்மாள்கோவிலுக்கு திருகாப்புஞ்சென்றது
சங்காமனைதாதியர்கள் அனைவோருங்கண்முழித்தார்

பவளசேனை தன்னுடனே பத்தினியுங்கண்முழித்தார்
சமுத்திரலமங்கிலியங்கண்டாளே அல்லியம்மாள்
அயுகதவெறிவோமென்றால் அறிவாளொடிந்துபோகும்
கத்திகொண்டறுத்தாலுங் கத்திரெண்டுதுண்டாகும்
ஆறுயிரம்பாண்டியரும் அல்லியருந்தான்கூடி
ஆலோசனைகள்பண்ணி யல்லிப்பெருமாளும்

பாண்டியர்களும் அல்லியும் ராசாக்களுக்கு ஒலையெழுதி
சத்தியங்கூறச் சொன்னது.

அன்பத்தாறுதேசத்துக்கு அனுப்பினரோலைதன்னை
அன்பத்தாறுதேசத்து ராசாக்கள்வந்தார்கள்
மண்டலத்திலுள்ளகொரு மந்திரிகள்வந்தார்கள்
சொக்கரிடவாலபத்தின் சிவகாமிச்சன்னதிமுன்
வந்தவந்தராசரெல்லாம் அந்தமுடன்வீற்றிருந்தார்
நெய்குடத்தைக்காச்சியல்லோ கைதோயுமென்றுளே
நெய்குடத்தில்கைதாவைத்து கெல்லிமிட்டிவிட்டார்
வெற்றிமதயானை வீமரவரோடிவந்து

வீமன் நெய்குடித்தது.

நெய்குடத்தில்கைதோய்ந்து நெய்யைக்குடித்துவிட்டார்
அம்பாரகெல்லையெல்லாம் அருச்சுனனார்வந்தெதிர்த்தார்
அத்தையறிந்தாளே அல்லிப்பெருமாளும்
அவர்பேரும்ஊரும் அறிந்தாளே அல்லியம்மாள்
பட்டணத்திலுள்ள படைமன்னர் அத்தனையும்
யானைத்திரள்படையும் அழகானசேனைகளும்
குதிரைப்படைசேனைகளை கூட்டினளல்லியரும்
ஐவர்மேற்சண்டைசெய்ய ஆணழகிவந்துவிட்டாள்
வந்துஅடித்தாளே வண்ணவண்ணக்கூடாரம்
அடித்தாள்ரணபேரி யண்டரண்டந்தானதிர
சண்டைக்குவந்தேனென்று தானடித்தாள்பேரிகைகள்
அந்தவிசேஷம் அதுவறிந்துதருமலிங்கம்
வீமனையும்மாயவரை யிருவரையுங்கூட்டிவிட்டார்
வீமரும்மாயவரும் வந்துமேபோர்கொடுத்தார்
இருவருமாய்சண்டைபண்ணி எதிர்நிற்கமாட்டாமல்
புறங்கொடுத்தோடினார் பெருமாட்கன்சியல்லோ
ஆணழகுமன்னன் அருச்சுனனார்வந்தெதிர்த்தார்
அவராலேபோர்கொடுக்க மாளாதேமன்னவனும்
கைசோர்ந்துமெய்சோர்ந்து கையில்கணைசோர்ந்து
தேரொடிந்துவில்முறிந்து தேரைவிட்டுக்கீழ்குதித்து
உற்றவுயிர்சோர்ந்து ஓடினார்அருச்சுனரும்

### சகாதேவன் அல்லியைக்கூண்டிலடைத்த சமர்த்துக்கூறல்.

சாத்திரக்கொடிவேந்தன் சகாதேவன் தானறிந்து
கூண்டொன்றுசொப்பனமிட்டுக் கொண்டுவந்தான் தார்வேந்தன்
நூதனகூண்டொன்று தோன்றாதமல்லியற்கு
சதிசெய்துவென்றாரே சமர்த்தன்சகாதேவன்
அல்லியம்மாள்தோற்றாளென்று அடித்தார்பேரிகையை
எல்லவருந்தானறிய அரண்மனைக்குக்கொண்டுசென்று
சந்தோஷப்பட்டார்கள் சமர்த்தானராசாக்கள்
ஆறாயிரம்பாண்டியர்கள் அய்யன்மார்தாமறிய
மங்கிலியந்தான்பொருந்தி மன்னவனையுன்னைப்பெற்றார்
மதுரையாளுதற்கு மன்னவனையுன்னைப்பெற்றார்
பூலோகமாளுதற்கு புனந்திரனையீன்றெடுத்த
இப்பெருமையாருக்கு இந்திரனேசொல்லுமையா
பெண்பெருமையாருக்குண்டு புனந்திரனேசொல்லுமையா
அத்திபுரமும் அவராளுமரசகளும்
மதுரைப்பெருஞ்சீமையது மண்டலத்துக்கீடாமோ
வைகைப்பெருநாடு வாழ்மதுரைக்கீடாமோ
அல்லிப்பெருமையது அளவிடக்கூடாது
பெண்பெருமாள்தன்பெருமை புகழ்ந்திடலாகுமோதான்
இப்படிக்குச்சொல்லி யெடுத்துரைத்தார்மன்னனுந்தான்

### புனந்திரர் மாமாபொன்னுமலை நாடானுக்கு கோப வார்த்தையுரைக்கிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
கதிக்குகதிமண்டி கண்கள்எறிபறந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபம்பெரிதாகி
நெற்றிப்புருவம் நெருப்பாய்அனல்பறந்து
சூரியமண்டலத்தை எட்டிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலயமாய்
அண்ணாமுகம்நோக்கி மன்னவனார்எதுசொல்வார்
மாமாமுகம்நோக்கி மன்னவனார்எதுசொல்வார்
அம்பலத்துராசருக்கு ஆணழகியீடாமோ
மண்டலத்துராசருக்குமாதரெதிராமோ
முத்துமுடிதரித்த ராசாக்கள்தன்னுடனே
வச்சிரமுடிதரித்த மண்டலீகர்தன்னுடனே

சரியாகச்சொல்லீரே தாராகுழலாளே
வில்பிடித்துவேட்டையாட வல்லவியாளென்றளவோ
பட்சமுடனாக யெச்சியெடுத்துரைத்தீர்
நீங்களோசொன்னகதை மற்றொருவன்சொன்னக்கால்
மற்றொருவர்சொன்னாலே வாளுக்கிரையிடுவேனே
வாளுக்கிரையிடுவேனே மண்டைபிளந்திடுவேன்
ஆதிசிவனானாலும ஆண்மைகொண்டுயுத்தம்பண்ணி
பரமசிவனானாலும பத்திப்பிளந்திடுவேன்
மாயவனேயானாலும் மவன்மண்டைபிளந்திடுவேன்
ஈஸ்வரனேயானாலும் இருதுண்டாய்ப்போட்டிடுவேன்
தேவர்களேயானாலுந் தெரிந்துஅடித்திடுவேன்
முனிவர்களானாலும முறியஉடல்பிளப்பேன்
ஊருக்குமேற்கே உபாக்கழுவில்போட்டிடுவேன்
தாமணிக்கட்டி தரித்திடுவேன் பூமுடியை
மூக்கோடேநாக்கரிந்து முன்முடியைசங்கரிப்பேன்
நாக்கோடேமூக்கறுத்து நக்கரைவிட்டுஒட்டிடுவேனே
என்றுமவருரைத்தாரிந்திரராசாவும்

புனந்திரனுக்கு சபையார் எடுத்துரைப்பது.

அங்கிருக்குமன்னவர்கள் அரையர்துரைகளெல்லாம்
புனந்திரராசருக்கு புண்ணியர்களேதுசொல்வார்
பொன்னுமலைநாடாளும அண்ணாவுரைததற்கு
கோபித்துக்கண்சிவந்தீர் கொற்றவனார்வீரியரே
வாடிமுகந்தளர்ந்தீர் மன்னர்பெருமானே
ஆச்சியுடன்பெருமை அண்ணாயெடுத்துரைத்தார்
எதிரிகளைப்புகழ்ந்து இகழ்ந்தீரே அண்ணாவே
மாற்றானைத்தான்புகழ்ந்து வைத்தீரே அண்ணாவே
என்றுமனந்தேற்றி இந்திரரைக்கொண்டணைத்தார்
கொற்றவனார்கோபங் குணப்படுத்திக்கொண்டார்கள்
மன்னவனார்கோபம் வழிபடுத்திக்கொண்டார்கள்
போரஞ்சாமன்னர் புனந்திரவீரியரும்
ஆறினார்கோபம் அமர்ந்தார்கொலுமேடை
தேறினார்கோபம் தெளிந்தார்கொலுமேடை
பொன்னுமலைநாடாளும் அண்ணாமனங்குளிர்ந்து
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
இருவருங்கோபந் தணித்தார்களப்பொழுது
போரஞ்சாமன்னன் புனந்திரவீரியனும்
மற்றோர்படிகடந்தான் மன்னன்படையுயர்ந்தான்
மற்றோர்படிதாண்டி மன்னவனும்போய்புகுந்தான்

### புலேந்திரன் சின்னமெடுத்தூதுவது.

ஊதினன்சின்னம் உலகேழுலகதிர
ஊதினன்காணே உலகுதலைதழைக்க
செம்பொன்னூறுகாணே திசைவிளங்கவூதினன்
பொன்னிறுறுகாணே பொருந்துமென்றூதினன்
சன்னவென்றூதினன் இந்திராசாவும்
கோணுதயாதலத்து குந்தியம்மாளென்பாட்டி
பாண்டுமகாராசன் பட்டத்தரசியவள்
பட்டத்தரசியவள் பாஞ்சாலிகுந்தியம்மாள்
தூருவாசர்மந்திரத்தால் துலங்கவந்தார்பஞ்சவர்கள்
பாண்டுராசன்பெற்றெடுத்த பஞ்சவர்களைவருண்டு
ஐவர்பஞ்சபாண்டவரை ஆச்சியின்றெடுத்தாள்
வீரசமாம்குந்தி வடமதுரையாழுதற்கு
காப்புடையகன்னியவள் காரணத்தால்வந்துதித்த
கோப்புடையகுந்தி குலமணியென்றூதினன்
ஏகதம்மாளென்று இரணியனைமார்பிளந்து
தோற்றமாத்தூணிலே நின்றசடாதுபோல
அசற்கு-வாய்த்தமருமகனென் வந்தேயென்றூதினர்

### ஐவர்மகனென்று புலேந்திரன் சின்னமூதுவது.

பொய்யாதவாசகனார் புகழுடையதருமலிங்கம்
தக்கப்புகழுடைய தர்மரிடபுத்திரனார்
புத்திரனைவந்தேனென்று ஊதினன்சின்னந்தொனி
பாரியதின்டோளன் பகலிடும்பன்பற்பிடுங்கி
சாடிப்பொன்கொண்டுவந்தோன் தன்மகனென்றூதினன்
பொட்டிப்பொன்கொண்டுவந்தோன் புத்திரனென்றூதினன்
மலைப்பதிகோக்கிச் சித்தனைக்கண்டலைவா
பரமருடன்வாதாடி பாசுபதம்பேறுபெற்றாய்
பாசுபதம்பேறுபெற்ற பார்த்தரிடபுத்திரனை
அர்ச்சுனனார்புத்திர னைறந்தவன்விருதாசை
எட்டாதபொன்னுலகம் எறிப்போயிந்திரபடை
கச்சேசதிபுட்பமலர் கொண்டுவருஞ்சகாதேவர்
சகாதேவர்புத்திரனார் என்றுமவனூதினன்
நாமக்கொடியுடைய நகுலமகாராசர்
என்னைப்-பெற்றார்புறப்புலிபார் பிள்ளையென்றூதினன்
என்னைபெற்றதந்தையர்கள் என்றுமவனூதினன்

### புலேந்திரன் நாற்பெருநவர் சின்னமூதுவது.

நாலாங்கசந்திரனார் நாற்பெருநவர்கன்றுசொல்லி
நாற்பெருநவர்க்கன்றுசொல்லி சங்கெடுத்தூதினனை

தர்மமுடியான் தயிலாட்டான்பூமிக்கு
சங்கெடுத்தூதினான் தயிலாட்டான்பூமுடிக்கு
காஞ்சிநாடாளுங் கர்னருக்கென்றெடுத்தான்
கர்னருக்கென்றெடுத்த காளைசின்னமூதினான்
தங்கைமணவாளன் தருதலையன்பூமுடிக்கு
தறுதலையன்பூமுடிக்கு சங்கெடுத்தூதினான்
சாமத்துரோகிச் சகுனிபடுபாவி
இப்படியாகச்சொல்லி யெடுத்தான்விருதோசை
ஊதினான்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை உலகுதலைதுமுக்க
செம்பொன்னாற்காளை திசைவிளங்க ஊதினான்
பொன்னினாற்காளை பொருந்துமென்றூதினான்
இப்படிக்காயூதினா னிந்திராசாவும்

புனந்திரன் சின்னத்தொனியை திரியோதிரன் கேட்டு
கோபிக்கிறது.

ஊதினசின்னத்தொனி கேட்டானுக்தமியும்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
உற்றுக்கேட்டானே வுத்தமனார்வீரியனும்
கோபித்துக்கண்சிவந்து கொல்லுங்குருவியைப்போல்
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபம்பெரிதாகி
நெற்றிப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தை சுற்றிச்சுவாலயமாய்
அக்கினிமண்டலத்தை யடுத்துச்சுவாலயமாய்
காஞ்சிநாடாளும் கர்னர்முகம்நோக்கி

திரியோதிரன் தர்மர்மேல் இகழ்ச்சியாக
கர்னருக்குச் சொல்வது.

காஞ்சிநாடாளுங் கர்னருக்கேதுசொல்வான்
கர்னா-விண்ணீர்புகழீர் விளாடகரியிலே
தக்கபுகழுடைய தர்மரெழுந்திருந்து
அருந்ததொருபூனாலுங் கிழிந்ததொருபுத்தகமும்
அறுபதுசுக்கலாக போனதொருபுத்தகமும்
புத்தகத்தைகைபிடித்து போர்மன்னர்தன்கொலுவில்
பஞ்சாங்கஞ்சொல்லுகிற பார்ப்பானைப்போலிருந்து
இச்சங்கள்சொல்லி யிடிச்சுண்டிருந்தானே
அவ்விருதைவூத அசந்தானேபேடிமகன்
உன்விருதுஎன்விருதும் ஊதயிவன்யார்காணும்

வீமன்பேரில் இகழ்ச்சிகூறுவது.

விண்ணீர்புகழ்மிர் விலாடநகரியிலே
வெற்றிமதயானை வீமனவனோடிவந்து
எட்டுப்புறமட்டி அணைத்தடுப்பைபதிமாதி
ஆச்சாவுரமேதக்கும அகிலும்பிளந்தடுக்கி
கெட்டெடன்னகல்லை தெறிந்துநெருப்பாகி
தென்கடலுமாணிக்கந் திரட்சியுமேசேர்த்து
வடகடலிலமாணிக்கம் வாரியுமேசேர்த்து
பானைகழுவி பணிரேவல்உலைவார்த்து
அசையாமல்சென்னிசவ் தூத்திமணல்பொறுக்கி
அரிசிபுகட்டி எடுத்தானே ஆணழகன்
இவ்விருதையூக இசைசந்தானேபேடிமகன்
உன்விருதும்என்விருதும் ஊதயிவர்காணும்

அர்ச்சுனன்பேரில் இகழ்ச்சிகூறுவது.

விண்ணீர்புகழ்மிர் விலாடநகரியிலே
காண்டாவனமெரித்த காளையவனெழுந்து
ஆறெழுகுமன்ன வருச்சுனன்தானெழுந்து
விலாடநகரியிலே வேணதொருபெண்களுக்கு
அவனுடையதேவியற்கும் வேணதொருபெண்களுக்கு
மங்கையர்கள்பூமுடிக்கு மயிர்க்கோதிபெண்ணையிட்டு
மஞ்சனமரைத்து பறவுக்குதண்ணீர்கொண்டு
அவர்களுக்குப்பூமுடித் தானுமெழுதுமன்னன்
ஆட்டமுங்கூத்துகளும் அவர்க்கேசெற்றநாட்டியமும்
கற்றுக்கொடுத்தானே காளையருச்சுனனும்
அவ்விருதையூக அசந்தானேபேடிமகன்
உன்விருதுமென்விருது மூதயிவர்காணும்

நகுலன்பேரில் இகழ்ச்சிகூறுவது.

நாமமுடியா னகுலனெழுந்திருந்து
கப்பல்குதிரைக் கனம்பெறவேகொண்டுவந்து
நல்லகுதிரை நலமாகக்கொண்டுவந்து
சீமைகுதிரைகளைச் சிறப்பாகக்கொண்டுவந்து
நாணயங்கள்தானுரைத்தான் ராசாக்கள்முன்பாக
குதிரைக்கதிகாரி யிவனென்றார்கொற்றவர்கள்
அப்படிக்கேநல்லதென்று ஆனந்தவாழ்மார்பன்
கொள்பிடுங்கிகொட்டினார் பிள்பிடுங்கிவாயிலிட்டான்
குதிரைகள்சாணிக் குவித்துண்டிருந்தானே

அவ்விருதைதூக்க அசக்தனேபேடிமகனே
உன்விருதுமென்விருதும் ஒருதயிலர்காணும்

சகாதேவர்பேசின இகழ்ச்சிகூறுவது.

விண்ணீர்புரழிர் விராடநகரியிலே
தாமமுடியான சகாதேவனேடிவந்து.
இடைச்சிமகனேகேளல்லா பிருந்தலொருமாடுகளை
காடுகள்மேடுகள் கண்டவிடங்களெல்லாம்
மாட்டைபிசமடக்கி மன்னவனும்பாலறந்து
மோருக்குணக்குசொல்லி மொக்கைப்பால்பொய்மையுண்டு
இடைச்சிமனைகளிலே இச்சகங்கள்தான்பேசி
இச்சகங்கள்தான்பேசி இருந்தானேபேடிமகன்
அவ்விருதைதூக்க அசக்தனேபேடிமகன்
உன்விருதுமென்விருதும் ஒவ்வாதயிலர்காணும்
என்று-தேசத்தையாளுந் திரியோதனனுரைக்க

கர்ணர்கோபித்து துரியனுக்கெடுத்துரைப்பது.

காஞ்சிநாடாளும் கர்ணனவர்கேட்டு
அவர்-சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
நெஞ்சுலர்ந்துநாவரண்டு நித்திலங்குபூமுடியான்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
சதிக்குச்சதிமண்டி கண்களொளிபறந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
பத்தியநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகமதாய்
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலையமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலையமாய்
மன்னன்மனஞ்சலித்து வார்த்தைகளேதுசொல்வான்
சொல்மாத்திசொல்லுரைப்பான் தோழன்முகங்கோணமல்
நீர்சொன்னவார்த்தையது கேளுமையாராசாவே
எப்படியிருந்ததென்றால் இந்திராசாவே
நாராசங்காய்ச்சி நடுச்செவியில்விட்டாற்போல்
ஈயத்தைக்காய்ச்சி யிருசெவியில்விட்டாற்போல்
ஓருருகக்காய்ச்சி வுருக்கிச்சவிழ்த்தாற்போல்
உச்சிமயிர்பிளக்க வுளிகொண்டடித்தாற்போல்
வாச்சுளிகள்கொண்டு மண்டைபிளந்தாற்போல்
எழுவுளிபாலே எடுத்துயிழைத்தாற்போல்
பஞ்சவர்கள்பட்ட பரிபோகங்கூறினீர்

கோனுதமாதவத்துக் குந்தியம்மாள்பெற்றெடுத்த
தருமருக்குமூத்தவர்கள் ஆணழகானென்றுரைத்தீர்
என்றுமவனுரைக்க ஏதுசொலவாரிந்திரரும்
ஐவருக்குமூத்ததொரு ஆணழலகரென்றும்
குந்தியம்மாள்பெற்றெடுத்த குலக்கொழுந்துகருணரென்று
எனக்கும்பெரியதகமை யிவரென்றுரைத்தீரே
ஐவருக்குமூத்தவரா யிவராயிருந்தாக்கால
ஐவருடநகரம் அரசாண்டிருக்காரோ
பஞ்சவர்கள் தன்னுடனே பாருலகாளாமல்
திரியனதுநகரஞ் சேர்ந்திருக்கக்காரணமேன்
மாத்தானுடநகரம் வந்திருக்ககாரணமேன

பொன்னுமலைநாடான் புனத்திரற்கு கூறுவது.

பொன்னுமலைநாடாளும் அண்ணாவுத்தான்கேட்டு
போரஞ்சாமன்னர் புனத்திரற்கதுசொல்வார்
ஆனால்கேள்மன்னவனே அந்தவரலாறு
கோனுதமாதவத்துக் குந்தியம்மாள்நாயகியும்
அஞ்சுபிராயத்திலே அறியாதநாளையிலே
தூருவாசமுனிக்குச் செய்தாள்பணிவிடைகள்
அந்தப்பணிவிடைக்கு மெச்சிமகாமுனியும்
ஐந்துமந்திரந்தன்னைக் கற்பித்தாரச்சிபற்கு
மந்திரவல்லமைக ளறிவாள்காண் ஆச்சிபரும்
அதிலேயொருமந்திரத்தை தோத்தரித்தாள் அங்ஙனவே
சூரியமந்திரத்தைச் சொன்னளேவாயாலே
சொன்னவுடனாகத் தோன்றினார்சூரியனும்
கோனுதமாதவத்துக் குந்தியம்மாள்தன்னையவர்
பருவமதுண்டுசெய்து பட்சமுடனாக
கூடிக்கலந்திருந்தார் கொம்பனையாள்தன்னுடனே
அப்போதுசெற்பந் தரித்தது அழகாக

குந்தி சொல்வது.

கோனுதமாதவத்துக் குந்தியம்மாளேதுசொல்வாள்
அஞ்சுவயது அறியாதகாலத்திலே
நானுமொருபிள்ளைபெற்றால் நாடெல்லாய்ஏசாதா
என்றுமவளுரைத்து சொல்லிபுலம்பினால்
பானுகுலத்துதித்த சூரியனுமேதுசொல்வார்
அஞ்சாதேபெண்மயிலே என்றுமவரெழுந்து
ஆணழகர்வீரியரும் அறைந்தார்தவடையிலே

அவதரித்த அறையாலே பிறந்தார்கருணரும்
கவசகுண்டலந்தன்னுடனே சன்னத்தில்தான்பிறந்தார்
சன்னத்தில்பிறக்கவே கருணனென்றுபெயருமிட்டு
குஞ்சிதரித்திருந்த கோலவர்ணபட்டாடை
முந்தானிதன்னிலே கிழித்தாளொருமுழந்தான்
ஒருமுழந்தான்கிழித்து உத்தமர்க்குத்தான்போர்த்து
பஞ்சவர்ணபேழையிலே குழந்தையைஉள்ளடக்கி
சாற்றியேபூட்டிவிட்டு விட்டார்கள் ஆத்துதனில்
ஆற்றில்குழந்தைவிட்டு சூரியரும்போய்நடந்தார்
கோணுதமாதவத்துக் குந்தியம்மாள்போய்நடந்தாள்

கருணர் பேழையில் மிதப்பது.

ஆற்றிலேபேழை யமர்ந்துமிகத்தளும்பி
அத்திபுரத்தை அடுத்தது அப்பேழை
தேசத்தையாளுந் திரியோதிரன்தானும்
அவனுக்குத்தோழனவன் அணைநந்தன் தச்சனவன்
ஆற்றங்கரையோரம் வந்தாரிருவருமாய்
ஆற்றிலேபேழையது அடித்துவரக்கண்டார்கள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
பெட்டிவருகிறது பேழையதுயென்றுதென்றான்
ஆமடியானுந் தச்சனவனேதுசொல்வான்
பெட்டியதுவுன்னுதுகாண் பேழையதுவுள்ளிருக்கும்
பேழையதுவுள்ளிருக்கும் பூஷணங்களென்னுதென்றான்
இப்படியாகச்சொல்லியிருந்தார்களிருவருமாய்
மேல்காற்றுமங்கே மிகவெள்ளந்தான்பெருகி
ஆறுபொங்கிநீர்தளும்பி அப்பெட்டிதான்மிதந்து
ஆற்றின்கரையோரம் அமர்ந்ததுபெட்டியது
குளத்தின்கரையோரங் கொண்டுவந்துமெதக்கிறது

தச்சனும் திரியனும் ஆற்றில் பேழையைக் கண்டெடுத்தது.

தச்சன்திரியனும் தானெடுத்தோர்பேழைதன்னை
இருவருந்தூக்கி யிசைந்துவழிநடந்தார்
மாளிகையில்நுழைந்தார்கள் மன்னவர்கள்தச்சனும்
பேழைதன்னைவழிகொண்டு தாள்திறந்தானுத்தமனும்
பேழைதன்னைஉள்ளிருக்கும் பிள்ளையைக்கண்டார்கள்
தச்சனவனெடுத்து தானடந்தான்மாளிகைக்கு
குழந்தையையவனிடுக்கி கொற்றவனுந்தானடந்தான்

தச்சன் பிள்ளையை யெடுத்துக்கொண்டுபோய்
வளர்த்துக்கொண்டிருந்தது.

மாளிகையில்கொண்டுவந்து மைந்தனை நீராட்டி
மைந்தனை நீராட்டி மலர்க்கண்ணிமையெழுதி
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபொட்டுமிட்டு
உச்சிதமான வுடமைகளுடலதிருத்தி
கோலவர்ணபூஷணங்கள் குழந்தைக்குத்தானணிந்து
வண்ணவண்ணபூஷணங்கள் மைந்தர்க்கலங்கரித்து
கொம்பிலேபழுத்ததும் கோதுபடாசர்க்கரையும
மலையில்சிறுதேனும கிளாதசர்க்கரையும்
கூட்டிப்பிசைந்துமல்லோ கொற்றவர்க்குத்தானூட்டி
தள்ளிப்பிசைந்துமல்லோ தார்வேந்தர்தானூட்டி
பனிநீராலவாயலம்பி பட்டாலேவாய்துடைத்து
ஈரம்உலர்த்தி யிழைசேர்ந்தபட்டுடுத்தி
மைந்தனைத்தாளிடுக்கி வழிநடந்தான்மன்னவனும்
செத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
கடையுங்கடைத்தெருவுங் கருமாரவீதிவிட்டு

தச்சன் திரியோதிரன் மாளிகைக்கு குழந்தையாகிய
சருணரை யெடுத்துக்கொண்டு போனது.

மாநகராளும் மகாராசன்மாளிசென்றான்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
அமுதுண்ணுமண்டபத்தில் ஆணழகன்போய்நுழைந்தான்
செம்பொன்முக்கால்நிறுத்தி செம்பொன்தளிகையிட்டார்
புலிமுக்கால்கள்நிறுத்தி பொன்னூற்றடுக்கையிட்டார்
இட்டதொரு ஆசனத்தில் ஏறியவர்வீற்றிருந்தார்
அங்கமொருகாதி அறிவுடையாள்சொல்லுகிறாள்
மாணிக்கக்கிண்ணிதனை வைத்தாரழகாக

திரியோதிரன் ௩௨-கிண்ணியில் பொசிப்பது.

முப்பத்திரண்டுகிண்ணி முடிமன்னர்க்கிட்டேவைத்தான்
அமுதுபடைத்தார்கள் ஆரணங்குதாதியர்கள்
பத்துவகைக்கறியும் பாலடிசல்போசனமும்
மற்றும்வகைக்கறியும் வண்ணவிதபோசனமும்
அத்தனையுங்கொண்டு அளிந்தார்கள் தாதியர்கள்
போசனமும்வைத்து புத்துருக்குநெய்சொரிந்து
காராவின்நெய்சொரிந்து கட்டித்தயிர்வார்த்தார்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
அமுதுபொசித்திருந்தார் அழகானராசாவும்

அந்தவொருவேளையிலே வந்தானே தச்சனுந்தான்
மைந்தனைத்தானிடுக்கி வந்துபுகுந்தானே
குழந்தையைத்தாழவிட்டான் கொற்றப்போர்வீரியனும்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
அமுதான னுங்கிண்ணியிலே அனேகவதிசயங்கள்
ஒருபிடி அமுதெடுத்தால் மறுபடியெல்லாம்புழுவாம்
மற்றுமொருகிண்ணியிலே அள்ளிப்பொசிப்பார்கள்
முப்பத்திரண்டுகிண்ணி முழுதும்புழுவாகும்
அந்தப்புழுக்களெல்லாங் கிண்ணியிலேமேய்ந்திருக்கும்
திரியோதிரன் கலத்துப் புழுவை நீக்கின குழந்தையாகிய

கர்ணனை ஸ்ரீகாரங்கொண்டது.

அப்போதுகுழந்தையது அங்கேவிளையாடி
தண்டையசைய தவிழ்ந்துவிளையாடி
கிண்ணியருகில்வந்து மெள்ளெனவேகைதுவைத்தார்
கைதுவைத்தவேளையிலே கலத்துப்புழுவெல்லாம்
கலத்துப்புழுக்களெல்லாங் கண்டானே திரியோதிரன்
புழுக்களுமாறிப் போசனங்களாச்சுதங்கே
மற்றநிலைக்கிண்ணிகளை வைத்தாரெதிராக
அந்தக்கிண்ணிகளை அள்ளிற்று அக்குழந்தை
முப்பத்திரண்டுகிண்ணி முடிமன்னர்கையைவைக்க
புழுக்களுமாறி போசனங்களாச்சுதங்கே
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து

திரியோதிரன் சந்தோஷிப்பது.

பூரித்திருதோளும் பொன்னாபரணமின்ன
திரேகங்குளிர்ந்து இருதோளும்பூரித்து
உள்ளங்குளிர்ந்து உடம்பெல்லாம்பூரித்து
மைந்தனைவாரி மடிமேலேகொண்டணைத்து
கைத்தலத்தைத்தானெடுத்துக் கண்ணிலேஒத்திக்கொண்டான்
உச்சிமுகர்ந்து உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கந்தடவிப் பவளவாய்முத்தமிட்டு
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேவைத்திருந்து
பிள்ளைமுகம்பார்த்துப்பூ ரித்தான் திரியோதிரன்
தச்சன்முகம்நோக்கி தார்வேந்தனேதுசொல்வான்
அப்பாவேசிற்பாச்சாரி அடியேனொருவார்த்தை
எந்தன்மனதுக் கிசைந்தாப்போல்வாக்கருளும்
சிந்தையிலேயெண்ணி கேட்குதற்குவாக்கருளும்
திராசுகொண்டுவந்து தட்டில்குழந்தைவைத்து
திரவுகோல்தானெடுத்து மைந்தனைத்தானிருத்தி
குழந்தையளவுக்கு கொடுக்கிறேனிரத்தினங்கள்
பிள்ளையளவுக்கு போடுகிறேனிரத்தினங்கள்

### திரியோதிரன் தச்சனுக்கு குழந்தையிடக்குப் பொன்கொடுத்தது.

குறுக்கொன்றும்பேசாமல் குழந்தையையீந்துவிடும்
மறுவார்த்தைசொல்லாமல் மைந்தனையீந்துவிடும்
என்றுமவனுரைக்க ஏதுசொல்வான் தச்சனவன்
மன்னவனார்கேட்டதற்கு மறுவார்த்தைசொல்லாமல்
அரண்மனையார்கேட்பதற்கு அஞ்சிபயந்தவனும்
செங்கோல்முறைமைக்குமுன் சங்கீதமேருதென்றான்
சித்தத்துக்கேத்தபடி செய்தருளிக்கொள்ளுமென்றான்
உந்தன்மனதின்படி உகந்தருளிக்கொள்ளுமென்றான்
தேசத்தையாளுந்திரியோதிரன்கேட்டு
சந்தோஷப்பட்டுச் சீரங்கள்பூரித்து
இடைக்கிடைரத்தினங்கள் யெடுத்துநிறுத்திஞர்கள்
குழந்தையிடைகண்டு கொட்டிஞர்ரத்தினங்கள்
மைந்தனிடைகண்டு வாரியெடுத்தார்கள்

### பிராமணரையழைத்து நாமகரணஞ்சூட்டியது.

வேதப்பிராமணர் வேதியரைத்தானழைத்து
சாஸ்திரங்கள்தான்பார்த்து சாதகங்கள்தானெழுதி
நாளதுகேட்டு நடுநாள்முகூர்த்தமிட்டு
நாமமுடியாளுக்கு நாமகரணம்பண்ணிவைத்து
காஞ்சிநாடாளுங் கர்ணரென்றுபெயருமிட்டு
கலத்துப்புழுநீக்கின கர்ணரென்றுபெயருமிட்டு
மூன்றாம்வயதிலே முத்துமுடிதரித்து
நாலாம்வயதினிலே நாடாளச்சொப்பனிட்டு
ஐந்தாம்வயதிலே ஆணழகர்கர்ணருக்கு
இராச்சியமுறைமைகளை நன்றாய்தெரியவைத்து
ஏழாம்வயதிலே இளையபட்டங்கட்டிவைத்து

### காசிநாட்டை கர்ணருக்குப் பட்டஞ்சமர்ப்பித்தது.

போதேவருந்தடங்கும் பொன்னுருவிநாயகியை
மாலைமுடியாற்கு மணமுகூர்த்தம்பண்ணிவைத்து
அன்றுமுதலின்றளவும் ஆண்டிருந்தார்ராச்சியத்தை
மனதுகுறையில்லாமல் வையகத்தையாண்டிருந்தார்
ஏதுகுறையில்லாமல் இனியரசையாண்டிருந்தார்
இழிகுலத்தான்மாளிகையில் யிருந்தபடியாலே
தேர்ப்பாகனென்றுசொல்லி எங்குமேபோச்சு
காசிவளநாடாளுங் கர்னர்பெருமாளும்
ஐவர்க்குமூத்ததொரு ஆனந்தவாழ்மார்பன்
குந்தியம்மாள்பெற்றெடுத்த குலக்கொழுந்துயிவர்காணும்
உனக்குப்பெரியதந்தை என்றாரேஉத்தமனார்

### புனந்திரன் கர்ணரைக்காணுகிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்கேட்டு

புனந்திரன் றாது.

யானைவிட்டுக்கீழிறங்கி யானந்தவாழ்மார்பன்
பூவும்புதுமலரும் பொன்னருகு அட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருந்தானெடுத்து
காஞ்சிநாடாளுங் கர்ணருக்கெதிரேவந்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டார்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டார்
தந்தையார்சீர்பாதம் வணங்கினான்தார்வேந்தன்
வந்துபணிந்தவரைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைந்து

கர்ணர் புனந்திரனை வாழ்த்துகிறது.

வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீருந்திருப்பீர்
நிற்பீர்நிலைத்திருப்பீர் சீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வீர்
விற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வீர்
என்னைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெறுவீர்
பிள்ளைபெறுவீர் பெருமாள்பதம்பெறுவீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதேதேடிவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவீர்
இளைத்தார்கள்முடியைச் செண்டாட்டமாட்டிடுவீர்
பகைத்தார்கள்பூமுடியை பருந்தாட்டமாட்டிடுவீர்
மாத்தான்படைகளில் மன்னர்களைவென்றிடுவீர்
மதுரைப்பதியாள் மைந்தர்களைப்பெற்றிடுவீர்
அத்திபுரமாள ஆண்பிள்ளைபெற்றிடுவீர்
மாதர்களைமாலையிட்டு மைந்தர்களைப்பெற்றிடுவீர்
கன்னிகளைமாலையிட்டுக் காளைகளைப்பெற்றிடுவீர்
பெண்களைமாலையிட்டு புத்திரரைப்பெற்றிடுவீர்
பெற்றிடுவீர்பெற்றிடுவீர் பிள்ளைகள்பதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவீர்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திருப்பீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாழ்த்திவிடைகொடுத்து மார்போடேகொண்டணைத்து
காளைமுகம்நோக்கி கட்டழகரேதுசொல்வார்

பதுபடியும் கர்ணருரைப்பது.

தர்மர்வலுவெழுந்திர் தம்பிமார்தோளெழுந்திர்
வீமர்வலுவெழுந்திர் விசையனார்தோளெழுந்திர்
ஒப்பிவிட்டவாளை உறைபுருவிவிட்டாற்போல்
தப்பிவிட்டவர்நீருமிப்போ தம்பிபுனந்திரரே
வாயாரவாழ்த்தி மனதைப்பெரிதுபண்ணி

ஐயாபுனந்திரரே ஆணழகாநீர்கேளும்
வந்தவகையறியேன் மன்னுபுனந்திரரே
தேசத்தையாளுந் திரியோதிரன்சபையில்
தாமமுடியான் தைலாட்டானங்கிருப்பான்
அவரைநீகண்டாலே ஆசாரம்பண்ணுமென்றார்
ஆசாரம்பண்ணி அகலப்போய்நில்லுமென்றான்
கோணுதமாதவத்துக் குருக்களுமங்கிருப்பார்
அவரைநீகண்டாலே ஆசாரஞ்செய்யுமென்றார்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
அம்பலத்துவாசலிலே ஆசனங்கள்சொப்பனிட்டான்
நீவந்தவிசேஷ மதுவறிந்துமன்னவனும்
ஆழக்குழிதோண்டி அமைத்தான்படுகுழிகள்
ஈட்டிபிடிமன்னவர்கள் எழுநூறுகோடியுண்டு
கத்திபிடிமன்னவர்கள் கஸ்தியர்கோடியுண்டு
வாள்கத்திசூலாயுதம் வளவுதடிசக்கரங்கள்
இத்தனையுங்கொண்டு அமைத்தான்படுகுழியில்

மறுபடியுப் கர்னர் புத்திகூறுவது.

படுகுழிக்குமேலாம பச்சைதுகில்விரித்து
பூவாலேஆதினங்கள் போட்டார்கள்புனந்திரற்கு
ஆணழகனம்பலத்தில் ஆசனஞ்சென்றேறுதே
தட்டோடேவெற்றிலையும் சாதிக்காய்லவங்கங்களும்
கொத்தோடேபழக்குலையும் குடுமியுள்ளதேங்காயும்
மல்லிகைப்பூமாலைகளும் மார்நிறைந்ததாவடமும்
கச்சாயவர்க்கமெல்லாங் கட்டழகன்தானெடுத்து
உன்னையெதிர்காண வருவார்காணுத்தமனே
மன்னவன்கையிலே மாலைதரித்தாலே
மாலைதரித்தாலே மைந்தாபுனந்திரரே
கச்சாயந்தீண்டாதே கட்டழகர்வீரியனே
இத்தனையுஞ்சொல்லி யிருந்தாரேகர்னரப்போ
போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்கேட்டு
அப்படிக்கேநல்லதென்று அடிவணங்கிதெண்டனிட்டான்
தெண்டனிட்டதைந்தனைக் கண்டுமந்தகர்னருமே
ஏற்குமோஏற்குமோ யிழிகுலத்தானுனவற்கு
ஏற்குமோயெந்தனுக்கு உந்தனிடகும்பிடுதான்
சாதிகெட்டவெந்தனுக்கு உந்தனிடகும்பிடுதான்
ஐயாபுனந்திரரே ஆகாதுவென்றுரைத்து
என்றவுரைகேட்டு ஏதுசொல்வானிந்திரனும்
அதேதுஎன்னையா அதிசயமாய்நீருனரத்தீர்

புனந்திரர் கர்னனுக்குச் சொல்வது.

இவருக்குமூத்தவர்நீர் அப்படிக்குச்சொல்லலாமோ
என்றுமவனுரைத்து யிந்திராசாவும்

சிவசிவாவென்று திருச்செவியில்கையைவைத்து
அரகராவென்று அமர்த்திஅலைதாரன்
ஐயாநீர்கேளும் அடிபேறொருவார்த்தை
என்னையாநீர்கேளும் யின்னமொருவார்த்தை
ஐவரிடராச்சியத்தை யாளுங்காலுத்தமனே
மதுரைபெரும்பட்டணத்தை யாளுமென்றார்மன்னவனும்
நாலால்கடுந்திரளார் நூற்றொருவர்பூமுடியை
மாயனருளாலே மன்னவனேநானறுப்பேன்
சொக்கருளாலே அறுபபேறொருட்சனத்தில்
அவர்கள்குடிவேரறுத்து அரசாளவைப்பேன்யான்
அத்திபுரத்தை அரசாளுமையாவே
ஐவரும்நீரும் அரசாண்டிருந்தாக்கால்
தருமரும்வீமரும் தார்வேந்தரர்ச்சுனரும்
நகுலசகாதேவ ராசாக்களைந்துபேரும்
உமக்குகைகட்டிமெய்யுரைத்து கட்டழகர்தாமிருப்பார்
அடிகீழ்முடிசாய்ப்பார் ஐவர்பஞ்சபாண்டவர்கள்
அப்படிக்கேநீரிருந்து ஆளுமென்றான்ராச்சியத்தை
காஞ்சிநாடாளுங் கர்ணரதுகேட்டு
மைத்தர்முகம்நோக்கி மறுவார்த்தையேதுசொல்வார்

கர்ணர் புணந்திரற்கு உரைப்பது.

ஐயாபுணந்திரரே அவ்வார்த்தைசொல்லுகிறேன்கேள்
தேசத்தையாளுந் திரியோதிரராசன்
என்னை-வளர்த்தஅருமைகளும் வைத்திருந்தநேர்த்திகளும்
பின்னையருமைகளும் பேரிட்டநேர்த்திகளும்
எனக்காகப்பட்டதிவ ரெத்தனையோகோடியுண்டு
நான்வேட்டைக்குப்போனாலே வேல்பொருதுங்கண்ணனும்
மாளிவந்துசேருமட்டும் மண்டபஞ்சென்றேறான்காண
எனக்காகப்பட்டதவம் எத்தனையோகோடியுண்டு
எழுதமுடியாது யேட்டிலடங்காது
போதேவருந்தடங்கும் பொன்னுருவிநாயகிக்கு
மாலைதரிப்பதற்கு மன்னர்கள்தானறிய
அம்பத்தாறுதேசத்துக் அறைந்தார்பறையோசை
மண்டலத்துராசாக்கள் வந்தார்கள்பந்தலுக்கு
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
என்னைவரவழைத்து யெனக்குமிகவலங்கரித்து
என்னையழைத்து நடந்தார்காண்பந்தலுக்கு

இழிகுலத்தானென்றுசொல்லி கர்ணனையிகழ்ந்தது.

ஆசாரிப்பிள்ளையென்று அனைவோருமாகாதென்றார்
தச்சினிடபிள்ளையென்று தள்ளிவிட்டாரென்னையவர்
அப்போதிரியோதிரன் அரசாளும்ராசமன்னன்
சிம்மாசனமேறித் தேன்மொழியான்வீற்றிருந்தான்

என்னையவர்தள்ளிவிட்ட சேதியவரறிந்து
மண்டலத்தார்தானறிய மடிமேலேகொண்டணைத்தார்
மண்டலத்துராசாக்கள் வந்தசபைநடுவே
தேசத்துராசாக்கள் யிருக்குஞ்சபைநடுவே
போதேவருந்தடங்கள் பொன்னுருவியன்னுச்சி
மாதரிளங்கொடியாள் மாலைசுழற்றிவந்தாள்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
மாலையிடுங்களென்று மாயவரைத்தானழைத்தான்
மாயர்பெருமாளும் மாயமாய்வந்துவிட்டார்

ஸ்ரீகிருஷ்ணர் வந்தது.

கெருடன்வடிவெடுத்து கெற்சனையிட்டுமல்லோ
மாதினிடகைமாலை பறித்தாரேமாயவரும்
மாலையிவர்பறித்த சேதியிவனறிந்து
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமாள்
கணையாழிமோதிரத்தைக் கழட்டிவிட்டார்பூமியிலே
என்னைக்குனிந்து யெடுமென்றார்மோதிரத்தை
குனிந்துஎடுக்கையிலே கோபலர்மைத்துனரும்
மாலைநழுகவிட்டார் வந்துவிழுந்ததுகாண்
எந்தனிடகழுத்தில் விழுந்ததுபூமாலை
அங்கிருக்கும்ராசாக்கள் அனைவோருந்தான்பார்த்து
இழிகுலத்தான்தன்கழுத்தில் விழுந்ததுபூமாலை
தட்டிநகைத்துமல்லோ தார்வேந்தாபோய்நடந்தார்
கைகட்டிவாய்புதைத்துக் கட்டழகர்போய்நடந்தார்
போதவருந்தடங்கண் பொன்னுருவிநாயகிக்கு
ஐம்பதுபேரய்யன்மார் ஆச்சிமாரம்பதுபேர்
அத்தண்டபேர்களும் அனைவோருமேதுசெய்தார்

பொன்னுருவிதாய்தகப்பன்மார் புறக்கடையாலோடுகிறது.

அடியில்சமைத்திருக்க அத்தனையுந்தானெடுத்து
மண்ணைவெட்டித்தான்புதைத்து மன்னவர்கள்ஓடலுற்றார்
புறக்கடைவீதியிலே போய்நடந்தார்மன்னவர்கள்
அன்றுமுதலின்றளவும் அவர்கள்வரவுமில்லை
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
போதவருந்தடங்கும் பொன்னுருவிநாயகிக்கு
ஐயன்மார்சீர்போலநடத்திறனுணழகன்
எதுகுறையில்லாமல் யின்றளவுந்தான்பட்டான்
எனக்காகப்பட்டதவம் எத்தனையோகோடியுண்டு
மனமாறப்பட்டதவம் மன்னவனேகோடியுண்டு
மற்றுமொருநாளில் மன்னவசேயெந்தனுக்கு
காய்ச்சலடிக்கிறதும் கண்ணைச்சொருகிறதும்
விக்கலெடுக்கிறதும் வில்லாட்டம்வாடுகிறதும்
எட்டுநாளங்கனமா யிருந்தேன்படுக்கையிலே

பக்தியங்களுண்டு படுக்கவேயாகாதென்று
பெடைமயில்கண்ணாள் பெருந்திருவாள்நாயகியை
திரியோதிரன்பஞ்சணைமேல் தாமிருவர்வீற்றிருந்து
சொக்கட்டான்சூது சதுரங்கமாடினேன்காண்
திரியோதிரன்தேவி தோற்றாள்பெருந்திருவாள்
மாலைமுடியாளும் மறவுக்குப்போகவென்று
எழுந்துநடக்கையிலே எத்திலங்குபூமுடியாள்
அவள்-முந்தாணிபற்றி யிழுத்தேன்காண்மன்னவனே
துகிலாடைபற்றி யிழுத்துமிருக்கையிலே
முத்தாலேகோர்த்த துகிலாடையத்தனையும்
பற்றியிழுக்கையிலே பலமென்றுதான்விழுந்து
கோர்த்தநூலற்று குலைந்ததுமுத்துகள்தான்
நிர்வாணமானாளே நித்திலங்குபூமுடியாள்
மானங்குலைந்து மறைவாகவோடுகிறாள்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
மாலைமுடியாளும் வனவேட்டையாடியல்லோ
மான்வேட்டையாடியல்லோ வந்தாரரன்மனைக்கு
அங்கேநடந்த அதிசயமுள்ளதெல்லாம்
சொக்கட்டான்சூது சதுரங்கமாடினதும்
கோர்த்தமுத்துதாவடங்கள் குவிந்துகிடக்கிறதும்
ஆடைகளைந்துமவள் அம்பலமானதுவும்
மாலைமுடியாள் மறவாய்ப்பிணங்கினதும்
அத்தனையுங்கண்டானே ஆறலழகுமன்னன்
அங்கிருக்குந்தாதியர்கள் அனேகம்பேரதுசொல்வார்

தாதிகள் சொல்வது.

இன்றுகர்ணர் மடிந்திடுவாரென்பார்கள்
செத்தான்கர்ணனென்று சொல்வார்களனேகம்பேர்
மாண்டான்கர்ணனென்று மண்டலத்தார்சொல்லிடுவார்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
தன்மேலிருந்த துகிலாடைதான்களைந்து
மாலைகுழலாட்கு மங்கையர்க்குத்தான்கொடுத்து
பெற்றதொருபுத்திரனார் பிள்ளைக்கோபோயொளித்தாய்
வாருங்காண்மங்கையரே என்றுமனந்தேற்றி
மாலைக்குழலாளை மடிமேலேகொண்டணைத்து
எந்தன்முகம்நோக்கி எனக்கிதவுதானுரைத்தார்
அந்தசகாயம் அதுதான்மறப்பேனோ
எனக்காகப்பட்டதவம் எத்தனையோகோடியுண்டு
படவேணும்படவேணும் பார்த்தன்கையம்பாலே
இன்னம்படவேணும் எழில்விசையனம்பாலே
தேசத்தையாளுந் திரியோதிரனுக்கு
செஞ்சோற்றுக்கடன்கழிக்க வேணுங்காணிந்திரரே

என்றுமவருரைத்து யெழுந்தார்கர்ணராசர்
போகவிடைதாருமென்று போர்கருணர்தான்கேட்க
கைதொழுதுயிந்திரனுர் கட்டழகரேதுசொல்வார்
போய்வாருமென்றுசொல்லிப் பொன்னடிக்குதெண்டனிட்டார்
விடைபெற்றுத்தானெழுந்தார் வேந்தர்கர்ணராசன்
கர்ணரவர்போனபின்பு கட்டழகனிந்திரனும்

புனந்திரன் போவது.

மற்றோர்படிகடந்தான் மன்னன்படைஅயர்ந்தான்
மற்றோர்படிகடந்து மன்னவன்போகலுற்றான்
காசிவளநாடாளுங் கர்ணர்பெருமானும்
அம்பலஞ்சென்றேறி யானந்தவாழ்மார்பன்
தேசத்தையாளுந் திரியோதிரன்கொலுவில்
வந்துமிவர்வீற்றிருந்தார் மன்னர்கர்ணரங்கே
தேசத்தையாளுந்திரியோதிராசருக்கு
காஞ்சிநாடாளுங் கர்ணரவரேதுசொல்வார்

கர்ணர் திரியனுக்குச்சொல்வது.

மதுரைப்பதியாளும் வாழ்பாண்டிநாட்டானும்
தம்பிபரிகொடுத்து வந்தானேதார்வேந்தன்
எதிரேபோய்காணுமென்று எத்திலங்குபூமுடியான்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கச்சாயம்பூமலருங் கணம்பெறவேதானெடுத்து
தட்டோடேவெற்றிலையுஞ் சாதிக்காயேலங்களும்
கொத்தோடேபழவகையும் கொற்றவனுர்தானெடுத்து
ஆளுந்தலையி லெடுப்பித்தானணழகன்
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூசல்லடமாம்
தூக்கிவைக்குக்கால்களுக்கு அத்திப்பூசல்லடமாம்
தட்டிவரிந்துகட்டி தாமரைப்பூசுங்குவிட்டு
அத்தண்டவீரருடன் வாரானே திரியோதிரன்
அம்பலத்துவாசல்விட்டு வாரானே ஆணழகன்
போரஞ்சாமன்னர் புனந்திரன்முன்னேவந்து
ஐவர்வரவுகண்டு ஆணழகனிந்திரனும்

புனந்திரன் யானையின்மேலிருந்துவினவுகிறது.

ஆனையின்மேல்தானே யிருந்தபடியாக
வாளெடுத்துமுன்னேவந்து வணங்கினுன்மன்னவனும்
தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
சரியானைமேலிருந்து தார்வேந்தனேதுசொல்வான்
கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
பத்தியநாகம் பவளம்போற்கண்சிவந்து
குன்றுபோற்கண்சிவந்து கோபமதிகரித்து
நெத்திப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தை கிட்டிவருவதுபோல்

அக்கினிமண்டலத்தை அடுத்துச்சுவாலயமாய்
போரஞ்சாமன்னர் புனந்திரரைத்தான்பார்த்து
தேசத்தையாளுந் திரியோதிரனேதுசொல்வான்

திரியோதிரன் சொல்வது.

ஐவர்கள்பெற்றெடுத்த ஆணழகவீரியரே
காளையவர்கள்பெற்றெடுத்த கட்டழகனிந்திரரே
அழகியசீர்கொம்பனையா ளல்லித்திருமகனே
யானைவிட்டுக்கிழிறங்கி யடிபணந்தாலாகாதோ
குதிரைவிட்டுக்கிழிறங்கி கும்பிட்டாலாகாதோ
வாளெடுத்துக்கிழிறங்கி வணங்கினாலாகாதோ
ஐவரிடவம்மிசத்துக் காகாதோமன்னவனே
குருகுலத்தார்வங்கிஷத்துக் கொவ்வாதோமன்னவனே
ஏன் றுமவருரைத்து ஏதுசொல்வார் திரியோதிரன்
கொண்டுவந்தகச்சாயங் கொற்றவர்க்குமுன்னேவைத்து
தான்கொண்டுவந்ததெல்லாந் தார்வேந்தர்முன்னேவைத்து
விந்திரர்முகம்நோக்கி யேதுசொல்வான் திரியோதிரன்

மறுபடியும் திரியோதிரன் சொல்வது.

தம்பிவலுவிழுந்தீர் தம்பிமார்சிரழிந்தீர்
வீமர்வலுவிழுந்தீர் விசையனார்சீரழிந்தீர்
ஒப்பிட்டவாளை வுறையுருவிவிட்டார்போல்
தம்பிட்டீர்நீருமிப்போ தம்பிதனஞ்சயரே
ஆளப்பிறந்த அபிமர்முடியிழந்தீர்
அத்தாணிதீராத அரவான்முடியிழந்தீர்
தாமமுடியான் கடோற்கஜன்முடியிழந்தீர்
ஆறிவிடும்ஆறிவிடும் அப்பாலேஆறிவிடும்
தேறிவிடுந்தேறிவிடும் தேவனேதேறிவிடும்
கச்சாயங்கொண்டுவந்தேன் காளைபொசியுமென்றான்
பலகாரங்கொண்டுவந்தேன் பாலகனேபுசியுமென்றான்
உண்டுபசியாறும் உத்தமனார்வீரியரே
தின்றுபசியாறும் காளையுடபுத்திரனே
இந்தாருமென்று யெடுத்துமவன்கைநீட்டி

புனந்திரன் சொல்வது.

போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
தம்பியைநான்கொடுத்து தற்சோர்ந்துநிற்கையிலே
உடப்பிறப்பைநான்தோற்று உயிர்சோர்ந்துநிற்கையிலே
ஒருவர்கள்தன்மனையில் உண்ணேனென்றான்பாலமிர்தம்
சூதங்கள்தீராதே தின்னேன்காண்பாலமிர்தம்
மாலைதரிப்பதில்லை மன்னர்பெருமானே
தக்கோலந்தின்பதில்லை தனஞ்சயரேயென்றுரைத்தான்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு

மகுடமுடியசைக்கி மர்மமுரையாமல்
அம்பலத்துவாசலிலே ஆணழகன்வந்தாலே
மண்டையுடைத்திடுவேன் வல்லுயிரைவாங்கிடுவேன்
பொய்யாசனமிடுவோம் பொற்கைவளர்பாண்டியற்கு
அத்தாலுஞ்சாகாமல் தப்பிப்பிழைத்தாரே
தப்பிப்பிழைத்தாரே தார்வேந்தர்பூமுடியை
எந்தவிதமானாலும் யிறக்கவழிதேடிடுவோம்
என்றுமனதிலெண்ணி யேகிநடக்கலுற்றான்

திரியோதிரன் சிம்மாசனம்வந்துவிட்டது.

தென்னமுடிவேந்தன் திரியோதிரன் திரும்பி
அம்பலத்துவாசலிலே ஆணழகன்வந்துநின்று
எரிநாகங்கொண்டவனும் ஏறினான்சிம்மாசனம்
அங்கிருக்குமன்னர் அரையாதுரைகளெல்லாம்
புத்திரரைக்காண நடந்தீரேபுண்ணியரே
மைந்தரைக்கண்டு புகழ்ந்துவரவோடினதும்
அத்தனையுஞ்சொல்லுமென்றார் அங்கிருக்கும்வீரியர்கள்
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
போனதுவும்வந்ததுவும் புத்திரரைக்கண்டதுவும்
அங்கேநடந்த விசேடங்களத்தனையும்
சொல்லிக்குதித்தானே துரைகளுக்குமுன்பாக
அத்தண்டபேரும் அனைவோருந்தான்கேட்டு
நல்லதென்றுவீற்றிருந்தார் நாமமுடியார்கள்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
சாமத்துரோகி சகுனியைத்தானழைத்து

திரியோதிரன் சகுனிக்கெடுத்துரைப்பது.

அம்மான்முகம்நோக்கி ஆணழகனேதுசொல்வான்
வையைவளநாட்டான் வாரான்கொலுவிக்கு
வளநாடாள்புத்திரனும் வாரான்கொலுக்காண
கொம்பனையாள்புத்திரனை கொல்லவகைதேடும்
மாயன்மருமகனை மாளவழிதேடுமென்றான்
சாமத்துரோகி சகுனியவன்கேட்டு
மருமகன்முகம்நோக்கி மன்னவனேதுசொல்வான்
வளநாடிப்புத்திரனைக் கொல்லவேவேணுமென்றான்
அருச்சுனனார்புத்திரனை யழகுபுனந்திரன்!
அவனையேகொல்லுதற்கு அநேகம்பேர்வேணுமோ
ஆனந்தமார்பனுக்கு அனேகம்பேர்வேணுமோ
பொய்யாதினமிடுங்கான் பொய்கைவளநாடனுக்கு
ஆதினஞ்சென்றேறினால் அதிலேயிறந்திடுவான்
உள்ளிருக்குமன்னவர்கள் செல்லாயெரித்திடுவார்
செத்துமடிந்திடுவான் சிவலோகஞ்சேர்த்திடுவான்
மாண்டுமடிந்திடுவான் வைகுண்டஞ்சேர்ந்திடுவான்

என்றுமவருரைக்க யெழில்காகந்தான்கேட்டு
அங்கிருக்குந்தூதுவரை யானமுகன்தானழைத்து

தூதுவர்கள் குழிவெட்டி சூதுமார்க்கமாயிரங்கி
மருந்துகள் புதைப்பது.

ஆழக்குழிதோண்டி யடையுமென்றான்மன்னவரை
பாதாளலோகமட்டும் படுகுழிவெட்டுகிறான்
ஆழக்குழிதோண்டி ஆச்சுதென்றுதெண்டனிட்டார்
வண்ணலட்சமன்னர்களை விட்டானதில்திரப்பி
ஈட்டித்துப்பாக்கிகளும் ஈயகுண்டுசக்கரமும்
வாங்குநல்லஆயுதமும் வளைதடிசக்கரமும்
கத்திதுப்பாக்கிகளும் கஸ்கிரியர்சேனைகளும்
அத்தனையுங்கொண்டு நிறைத்தார்படுகுழியை
படுகுழிமேலாதினங்கள் சொப்பனிட்டாரிந்திரர்கு
வச்சிரமிழைத்து முகப்புல்கல்லிழைத்து
முத்துமுடியாதினங்கள் சொப்பனிட்டாரிந்திரர்கு
ஆதினங்கள்சோடித்து ஆச்சுதென்றுதெண்டனிட்டார்
காகக்கொடிவேந்தன் கேட்டுமனமகிழ்ந்து
நிறைந்தகொலுமுகத்தில் யிருந்தான்நிரியோதிரன்
இப்படியாக இவனிருக்கும்வேளையிலே
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்

புனந்திரன் தைலாட்டான் மண்டபங்காணுகிறது.

மற்றோர்படிகடந்தான் மன்னன்படியுயர்ந்தான்
மற்றோர்படிகடந்து வாரானேமன்னவனும்
நின்றால்நிலாவுரைக்கும் நிலக்கால்மண்டபமும்
பார்த்தால்நிலாவுரைக்கும் பவளநல்லகோபுரமும்
முத்தாலேகால்நிறுத்தி முழுதிலுஞ்சொப்பனிட்டு
பளிங்குமாமண்டபங்கள் பவளத்தால்சொப்பனிட்டு
காங்குநிலாவெளிச்சம் யெத்திசையுந்தீர்தெளிக்கும்
கண்கொள்ளாச்சேர்வையுடன் யிருக்குமாமண்டபந்தான்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து
ஆருது ஆருது என்றானலெதாரன்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
தானைக்குத்தானை தைலாட்டான்மண்டபங்காண்
என்றுமவருரைக்க யிந்திரருந்தான்கேட்டு

புனந்திரன் தைலாட்டானைத்தொழுகிறது.

ஆனைவிட்டுக்கீழிறங்கி யானந்தவாழ்மார்பன்
பூவும்புதுமலரும் பொன்னருகுஅட்சதையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
தாமமுடியான் தைலாட்டன்முன்னேவந்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து

முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
தெண்டனிட்டமன்னவனை கண்டுமேதைலாட்டான்
நீ-ஆர்காணும்மன்னவனே அறியவுரையுமென்றான்
கண்ணில்லாயெந்தனுக்கு காணவுரையுமென்றான்

பொன்னுமலைநாடான் சொல்லுவது.

பொன்னுமலைநாடாளும் அண்ணுவுமேதுசொல்வார்
மதுரையறுகாதம் வாழ்மதுரைமுக்காதம்
பொய்கையறுகாதம் பூமதுரைமுக்காதம்
அன்பத்தாறுகாதம் ஆண்டிருந்தார்பாண்டியர்கள்
மைந்தர்களில்லாதே மலைமேற்றவமிருந்தார்
மாளாதேயென்று மலரிலவதரித்தாள்
ஏழுபிராயத்திலே யெதிர்த்துவந்தநீன்முகனை
நீன்முகனைக்கொன்று நீலிபட்டமாண்டவர்காண்
மன்னர்விசையன் மடலூர்ந்தமாதேவி
காளைவிசையன் கட்டழகன்மாதேவி
மதுரைப்பதியாளும் வையைவளநாட்டான்
வையைவளநாட்டான் வளநாடியல்லியரும்
அல்லியயின்றெடுத்த அழகுபுனந்திரனார்
காண்டாவனமெரித்த காளையும்புத்திரனார்
என்றுமவனுரைக்க விழியில்லாதான்கேட்டு

தையலாட்டானுரைப்பது.

ஐயாபுனந்திரரே அழகுள்ளகண்மணியே
ஐவர்க்கும்நூற்றுவர்க்கும் அழகுள்ளகண்மணியே
எங்கள்குடைவிளங்க வந்துதித்தரத்தினமே
ஐயாவருக அழகுள்ளகண்மணியே
என்றுமவருரைக்க யிந்திரருந்தான்பார்த்து
பாட்டான்திருவடியை பணிந்தானேபாண்டியனும்
காண்கிறேனென்றுசொல்லி கால்மேல்முடிசாய்த்தான்
கண்ணில்லாதான்பார்த்து கடுகெனவேவாழ்த்தலுற்றான்
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வாழ்ந்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீராசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வீர்
விற்பதித்ததூண்போலே விளங்கஅரசாள்வீர்
என்னைப்பெருவீர் எதித்தார்முடிபெறுவீர்
பிள்ளைபெறுவீர் பெருமாள்பதம்பெறுவீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டஞ்சூட்டிடுவீர்
சினத்தார்கள்பூமுடியைச் செண்டாட்டமாட்டிடுவீர்
பகைத்தார்கள்பூமுடியை பருந்தாட்டமாட்டிடுவீர்
மாத்தான்படைநடுவில் மன்னர்களைவென்றிடுவீர்

அத்திபுரமாள ஆண்பிள்ளைபெற்றிடுவீர்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரூடி
மூங்கில்போல்சுற்றும் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனமாரவாழ்த்தினார்
வாழ்ந்திடுவீரென்று மனங்குளிரவாழ்த்தினார்
வாயால்வாழ்த்தியபின் விழியில்லாதான்பார்த்து
எங்கிருந்தாயிந்திரரே யென்றுமவன்வாரானே
அங்குமொருதூணை யடைவாகக்காண்பித்து
மற்றுமொருதூணில் மறைந்தாரேயிந்திரரும்

குருடன் தூணைகட்டிநெறித்தது.

கண்ணில்லான் தானெழுந்து காவலுந்தான்பார்த்து
புனந்திரனைக்கட்டி யணைப்பதுபோல்புண்ணியனும்
தூணைகட்டுதான்பிடித்தார் துன்னிலங்கண்ணனும்
அப்பாமகனேயென்று யணைத்தானேகற்றூணை
அணைத்துப்பிடித்து அழுத்திநெரித்தானே
இவன் கட்டிநெரித்ததினால் கற்றூணுநெரிந்தது
சேர்த்துபிடித்ததி லற்றதுகற்றூணு
கற்றூணுமிற்று கலங்கிறதுமண்டபங்கள்
நாடுகலங்கி நகருகள்தத்தளித்து, பூமிகலங்கிப் புழுதிபறக்கிறது
அண்டாண்டந்தானதிர ஆகாயமிற்றுவிழ
கண்டகண்டமன்னரெல்லாம் கைகள்நடுங்கலுற்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்பார்த்து
தானுக்குத்தாதை தையலாட்டனேதுசொல்வான்
பாட்டன்முகம்நோக்கி பாண்டியனுமேதுசொல்வான்
என்னையாநீர்கேளும் என்னுடையநல்வார்த்தை
ஆணழகர்பஞ்சவரை ஐவரையுந்தானழைத்து
வெற்றிமதயானை வீமருக்குளண்ணைவிட்டு
முழுகுங்குளந்தனிலே முழுதுமேவாசிநட்டு
குளிக்குந்துறைகளிலே கொண்டமட்டும்நட்டீரே
அத்தாலுந்தப்பிப் பிவழத்தார்களாணழகர்
மாயனிடபுண்ணியத்தால் மன்னர்பிழைத்தார்கள்
அன்னமிடவழைத்து அன்னத்தில்நஞ்சையிட்டீர்
மதகரியான்வீமராசன் வாரியல்லோவுண்டானே
உண்டுமடிந்தானே உத்தமனார்வீரியனும்
மாயனொருசந்நியாசி வேஷமெடுத்துமல்லோ
மருந்துப்பைதோளில்வைத்து
அத்தாலுந்தப்பி பிழைத்தார்மளாணழகர்
மாயனிடபுண்ணியத்தால் மன்னர்பிழைத்தார்கள்
ஆயரிடபுண்ணியத்தால் ஐவர்பிழைத்தார்கள்
ஐவரையுந்தானழைத்து அம்பலங்களேற்றிவைத்து
மாயத்தால்சூதாடி மண்ணிழக்கபண்டாரித்து

மாதைத்துகிலுரிந்து மன்னவரைக்காட்டிேட
கோதைத்துகிலுரிந்து கொற்றவரைக்காட்டிேட
பருக்கல்உருத்த பனிவந்தலைமோத
ஓடும்பருக்கை உள்ளங்கால்தானறுத்த
கவிழ்ந்தமரத்தடியில் கண்பள்ளிகொண்டிருந்தார்
ஐவருயிர்பிழைக்கப் புண்ணியரேமன்னவரே
பஞ்சவர்கள்மாள நினைந்தீர்கள்பாவிகளே
அப்படிக்குயென்னை நெறிக்கநினைந்தீரே
நீ-கண்ணில்லாரானதினால் கலியுகத்தில்வாசம்பண்ணி
விழியில்லாராகையினால் யிருந்திரோவின்னுலகில்

மறுபடியும் புனந்திரன் சொல்லுவது.

உந்தனதுபுத்திரர்கள் நூற்றிருவரல்லாது
நூற்றிருவரல்லாது வேற்றிருவராகாதோ
மன்னவர்களல்லாமல் மற்றிருவராகாதோ
எல்லவரையுங்கொன்று ஆளனுமோராச்சியத்தை
என்றுமவனுரைத்து யெழுதிருந்தானிந்திரனும்
படிபடியென்றான் படித்ததுஅவ்வானை
முக்கம்பம்தட்டி முதுகின்மேல்கையைவைத்து
கைத்தலத்தைத்தட்டி கறுத்தானையேறினர்
அம்மானுந்தானும் அழகானையேறினர்
மாமாவுந்தானும் மதயானையேறினர்
வந்தவந்தபேர்களெல்லாம்வாகனஞ்சென்றேறினர்
மற்றோர்படிகடந்து வாறானேமன்னவனும்

புனந்திரன் திரியோதிரன் சிம்மாதனம் வருவது.

தேசத்தையாளுந் திரியோதிரன்கொலுவில்
அம்மலத்துச்சேர்வைகளும் அழகுள்ளமன்னர்களும்
அம்பலத்துவாசலிலே யினைவோருமிருந்தார்
தேசத்தையாளுந் திரியோதிரனும்
செண்டாடுமன்னன் திரியோதிரனுடும்
நாலால்கடுந்திர நூற்றிருவராசாக்களும்
பாட்டனார்விஷ்டுமரும் பரத்துவாசனும்
சிற்றப்பவிதுரனுஞ் சிறுள்ளகாங்கையனும்
காஞ்சிநாடாளுங் கர்ணசிகாமணியும்
தங்கைமணவாளன் தலைதலையாள்விரியனும்
அம்மான்சகுனி யவன்தோழனவனும்
ஈட்டிப்பிடிமன்னர் யிருபுறமுஞ்சூழ்ந்துநிற்க
கத்திபிடிமன்னவர்கள் கல்கிரியாசூழ்ந்துநிற்க
முத்துமுடிதரித்த முடிமன்னரங்கிருக்க
இரத்தினமுடிதரித்த ராசாக்களங்கிருந்தார்
மகுடமுடிதரித்த மந்திரிகளங்கிருந்தார்
இவரைச்சுற்றிச்சூழ்ந்திருப்பார் [illegible] சேனைகளும்

வெளிபுரத்தில்விற்றிருப்பார் அனேகங்கோடிமன்னவர்கள்
அந்தசமயத்தில் அழகுபுனந்திரனார்
வந்துவெள்ளம்சேனையுடன் வந்துமெள்ளநுழைந்தான்

## புனந்திரன் திரியோதிரன் சபையில்வந்தது.

ஆனைவிட்டுக்கீழிறங்கி ஆனந்தவாழ்மார்பன்
வாளுருவிகைபிடித்து வல்லயத்தைதோளிலிட்டு
கத்தியுருவி நடந்தானேகட்டழகன்
போரஞ்சாமன்னர் புனந்திரருமுள்நுழைந்தார்
நிறைந்தகொலுநடுவே நித்திலங்குபூமுடியாள்
வந்துமங்கேநின்றுமே மைந்தர்புனந்திரரும்
அங்கிருக்குமன்னவர்கள் அரையர்துரையரெல்லாம்
எழுந்துவந்துகைகொடுத்தா ரிந்திரானவற்கு
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
கோணுநமாதவத்துக் குருக்களுக்குமுன்னேவந்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்காலவலம்வந்து மூவிருகால்தெண்டனிட்டு
தெண்டனிட்டமன்னன் திரும்பியெழுந்திருந்து
மோதிரமின்ன முடிமேலேகைதொழுது
கோணுதமாதவத்துக் குருக்களவர்பார்த்து
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்துமவர் மார்போடேதானணைத்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீருத்திருப்பீர்
திற்பீர்சிலைதரிப்பீர் நீரரசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலக் கலங்காதரசாள்வீர்
சிற்பதித்ததூண்போல விளங்கஅரசாள்வீர்
போருக்குப்போவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே வீரபட்டங்கட்டிடுவீர்
மாதர்களைமாலையிட்டு மைந்தரைப்பெற்றிடுவீர்
கன்னிகளைமாலையிட்டு காளைகளைப்பெற்றிடுவீர்
பெண்களைமாலையிட்டுப் பிள்ளைகளைப்பெற்றிடுவீர்
பெற்றிடுவீர்பெற்றிடுவீர் பிள்ளைபதினாறும்
பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவீர்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனங்குளிரவாழ்த்தினார்
அட்சதையும்பூவுமல்லோ அள்ளியவர்கைகொடுத்தார்
போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்
ஒருகையால்வாங்காம லிருகையால்தான்வாங்கி

இருகையால்தான்வாங்கி யிந்திருந்தான் தரித்தார்
பாட்டனார்வீஷ்டுமரைப் பாதம்பணியலுற்றார்
அட்சதையும்பூவுமல்லோ அடிவணங்கிதெண்டனிட்டார் (மண
வாயாழவாழ்த்தி மரோடுறவணைத்து, வந்துபணிந்தவரைக்கண்டு
மகிழ்ந்து, மைந்தரைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்து
உச்சிமுகந்துபிள்ளை உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கம்தடவிப் பவளவாய்முத்தமிட்டு
கைத்தலத்தைதானெடுத்துக் கண்ணிலேஒத்திக்கொண்டு
அர்ச்சுனனார்புத்திரனை யாளுலழகுமன்னன்
வந்தகருமம் வகையேதுசொல்லுமென்றார்

புனந்திரன்சொல்லல்.

அப்போபுனந்திரரும் ஆணழகரேதுசொல்வார்
ஐவரையரு ஆழிவசந்தாரும்
பேர்பெற்றுடைய பெருமாளும்பாண்டவர்கள்
வேந்தர்பெருமாளும் வெளிபண்டபத்தில்வந்திருந்து
பேரப்பாரப்பா பெரியபபாதங்களுக்கு
தூதுரைக்கவந்தேனென்று சொல்லியவனுரைத்தான்
பாட்டனார்வீஷ்மரும் கேட்டுமனமகிழ்ந்து
வந்தகருமம் முடியுங்காண்மன்னவனே
அந்தவுரைகேட்டு ஆணழகன்போய்நடந்தான்
மற்றப்பாவிதுரருக்குச் சீரடியைத்தெண்டனிட்டான்
சிலர்போட்டுதெண்டனிட்டான் மன்னவனார்சீர்பாதம்

விதுரர் வாழ்த்துவது.

வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
வந்தகருமம் வகையாய்முடியுமென்றான்
அப்படியேநல்லதென்று ஆணழகன்போய்நடந்தான்
காங்கையன்சீர்பாதம் கட்டழகன்தெண்டனிட்டான்
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
ஆயிரம்பாண்டியர்களையன்மார்தன்சுகமும்
வளநாடுஅல்லியரும் மாதுசுகமோதான்
போரஞ்சாமன்னர் புனந்திரனாரேதுசொல்வார்
ஆண்டவனார்புண்ணியத்தாய் அனைவோருதான்சுகமே
என்றுமவருரைத்து யிருக்கின்றவேளையிலே

திரியோதிரன் கர்ணரைப்பார்த்துரைப்பது.

தேசத்தையாளுந் திரியோதிரன்பார்த்து
காணர்முகம்நோக்கி கட்டழகனேதுசொல்வான்
போரஞ்சாமன்னர் புனந்திரனற்சீர்முகமும்
காஞ்சிநாடாளுங் கர்ணரேயுன்முகமும்
இருமுகமும்ஒருமுகமா யிருக்குதேவுந்தனுக்கு

மதுரைக்கொரு பயணம் மன்னவரேபோனீரே
மாதரசி அல்லியவள் முழுகிக்குளிக்கையிலே
முழுகிக்குளிக்கையிலே முகத்தில்முழித்தீரோ
முகத்தில்முழித்தாளோ வயிற்றிலடைந்தானோ
உந்தன்முகம்பார்த்து பெற்றாளோபுத்திரனை
போரஞ்சாமன்னன் புனந்திரனைப்பெற்றாளோ
என்றுமவனுரைத்து யிருந்தான்சபைநடுவே

### கர்ணர் திரியோதிரனைப்பார்த்து கோபித்தல்.

காஞ்சிநாடாளுங் கர்ணரவர்கேட்டு
கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகரித்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலயமாய்
அக்கினிமண்டலத்தை அடித்துச்சுவாலயமாய்
தோழன்முகம்பார்த்து சொல்வாரொருவார்த்தை
ஆடம்பலத்தே அரசர்சபைநடுவே
இப்பெரியராச மிருக்கும்சபைநடுவே
இராசாக்கள்முன்பாக நாடாதவார்த்தைசொன்னீர்
மன்னவர்முன்பாக நாடாதவார்த்தைசொன்னீர்
அறியாதகாளையிலே அடியேனைக்கொண்டுவந்து
தெரியாதகாளையிலே தேடியெனையெடுத்து
பாலமிர்தந்தாராட்டி வளர்த்தீரழகாக
செய்யமிர்தமூட்டி வளர்த்தீரழகாக
மூன்றாமிராயத்திலே முத்துமுடிதரித்தீர்
நாலுவயதுதனில் நாகக்கணைகொடுத்தீர்
ஐந்துவயதுதனில் அப்பியாசவித்தைபண்ணீர்
ஆறுவயதினிலே ஆனைமேலேற்றிவைத்தீர்
எட்டாம்வயதினிலே எனக்குள்ளவித்தையெல்லாம்
ஒன்பதிலுங்கற்றுக் கொடுத்தீரேஉத்தமரே
பத்தாம்வயதுதனில் பாருலகமாளவைத்தீர்
அன்றுமுதலின்றொருநாள் அடாபழிவந்ததில்லை
என்னைக்கடுமுகமாய் உரைத்ததில்லைஉத்தமரே
இன்றபழிபாவம் என்னமோதானறியேன்
என்றுமனஞ்சலித்து யிருந்தாரொருபுறமாய்
மன்னர்மனஞ்சலித்து மர்மமாய்வீற்றிருந்தார்

### புனந்திரன் திரியோதிரன் முன்பாக வந்தது.

போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்
மன்னர்சபைதாண்டி திரும்பிறைந்தமுகம்
தேசத்தையாளுந் திரியோதிரன்முன்னேவந்து
ஆசனத்தைக்காட்டி அதன்மேலேவீற்றிரென்றான்
காஞ்சிநாடாளுங் கர்ணர்பெருமானும்

கண்சாடைகாட்டினர் காவலம்பூவீரியரும்
அப்பெரியசாடை யறிந்தந்தயிந்திரனர்
சிம்மாதனத்தருகே திரும்பினரிந்திரரும்
உற்றுற்றுப்பாரத்தாரே ஒளிபிறந்தகண்ணாலே
அப்பெரியஆசனத்தை ஆணழகனேதுசெய்தான்

புனந்திரன் தமக்கிட்ட சிம்மாதனத்தை எத்தியெறிகிறது.

வாளாலேஎத்தி எறிந்தானேவல்வாயன்
கத்தியாலெத்தி எறிந்தானேவல்வாயன்
எத்தியெறிந்தவுடன் கத்திவெளியாச்சு
கத்திவெளியாச்சு க்ஷஸ்திரியர்வந்துவிட்டார் ௧
ஈட்டிவெளியாகி யிடிமன்னர்வந்துவிட்டார்
ஜெட்டிகளுமல்லர்களுஞ் சேரவெளியானர்
அத்தண்டபேரையெல்லாம் ஆணழகன்தான்பார்த்து
எந்தனுயிர்வாங்க யிருந்தார்குழிதனிலே
வல்லுயிர்வாங்கவென்று வந்தீரோமன்னர்களே
உங்களதுயெண்ண முடியாதுஉத்தமரே
மன்னவரெண்ண மாளாதுமன்னவரே
சுற்றியெறிந்திடுவேன் சற்றுமனங்கோணமல்
ஏமன்பதிதனக்கு யிப்போதனுப்பிடுவேன்
சமனரிடபதிக்கு நானேஅனுப்பிடுவேன்
செத்துமடிந்திடுவீர் சிவலோகஞ்சேர்ந்திடுவீர்
மாண்டுமடிந்திடுவீர் வைகுண்டஞ்சேர்ந்திடுவீர்
என்றுமவருரைத்து யிந்திரராசாவும்

புனந்திரன் சொக்கரைநினைத்துச் சிம்மாசனங் கேட்பது.

சோலைமலருடைய சொக்கரைத்தானினைந்து
ஆனைமலையுடைய அம்மனைத்தானினைந்து
ஏழுலகமாளுகிற பெருமானைத்தானினைந்து
சோலைமலருடைய சொக்கரேயென்குருவே
அன்றொருநாள்வேளையிலே ஆதிகையிலைவிட்டு
அல்லிமலர்நாயகியை கார்த்தீரேகர்த்தாவே
ஆச்சியைக்காத்ததுபோல் அறியேனைக்காருமையா
மாதாவைக்காத்ததுபோல் மைந்தனைக்காருமையா
மாற்றான்றன்வாசலிலே மண்டபஞ்சென்றேன்காண்
எதிராளிவாசலிலே ஆதினஞ்சென்றேன்காண்
வண்ணத்துகிலாசனங்கள் வரவனுப்பவேண்டுமையா
என்றுமிகத்தொழுதா னிந்திரராசாவும்
புனந்திரனர்தோத்தரிக்கப் புண்ணியருந்தாமறிந்து

சொக்கர் அம்மனுக்குரைப்பது.

சொக்கர்மனமகிழ்ந்து தோகையர்க்கேதுசொல்வார்
அம்மன்முகம்நோக்கி ஆதிசிவனேதுசொல்வார்
போரஞ்சாமன்னர் புனந்திரவீரியரும்

தூதுரைக்கப்போனனே சுந்தரப்பூமுடியான்
எதிராளிவாசலிலே சென்றனே பூமுடியான்
ஆதினங்களில்லாமல் ஆணழகர்நின்றுவிட்டார்
அங்கையர்கள்சுந்தரியை ஆதீனமனுப்புமென்றார்
அங்கைபற்கண்மீனாட்சி அம்மன்மனமகிழ்ந்து
வல்லலட்சப்பூதங்களை வரவழைத்தாளட்சணமே
மாணிக்கச்சிம்மாசனந் தானேயலங்கரித்து
பூதங்கள்கைகொடுத்து போவென்றாளத்திபுரம்

பூதங்கள் சிம்மாசன மெடுத்துக்கொண்டு வருவது.

அத்தண்டபூதங்களும் அம்மனுரைகேட்டு
சுவாமிதிருமுடிக்கு சாஷ்டாங்கதெண்டனிட்டு
அம்மன்திருவடிக்கு அடிவணங்கிதெண்டனிட்டு
சிம்மாசனமெடுத்து திரும்புதுபூதமெல்லாம்
ஆகாயமார்க்கத்திலே அத்தண்டபூதமெல்லாம்
மேலேயெழும்பி விசயரிடத்திற்கு
காற்றோடுமேகங் கலந்துவரும்பாவனைபோல்
ஆற்றிலேவெள்ளம் அடித்துவருவதுபோல்
காற்றாய்ப்பறந்து கடுகவழிநடந்து
போரஞ்சாமன்னர் புனந்திரனார்முன்னேவந்து
இட்டதொரு ஆதினங்கள் எழுலகந்தத்தளிக்க
போட்டதொரு ஆதினங்கள் பூமிகிடுகிடென்ன
அண்டாண்டந்தானதிர ஆசனங்கள்போட்டுதங்கே

புனந்திரன் மனக்களிப்புடன் சிம்மாசனமேறியது.

போரஞ்சாமன்னர் புனந்திரனார்தான்பார்த்து
சிம்மாசனந்தன்னைக் கண்டுமனமகிழ்ந்து
சோலைமலருடைய சொக்கரைக்கைதொழுது
ஆனைமலையுடைய அம்மனைதெண்டனிட்டு
ஏழுலகமாளுகிற வெம்பெருமாளடிவணங்கி
அம்மனுக்கருளென்று ஆசனஞ்சென்றேறினான்
இட்டசிம்மாசனத்தி லேறியவன்வீற்றிருந்தான்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
திரியன்முகம்நோக்கி சொல்லுவாரொருவார்த்தை
மைந்தர்புனந்திரனார் வந்தாரேஅத்திபுரம்
பிள்ளைபுனந்திரனார் வந்தாரேஅத்திபுரம்
வந்தவகையறிந்து வார்த்தைகளைநீருரைத்து
சிந்தையிலுள்ளதெல்லாம் திரமாகத்தானுரைத்து
உச்சிஉரைகொடுத்து உத்தமரேபோகவிடும்
என்றுமவருரைக்க யேதுசொல்வான்திரியோதிரன்

திரியோதிரன் புனந்திரற்குக் கூறுவது.

காண்டாவனமெரித்த காளையிடபுத்திரனே
பாசுபதப்பேறுபெற்ற பார்த்தரிடசீர்மகனே

ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
பகையாளிந்தரில் படையெடுத்துவந்தானே
முன்னையும்பூசை முதல்பூசைதன்னுமென்றான்
முத்துமுடிபாண்டியனும் பட்டுவிழுந்தானே
ஆளப்பிறந்த அபிமன்னன்தேவியவள்
விலாடபுரத்தான் புத்திரியாளுத்தரையும்
உன்தம்பியுடதேவி தார்குழளாள்மாதருக்கு
தாலிகழட்டினையோ சன்னல்பின்னல்வாங்கினையோ
ஆரங்கழட்டினையோ ஆபரணம்வாங்கினையோ
கொப்புகழட்டினையோ கோர்வைமணிவாங்கினையோ
வளையல்கழட்டினையோ வாங்கினையோபூஷணங்கள்
ஏதுகரும மெனக்கறியச்சொல்லுமென்றான்
ஒன்றுமொழியாதே உரையுமென்றானெந்தனுக்கு
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
கதிக்குக்கதிமண்டி கண்கள்பொறிபறந்து
நீலவிழிகண்கள் நெருப்புத்தணலாகி
பத்தியநாகம் பவளம்போலகண்சிவந்து
முத்தியநாகம் விழியதுபோல்கண்சிவந்து
கோபித்துக்கண்சிவந்து கோபமதிகரித்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகரித்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
சூரியமண்டலத்தைக் கிட்டிச்சுவாலயமாய்
அக்கினிமண்டலத்தை அடுத்தச்சுவாலயமாய்
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
சித்துடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
தேசத்தையாளுந் திரியோதிரராசருக்கு

புனத்திரன் திரியோதிரனுக்குத் தூதுரைப்பது.

போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
பதினெறுநாளையிலே படைமன்னர்சண்டையிலே
பாரதமென்று படைபொருதும்வேளையிலே
ஆளப்பிறந்த அபிமன்னராசாவும்
முன்னையும்பூசை முதல்பூசைதன்னுமென்று
முத்துமுடிபாண்டியனும் பட்டுவிழுந்தானே
ஆளப்பிறந்த அபிமன்னன்தேவியற்கு
தாலிகழட்டினோம் சன்னல்பின்னல்வாங்கினோம்
ஆரங்கழட்டினோம் தாவடங்கள்வாங்கினோம்
கொப்புகழட்டினோம் கோர்வைமணிவாங்கினோம்
வளையல்கழட்டினோம் வார்கொப்புவாங்கினோம்
மாலைகழட்டினோம் மண்டபமேற்றிவைத்தோம்
அவளைச்சுற்றிபெண்டுகள் அணியிழைமார்காத்திருந்தார்
வைத்துச்சிறைகாக்க மண்டலத்தில்கோடியுண்டு

சங்கல்தேவின்முடியாளுந் சிறைகாத்திருப்பாள்காண்
நாளைபதினைந்தாம்நாளையிலே படைபொருதுஞ்சண்டையிலே
பாரதமென்று படைபொருதும்வேளையிலே
அறுபடைக்கும் அமிர்தசமர்க்களத்தில்
இரத்தாறுஓடுகிற வேளையிலேஉத்தமனும்
இரத்தக்களரியிலே ராசாக்கள்கூட்டத்திலே
பாசுபதம்பெறபெற்று பார்த்தன்கையம்பாலே
வில்லாளிபார்த்தர் விசையர்கையம்பாலே
உன் தங்கைமணவாளன் தறுதலைபன்பட்டாலே
யுத்தகளத்தி லெட்டியறப்பார்கள்
உன் தங்கைமணவாளன் தறுதலைபன்பட்டாலே
நூலார்கடுந்திரளார் நூற்றொருவர்தங்களுக்கு
தோகைமயிலனையாள் துற்சடையாள்நாயகிக்கு
தாலிகழட்டாதே சன்னல்பின்னல்வாங்காதே
பாரபதக்கமும் பருத்தமுத்துதாழ்வடமும்
தாலிப்பதக்கமுஞ் சன்னல்பின்னல்தாவடமும்
கோர்வைப்பதக்கமும் குடமுத்துத்தாவடமும்
கொப்புக்கழட்டாதே கோர்வைமணிவாங்காதே
வளையல்கழட்டாதே வாங்காதேபூஷணங்கள்
மாலைமுடியாளை மஞ்சள்குளிக்கவைத்து
வாரிப்பகுத்தலத்து வண்ணவிதக்கொண்டையிட்டு
சீவிமயிர்முடித்துச் சிமிள்போலக்கொண்டையிட்டு
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபொட்டுமிட்டு
அவள் நீலவிழிகண்களுக்கு நீலக்கவேமைதீட்டி
கருங்குருவிவாலதுபோல் கண்ணுக்குமையெழுதி
மங்கைநல்லாள்பூமுடிக்கு மல்லிகைமாலைசூட்டி
கொப்புமிகத்திருத்தி கோர்வைமிகத்திருத்தி
வளையல்திருத்தியல்லோ மற்றும்பணிதிருத்தி
பச்சைவடந்திருத்தி பாவாடையுள்திருத்தி
குப்புவடப்பச்சைவடம் உத்தமிக்குமிகசாத்தி
அத்தர்கதம்பப்பொடி அள்ளியேமேல்பூசி
சாதிக்காயேலந் தனிமணமுங்கொண்டுவந்து
வாடாயிலைச்சுருளும் வண்ணத்துவர்பாக்கும்
ஏலப்லவுங்கம் யின்பக்களிப்பாக்கும்
சாதிப்பெருங்கடவம் சங்குசுட்டசுண்ணம்பும்
சுருளைச்சுருள்மடித்து சுண்ணாம்பைச்சூட்சமிட்டு
சுத்திவிட்டபொன்மடலுக் குள்ளேசுருளமர்த்தி
பாதிரிளங்கொடிக்கு மங்கையர்க்குநேர்கொடுத்து
மற்றுமுள்ளமன்னவரைச் சுற்றிலுங்காவல்வைத்து
நீங்கள் நாலால்கடுந்திரளார் நூற்றொருவராசர்களும்
தூங்கவையுந்தெருத்திண்ணையில் வாங்குமென்றான்வட்டிக்காரக

வட்டிக்காகவாங்கியல்லோ வட்டிக்குமாறுமென்றான்
என்றுவிட்டானொருதூது மண்ணதிரவிண்ணதிர
மண்ணதிரவிண்குலுங்க மாற்றான்திடுக்கிடவே
விண்ணதிரமண்குலுங்க வேந்தர்திடுக்கிடவே
தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
மன்னர்மனஞ்சலித்து மர்மமாய்த்தானிருந்தான்

புனந்திரன் மறுபடியுந் தூதுரைப்பது.

போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
மற்றுமொருதூது மன்னவனுங்கேட்கவுற்றான்
ஆணழகர்பஞ்சவரை ஐவரையுந்தானழைத்து
உருவமதயானை வுத்தமர்களைவரையும்
மாயத்தால்சூதாடி மண்பறிக்கமண்பறித்து
மாதைத்துகிலுரிந்து மன்னவரைக்காட்டோட்டி
கோதைத்துகிலுரிந்து கொற்றவரைக்காட்டோட்டி
பருக்கல்உறுத்த பனிவந்தலைமோத
ஓடும்பருக்கனும் உள்ளங்கால்தானுறுத்த
கவிந்தமரத்தடியில் கண்பள்ளிக்கொண்டிருந்தான்
இன்னமின்னங்காடுறைய மாட்டார்கள்பஞ்சவர்கள்
அரக்குமாமாளிகையில் ஐவரையுஞ்சுட்டெரித்தாய்
அத்தானுந்தப்பிப் பிழைத்தார்களாணழகர்
மாயரிடபுண்ணியத்தால் மன்னர்பிழைத்தார்கள்
ஆயரருளாலே ஐவர்பிழைத்தார்கள்
நடக்கும்வழிதனிலே நட்டுவைத்தாய்வாளதனை
குளிக்குங்குளந்தனிலே கொடிஊசிநட்டுவைத்தாய்
முழுகுங்குளந்தனிலே முட்களைநட்டுவைத்தாய்
அத்தானுந்தப்பிப் பிழைத்தார்களாணழகர்
எண்ணையிட்டுக்கொள்ளுமென்றும் மல்லர்களைத்தூதுவிட்டார்
கொல்லவந்தமல்லர்கள் கூண்டோடேதான்மடிந்தார்
சோற்றிலேநஞ்சையிட்டு சூஸ்திரமாய்க்கொல்லவந்தாய்
தண்ணீரில்நஞ்சையிட்டாய் தாமமுடியாற்கு
உண்கிறசோற்றிலே வசநாபிதான்கலந்தாய்
வசநாபியென்றுசொல்லி மதித்துருதைப்பாராமல்
வெற்றிமதயானை வீமன்மதகரியான்
அத்தனையுங்கூட்டி அமுதுபுசித்தாரே
அலைகொண்டதலைமயக்கந் தார்வேந்தர்தான்கொண்டார்
வெற்றிமதயானை வீமரவர்மாண்டாரோ
மாயனொருசந்நியாசி வேஷமதுவெடுத்து
மருந்துப்பைமீதாளில்வைத்து வந்தாரேமாயவரும்
வெற்றிமதயானை வீமரையெழுப்பிவிட்டார்
அத்தானுந்தப்பிப் பிழைத்தார்களைவர்களும்

மாயனருளாலே மன்னர்பிழைத்தார்கள்
ஆயனருளாலே ஐவர்களுந்தான்பிழைத்தார்
படுகுழியாதினங்கள் பஞ்சவர்க்குசொப்பனிட்டு
அழக்குழிதோண்டி ஆகாயக்கோட்டைகட்டி
மேலைக்குழிதோண்டி விஷநாகக்கோட்டைகட்டி
எட்டுத்தலைவாசல் யிடிமன்னர்காவல்வைத்து
பத்துத்தலைவாசல் படைமன்னருள்ளேவைத்து
நண்டுகளுந்தேளுகளும் நல்லவிஷப்பாம்புகளும்
பாம்புகளுந்தேளுகளும் படுகுழியைரொப்பிவைத்து
ஐவரும்வீற்றிருக்க ஆசனங்கள்சொப்பனிட்டாய்
பொய்யாசனங்களிட்டாய் புண்ணியர்கள்வீற்றிருக்க
அத்தாலுந்தப்பிப் பிழைத்தாரேஐவர்களும்
மாயனருளாலே மன்னர்பிழைத்தார்கள்
ஆயனருளாலே ஐவர்பிழைத்தார்கள்
இன்னமின்னங்காடுறைய மாட்டார்கள்மன்னவர்கள்

## புணந்திரன் கோபித்துரைப்பது.

நாலாள்கடுந்திரளார் நூற்றொருவர்பூமுடியும்
சாமத்துரோகி சகுனியுடபூமுடியும்
தேருவடிவழகி துரௌபதையாள்நாயகியும்
கொட்டுத்துகிலுரிந்த படுபாவிபூமுடியும்
நாளை பதினெட்டாநாளையிலே படைமன்னர்கையாலே
பாரதம்வென்று படைபொருதும்வேளையிலே
ஆயப்பறக்கும் அமுர்தசமர்க்களத்தில்
வீமர்கைதண்டாலும் விசையர்கையம்பாலும்
பஞ்சவர்களம்பாலே பட்டுமடிவானே
பங்குவிட்டாலும் பகுந்தரசுதாருமென்றான்
பாதிநாடும் பகுந்தரசுதாருமென்றான்
விட்டானொருதூது மண்ணாதிரவிண்ணாதிர
மாற்றான்திடுக்கிடவே மறுமன்னர்சத்தமிட

## திரியோதிரன் புணந்திரனைப்பார்த்துரைப்பது

தேசத்தையாளுந் திரியோதிரன்கேட்டு
கதிக்குக்கதிமண்டி கண்களெரிபறந்து
நீலவிழிக்கண்கள் நெருப்புத்தனலாகி
பத்திபநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றிபோல்கண்சிவந்து கோபமதிகரித்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனல்பறந்து
இந்திரரைப்பார்த்து யெடுத்துரைப்பான்திரியோதிரன்
மன்னனுயிரிழந்து மாண்டுதான்போனாலும்

செத்துமடிந்தாலும் சிவலோகஞ்சேர்ந்தாலும்
மாண்டுமடிந்தாலும் வைகுந்தஞ்சேர்ந்தாலும்
எள்ளளவுசீவ னிருக்கிறகாலமட்டும்
கடுகளவுசீவ னிருக்கிறகாலமட்டும்
பகையாளிபஞ்சவற்கு பாதிநாடில்லையென்றான்
பங்கிட்டநாடும் பகுந்தரசுமில்லையென்றான்
பஞ்சவர்கள்சீமை பகுந்தரசுமில்லையென்றான்

புனந்திரன் மறுபடியுங் கோபித்துறைப்பது.

போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
சிற்றுடம்புவேர்த்து சிறுகண்சிவப்பேறி
வேர்த்துவிரிவிரித்து மீசைசுருண்டேறி
போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
தர்மருக்கிப்போ சனியன்பிரிந்தது
எங்கள்வீமருக்கிப்போ விடுதியொழிந்தது
ஐவருக்குமிப்போ அடுத்ததுநற்காலம்
மாதுமயிர்முடிக்க நாளாச்சுமன்னவரே
கோதிகுழல்முடிக்க நாளாச்சுகொற்றவரே
பத்தினியாள்சாபம் பலித்ததிவர்களுக்கு
உத்தமியாள்சாபம் உடனேபலித்தது
பார்த்தன்கையம்பாலே படுவதுநிச்சயந்தான்
எழில்விசையனம்பாலே படுவார்கள்படுவார்கள்
வேசிமகனுற்கு விடுபடக்காலமில்லை
தாசிமகனுற்கு தானிருக்ககாலமில்லை
உடன்பெற்றபிள்ளையெல்லாம் கொத்தோடேமாண்டிடுவார்
அந்தகனுர்பெற்றபிள்ளை அடங்கலுமாண்டிடுவார்
இப்படிச்சொல்லி யெடுத்துரைத்தானிந்திரனும்
விட்டானொருபாணம் மண்ணதிரவிண்குலுங்க
மாற்றான்திடுக்கிடவே மறுமன்னர்கொக்கரிக்க
நாகக்கொடிவேந்தன் கேட்டானவ்வார்த்தைகளை
இந்திரனுர்சொன்னதெல்லாம் எறிநாகன்தான்கேட்டு

திரியோதிரன் புனந்திரற்குரைப்பது.

கோபித்துக்கண்சிவந்து கொல்லும்புலியதுபோல்
பத்திநாகம் பவளம்போல்கண்சிவந்து
குன்றுபோல்கண்சிவந்து கோபமதிகரித்து
நெற்றிப்புருவம் நெருப்பாயனலண்டி
சூரியமண்டலத்தை எட்டிச்சுவாலயமாய்
அக்கினிமண்டலத்தை யடுத்துச்சுவாலயமாய்
போரஞ்சாமன்னர் புனந்திரற்கேதுசொல்வான்
வேசியென்றுந்தாசியென்றும் விஸ்தாரமாய்சொல்லுகிறான்
தாசிபெற்றபிள்ளையென்றும் தளர்ச்சியாய்சொல்லுகிறான்
இந்தசபைநடுவே யெடுத்தெரிந்துபேசுகிறான்

நாசிபிள்ளையென்றவனைத் தலையைப்பிளந்திடுவேன்
வேசிமகனென்றவனை வெட்டியெறிந்திடுவேன்
உலகத்தில்வாழும்பெண்கள் ஒருவனுக்குகைகொடுப்பார்
இன்னஞ்சிலவேசியர்கள் இருவருக்கைகொடுப்பார்
ஆனமுகிதுரோபதைக்கு ஐந்துபேர்மாப்பிள்ளைமார்
ஐவருக்குங்கைகொடுத்தாள் அவள்தானேவேசியல்லோ
பலபேர்க்குகைகொடுத்தாள் பட்டியவள்தேவடியாள்
இப்படிக்குசொல்லிநின்றான் எரிநாகங்கொண்டவனும்
அங்கிருக்குமன்னவர்கள் அரையர்துரைகளெல்லாம்
பாட்டனார்வீடுமரும் பாரியதுரோணருக்கு
சிற்றப்பாவிதுரனுக்கு சீருள்ளகாங்கையனும்
காஞ்சிநாடாளுங் கர்ணர்பெருமாளும்
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னன்மனஞ்சலித்து மர்மமாய்தானிருந்தார்

விகர்ணனுரைப்பது.

வில்லில்பெரிய விகர்ணனுமேதுரைப்பான்
நூலால்அடுத்திரளார் நூற்றொருவர்க்கேயிளைஞன்
விகர்ணப்பெருமாள் யெடுத்துமிகவுரைப்பான்
அண்ணன்முகம்நோக்கி ஆனமுகனேதுசொல்வான்
அண்ணாவேகேளும் அடியேனொருவார்த்தை
என்னண்ணாநீர்கேளும் இன்னமொருவார்த்தை
பஞ்சவர்களைவரையும் பார்மன்னன்சபைநடுவே
ஐவர்பஞ்சபாண்டவரை அழைத்துமேசூதாடி
மாதுநல்லாள்துரௌபதையை மன்னர்சபைநடுவே
துரௌபதையைகொண்டுவந்து துகிலுமுரிந்தாயே
பாவையழகியரைப் பாஞ்சாலன்சீர்மகளை
உரிந்ததுகில்வளர்ந்த உத்தமியாள்நாயகிக்கு
அத்தானுஞ்சாடை யறியாமற்போனீரே
பெண்ணுருரிந்ததுகில் போராய்க்குவிந்தது
மாதையுரிந்ததுகில் மலையாய்வளர்ந்தது
அத்தானுஞ்சாடை யறியாமற்போனீர்கள்
பத்தினியாளென்றுசொல்லிப் பாராமற்போனீர்கள்
அரண்மனைப்பெண்டுகளை அனைவரையுந்தானழைத்து
எடுத்துவிடுங்களென்றீர் எத்திலங்குபூமுடியாள்
அந்தவிசேஷமதுகேட்டுமங்கையர்கள்

திரியோதிரன் பெண்டுகள் மானங்குலைந்தது.

அத்தண்டசேலையெல்லாம் அவர்களெடுத்துடுத்தி
வர்ணவிதசேலையெல்லாம் மாதர்கள்தானுடுத்தி
அம்பலத்துவாசலிலே ஆணழகர்பெண்டுகளும்

மானங்குலைந்தார்கள் மதிகுலைந்துபோனூர்கள்
வெட்கங்குலைந்தார்கள் வெட்கித்துநடந்தார்கள்
பத்தினியாள்சாபம் பலித்துதேநம்பலுக்கு
உத்தமியாள்சாபம் முடனேபலித்ததல்லோ
அத்தானுஞ்சாடை யறியாமற்போனீரே
பத்தினியாளென்றுசொல்லிப் பாராமற்போனீரே
இப்பெரியநாடும் எழில்பெரியஆதினமும்
அத்திபுரமும் அடங்கலும்நம்முதென்றான்
நூலால்கடுந்திரளார் நூற்றொருவர்பூமுடியை
எல்லையுலகங்கள் யிருந்தரசுஆள்வோமென்று
எண்ணியிருநதீரே அண்ணுவேநீர்கேளுநம்

திரியோதிரனுக்கு கணேமாறச்செய்து.

சாதிமணிக்கவுரி சந்தனத்தானூதுவத்தி
கோலமணிக்கவுரி குங்குமத்தானூதுவத்தி
வீசினூர்தூதுவர்கள் வேல்புருவக்கண்ணுனுக்கு
திறவாதகண்கள்ரெண்டுந் திறந்துமவன்பார்த்து
முழியாதகண்கள்ரெண்டும் முழித்தான்திரியோதிரன்
தாகமதுகொண்டல்லவோ தார்வேந்தன்வீற்றிருந்தான்
இப்படியாக இவனிருக்கும்வேளேயிலே

புனந்திரன் உத்தரவு கேட்கிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரனூரப்போது
வந்துமிகப்பொழுதாச்சு மனனர்யெரியவரே
போகவிடைதாரும் என்றுமன்னன்கைதொழுதான்
பாட்டனும்வீட்டுமரும் பாராளுந்துரோணரும்
சிற்றப்பாவிதுரானுக்கும் சீருள்ளகாங்கையற்கும்
காஞ்சிநாடாளுங் கர்னர்பெருமாளுக்கும்
தேசத்தையாளுந் திரியோதிரனுற்கும்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
தெண்டனிட்டமன்னவனே வாரியெடுத்தணைத்து
வாரியெடுத்தணைத்து மார்மேலேகொண்டணைத்து
போய்வாருமையா புனந்திரராசாவே
ஆறுயிரம்பாண்டியற்கும் ஐயர்மார்பாண்டவற்கும்
ஐவர்பஞ்சபாண்டவற்கும் அல்லித்திருநாயகிக்கும்
எங்களதுசென்மம் யெடுத்துலாயுமிந்திரரே
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தார்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்

## பேரிகை முழங்குவது.

அந்தத்தெருவீதியிலே அடித்தார்கள்பேரிகையை
ஊதினார்சின்னம் உலகேழுந்தானதிர
செம்பொன்னார்காளை திசைவிளங்கவூதினான்
பொன்னினாற்காளை பொருந்திநின்றூதினான்
இந்திரனென்போரேனென்று யெடுத்தான்விருதோசை
செயம்பெற்றுவாரேனென்று ஊதினான்சங்கெடுத்து
சாந்திராடனுங் கர்ணரவர்பெற்றெடுத்த
வேல்பொருதுங்கன்றனும் விஸ்வகேதுதான்கேட்டு

## கர்ணர்குமாரன் விஸ்வகேது யுத்தத்திற்கு புறப்பட்டது.

எந்தவூராசாவோ யெவ்விடத்துமந்திரியோ
கொச்சிதேசமானுங் குணமுள்ளராசாவே
மாற்றான்படையோதா னிவ்வீதிவந்ததென்ன
எதிராளிபடையோதா னிவ்வீதிவந்ததென்ன
செயம்பெற்றுவந்தோமென்று ரணபேரியடிபடுது
வந்தொருராசாக்கள் மன்னரைநாம்பார்ப்போமென்று
சென்றொருராசாக்கள் சேவகத்தைக்காண்போமென்ன
இனத்தமையவெழுந்து தேர்விசயன்செல்வனமே
தேர்ப்பாகனையழைத்து தேர்கொண்டுவாருமென்றான்
அப்படியேசொல்லுதென்று ஆனழகனோடிவந்து
தேரையலங்கரித்து தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
தேர்வந்ததென்னசொல்லி தீர்க்கமுடன்தெண்டனிட்டான்
வேல்புருவங்கன்றனும் விஸ்வகேதுதானெழுந்து
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சுங்குவிட்டு
கட்டிவரிந்துக்கட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
சிவசிவாவென்றுசொல்லி திருநீருகாப்பணிந்து
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபபொட்டுமிட்டு
வாளெடுத்துவில்லெடுத்து வளைதடிகையெடுத்து
அம்பெடுத்துவில்லெடுத்து அம்பூறுத்தூணிதானெடுத்து
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
மாலைமுடியானு மணிரதத்தின்முன்னேவந்து
தேரைச்சுற்றிதெண்டனிட்டு தேரின்மேலேறினான்
பச்சைக்குடையாம் பவளநெடுங்குடையாம்
வச்சிரக்குடையாகி வைடூரியப்பொற்குடையாம்
முத்துக்குடைபிடிக்க முடிமன்னர்தேர்நடக்க
பவளக்குடைப்பிடிக்க பார்மன்னர்தேர்நடக்க
ரத்தினக்குடைபிடிக்க ராசர்கள்தேர்நடக்க

போரஞ்சாமன்னர் புனந்திரருஞ்சேவகரும்
அர்ச்சுனனார்புத்திரனும் அவருடையசேனைகளும்
அம்பலத்துவாசல் நடந்தாரழகாக
குருவனிடவாசலெல்லாந் தாண்டியந்தகொற்றவனும
பத்துபடித்தளமும் பதினெட்டுமண்டபமும்
எட்டுப்படித்தளமும் யிராசாக்கள்மண்டபமும்
அத்தனையுந்தாண்டிவந்தார் ஆணழகரிந்திரரும்
வாசலதைக்காற்கின்ற வார்கொள்ளிமுன்னம்வந்தாள்

### வார்கொள்ளி புனந்திரனைச் செய்திகேட்பது.

வாசல்தடைக்காரி வார்கொள்ளியேதுசொல்வாள்
வானவர்கள்புத்திரனே வந்தீரேதூதுரைக்க
மாதுமணவாளர் தூதுரைத்துமீண்டிரோ
தூதுரைத்துவந்ததெல்லாம் சொல்லுமையாயெந்தனுக்கு
சொல்லுமையாவென்றுசொல்லித் தொழுதிரங்கிதெண்டனிட்டாள்
போரஞ்சாமன்னர் புனந்திரனாரேதுசொல்வார்
போனவிசேஷம் புதுமைநடந்ததுவும்
நாலிரண்டுவார்த்தையால் நடப்பித்தாரிந்திரரும்
அந்தவிசேஷம அதுகேட்டுவார்கொள்ளியும்
கேட்டுமனமகிழ்ந்து கிளிபவளச்செவ்வாயாள்

### வார்கொள்ளி யுரைப்பது.

அத்திபுரத்தை யரசாளவாருமையா
அங்கவளநாடு அரசாளவாருமையா
உங்கள் ஐவரிடசீமை முழுதுமேயாளுமென்று
போய்வாருமென்றுசொல்லிப் பொன்னடிக்குத்தெண்டனிட்டு
போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
மூன்றுநாளார்பொழுது முடிமன்னராளுவது
நாலாநாளெங்களது ஆருகாண்ராச்சியங்கள்
ரெட்டிப்புசம்பளங்கள் நானேதருகிறேன்காண்
ஏதுக்குமஞ்சாதே யிளங்கொடியேவீற்றிரென்றான்
சொல்லித்திரும்பினான் துன்னீலங்கண்ணனும்
அத்திப்புரத்தில் நெடும்வீதிவாரார்கள்

### புனந்திரன் திரியனுக்குரைப்பது.

பச்சைமடல்விரியும் பாளைவிரிபூமணக்கும்
பாஞ்சாலமகாராஜன் சுயம்வரப்பந்தலிலே
தோளுவடிவழகி துரௌபதிநாயகியை
மாலையிடவந்தவர்கள் வர்ணலட்சம்ராசாக்கள்
அவர்களுடனாக வந்தீரே ஆணழகா

மெல்லியாள் துரோபதையை வில்வளைத்தநாளையிலே
வில்வளைப்பதற்கு உன்னாலாகாதே
வேந்தர்சபைநடுவே மானங்குலைந்தாயே
அன்றுபட்டபாடு மறந்தாயோ ஆணழகா
இன்னமுமெந்தனுடன் எதிர்நின்றுபேசவந்தாய்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் யாகம்வளர்த்தினார்கள்
யாகமதுபார்க்க வந்தாயே ஆணழகா
சந்தனச்சேற்றில் நடக்கவறியாமல்
சவுரியங்களற்று சறுக்கிவிழுந்தாயே
ஆண்மைகளற்றுமல்லோ அங்கேவிழுந்தாயே
மன்னர்சபைநடுவே மானங்குலைந்தாயே
தோருவடிவழகி துரோபதையாளென்னுச்சி
மாங்கியற்குமுன்னுகைப் பார்த்துநகைத்தாளே
அக்காலுஞ்சாரிலியே ஆணழகாயுன்னுடம்பு
நீ-ஆண்பிள்ளைபோல அமருக்குவந்தாயே
வில்லெடுத்துயுத்தம்பண்ண வந்தாயேவேந்தர்முன்னே
கைதனிலேவில்லெடுக்க அறிவாயோகட்டழகா
சானுண்டுபையலவன் சாமர்த்தியம்பாருமென்றான்
அறியாதபையந்தனிட ஆண்மைகளைப்பாருமென்றான்

திரியோதிரன்பேரில் பாணம் விட்டது.

விட்டாரொருபாணம் மண்ணதிரவிண்ணதிர
மண்ணதிரவிண்ணதிர மாற்றுஇடிக்கிடவே
எதிரிஇடிக்கிடவே யெல்லையதிர்ந்துவிழ
மற்றுமொருகணையை மறுகணையைதானெடுத்தான்
அந்தவொருபாணம் வந்துவிழுமனேகம்
திரியோதிரன்முடிமேல் யிருக்குஞ்சிகரங்களும்
அவன்கையிலாயுதமும் அத்தலையுந்தான்பார்த்து
வந்துவிழுந்தது மன்னனிடகைதலத்தில்
மற்றுமொருகணையை மன்னிடகைதலத்தில்
திரியோதிரன்தினமுஞ் சேனைத்திரள்படையும்
அத்தனையுங்கெத்தி நடந்துதேபாணமது
போராஞ்சாமன்ன புனந்திரனூரேதுசொல்வார்

புனந்திரன் சொல்வது.

பஞ்சவர்களைவரும் பாரவனந்தாண்டி
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆரணியம்சென்றுமே
பன்னிரண்டுதன்வருஷங் ஆண்டாரேகானகத்தில்
அவர்களைத்தேடியல்லோ யனுப்பினார்மல்லர்களை
மல்லர்களைவிட்டவரைக் கொல்லுமென்றுவாக்களித்தார்

அவர்களைக்காணும லலுத்துவந்தாமல்லர்களும்
துறுவாசமாமுனியைத் தொழுதுதவம்புரிந்து
ஆணழகர்பஞ்சவரை அவனைவிட்டுகொல்லுமென்றார்
ஐவரைதேடி நடந்தார்வனம்நோக்கி
ஐவரையுங்கண்டாரே அப்பெரியதுறுவாசர்
ஐவர்பஞ்சபாண்டவரும் மாமுனியைகண்டவுடன்
மாமுனியானவற்கு மன்னர்பஞ்சபாண்டவரும்
ஆசனங்கள்தான்போட்டு அவர்க்களித்தார்போசனங்கள்
பலாயிலையில்போசனங்கள் படைத்தாரேமாமுனிக்கு
அமுதுண்டுமாமுனியும் ஆலித்தவர்மறந்து
ஐவரையும்வாழ்த்தி நடந்தாரேகானகத்தில்
மற்றுமொருவனத்தில் மன்னரொளித்திருந்தார்
தங்கைமனவாளன் தறுதலையன்தானழைத்து
ஐவர்பஞ்சபாண்டவர்க்கும் அபிஷேகபத்தினியாள்
அபிசேகபத்தினியாள் ஆரணங்குதுரோபதையும்
அவளழகுமொப்பனையும் ஆருமில்லைவையகத்தில்
துரௌபதையைக்கொண்டு தூங்குவஞ்சமேற்ற வைத்தால்
அப்பெரியநாடு மெழில்பெரியஆதினமும்
உன்னுடையநாடுங் கர்ணர்யதியாதினமும்
அத்தனையுந்தாரேனென்றார் ஆனந்தமார்பனுக்கு
நல்லதென்றுசம்மதித்தா னுமமுடியானும்
ஒளித்திருக்கும்தனத்தை வுத்தமியைத்தான்தேடி
பத்தினியைத்தேடியல்லோ வந்தானேகானகத்தில்
சூதுரைத்துதுரௌபதையைத் தூக்கிநடந்தானே
கபடமவனுரைத்துக் கட்டழகன்போய்நடந்தான்
ஆரணங்குபோனதை ஐவர்களுந்தானறிந்து
பாதகன்கொண்டுபோக சேதியவரறிந்து
தேரையுடைத்தவர்கள் செம்புரவிதூண்டித்து
இரதத்தையவருடைத்து நால்புரவிதூண்டித்து
பாவையழகியரைப் பத்தினியைக்கொண்டுவந்து

## சயிந்தவனைக் கழுதையாக்கினது.

கட்டழகன்சயிந்தவனைக் கழுதைவடிவாக்கி
கழுதையைத்தொட்டதொரு கட்டழகானவர்கள்
ஓட்டிவருகவென்று யிட்டாள்பெருஞ்சாபம்
எங்கள்-வம்மிசத்தார்தொட்டாலே விட்டுவிடவேணுமென்றான்
மிருகவடிவாக்கி யனுப்பினாருங்களண்டை
கட்டழகர்மைத்துனனை கழுதையாயாக்கிவிட்டார்
அன்றுமேகண்டாயே அவருடையவீரியத்தை
இன்னமுங்காண்பால்காண் யெங்களிடசெரியுங்கள்

மற்றுமொருவனத்தில் வாசமபண்ணூர்மன்னவர்கள்
இன்னஞ்சிலகால சென்றபிறகாக
ஆகாயகெந்தருவன் அவனுமிழ்ந்தான்தம்பலங்கள்
மாயவரிடகைதலத்தில் வந்துவிழுந்தது
அவன்தலையைவாங்கிவைக்க ஆயரவரெழுந்தார்
ஆகாயகெந்தருவன் அவன்பயந்துஓடிவந்து
அர்ச்சுனராசரண்டை அபயமிட்டோடிவந்தான்
அர்ச்சுனராசர் அவனையெடுத்தணைத்தார்
அந்தவிசேசம் அதுவறிந்துமாயவரும்
மன்னர்மனதறிய மாயர்படையெடுத்தார்
உந்தன்கெருவம் அடக்கமனதிலெண்ணி
அந்தாலுஞ்சாடை அறியாமற்போனீரே
மாயருக்குமெங்களுக்கும் மச்சான்முறைகளுண்டு
உன்படையுமவர்படையு மொன்றாகக்கூட்டினார்
ஐவர்மேல்சண்டைபண்ண வந்தீர்களெல்லாரும்
வெற்றிமதயானை வீமருமர்ச்சுனரும்
உந்தன்படைத்தளத்தை ஒருமிக்கவோறுத்து
மாயன்படையையெல்லாம் மண்ணூக்கிரையாக்கிவிட்டார்

மாயர் அர்ச்சுனன்மேல் சந்தோஷப்பட்டது.

மாயராதெரிந்து மர்மம்வெளிவிடாமல்
தேரைவிட்டுக்கீழிறங்கி நடந்தந்தமாயவரும்
வீமருக்குமருச்சுனற்கும் எதிராகவந்துமவர்
அர்ச்சுனரைக்கட்டி யணைந்துவுறவாடி
வீமரைகட்டி வெகுவாயுறவாடி
மாயவருமருச்சுனனும் மனங்குளிர்ந்தாரன்னேரம்
ஆயரும்வீமரும் அங்கேமனங்குளிர்ந்தார்
அந்தாலுஞ்சாடை யறியாமற்போனாயே
இன்னமின்னம்பார்க்கனுமோ எங்களுடவீரியங்கள்
திரியோதிரன்மாடுபிடிசண்டையிலே முதுகுகொடுத்துஓடினது
மாடுபிடிசண்டையிலே மன்னவரேவந்தீர்கள்
பேடியவர்சண்டையிலே பின்னிடைந்துஓடினீர்கள்
அற்சுனனார்சண்டையிலே ஆண்மைகுலைந்தீர்கள்
வீமனார்சண்டையிலே வெற்றிகுலைந்தீர்கள்
யானைபெருஞ்சேனைகளும் அத்தனையும்நீர்தோற்று
சேனையொருவெள்ளம் திரல்வேந்தாகையைவிட்டு
முடிதரித்தராசாக்கள முதுகிட்டுஓடினீர்கள்
கணைப்பிடித்தராசாக்கள கால்நடுங்கஓடினீர்கள்
அறியாதபையனிட ஆண்மைகளைக்கண்டீரே
தெரியாதஎன்னுடைய சௌரியத்தைப்பார்த்தீரோ
இன்னெனன்னமென்னுடைய சௌரியங்களபார்க்கனுமோ

பார்த்தமட்டும்போதாதோ பாம்புக்கொடியானே
பதினெட்டாநாளையிலே படைபொருந்துஞ்சண்டையிலே
ஆடிப்பறக்கும் அமுர்தசமர்க்களத்தில்
உத்தங்கடந்து ரத்தாறுஓடையிலே
உங்களமுடிகளெல்லாஞ் சிதரியுடையிலே
காணுதசௌரியங்கள காண்பாயுன்கண்ணாலே
பாருதவீரியங்கள பார்த்திடுவாய்முன்னாலே
இந்தக்கணையாலே வுந்தன்தலையுடைப்பேன்
என்றுமனங்கொதித்து யிந்திரசாவும்
அங்கிருக்குமன்னர் அரையர்துரையரெல்லாம்
பாட்டனார்வீட்சமரும் பாரறியதுரோணரும்
சிற்றப்பாவிதுரனுஞ் சீருள்ளகாங்கையனும்
காஞ்சிநாடாளுங் கர்னசிகாமணியும்
வில்லில்திரமுடைய விகர்னைப்பெருமாளும்
இந்தக்கணையாலே யியற்றிடுவான்பூமுடியை
இந்திரன்வாளாலே யிபற்றுவிடும்பூமுடிதான்
இவன்தலையற்றாலே எனபடுமோஉன்வாசல்
வெற்றிமதயானை வீமனதுசபதங்களும்
தோருவடிவழகிதுரோபதைநாயகியாள்
இட்டபெருஞ்சபதம் யிதுமுடிக்கவேணுமென்று
எல்லவருங்கூடி யின்பமாயெழுந்திருந்து
பாட்டனார்வீட்சமரும் பாரறியதுரோணரும்

புனந்திரன் திரியோதிரன்பேரில் பாணவிட்டது.

வில்லெடுத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தெளித்து
விட்டான்சரபாணம் மண்ணதிரவின்குலுங்க
மண்ணதிரவிண்குலுங்க மாற்றான்திடுக்கிடவே
மாற்றான்திடுக்கிடவே மறுமன்னர்கொக்கரிக்க
எதிரிதிடுக்கிடவே யிருந்தமன்னர்சொக்கரிக்க
பாணம்வரும்வேகம் பார்க்கமுடிபோகாது
அம்புவரும்வேகம் ஆற்றமுடிப்போகாது
சிற்றப்பாவிதுரனுஞ் சீருளளகாங்கையனும்
காஞ்சிநாடானுங் கர்ணசிகாமணியே

கர்ணர் விதுரர் வீட்சுமர் விகர்னனிவர்கள்
திரியோதிரனுக்கு கோபந்தணித்தது.

தேசத்தையாளும் திரியோதிரன்முன்னேவந்து
அமையும்மையுமைலா ஆனந்தவாழ்மார்பா
தூதுரைக்கவந்தவனைத் தொடர்ந்துடுகொல்லஞாயமுண்டோ
வார்த்தைசொல்லவந்தவனை வாளெத்துகொல்லலாமோ
புத்திரைக்கொல்வாரும் உண்டோவுலகுதனில்
மைந்தரைக்கொல்வாரும் உண்டோர்தான்வையகத்தில்
என்றுமனந்தேற்றி எத்திலங்குபூமுடியான்

கொற்றவனார்கோபம் குணப்படுத்திக்கொண்டார்
மன்னவனார்கோபம் வசப்படுத்தியானபின்பு
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
ஆறினான்கோபம் அமர்ந்தான்கொலுமுகத்தில்
தேறினான்கோபந் தெளிந்தான்கொலுதனிலே
எரிதாகங்கொண்டவனும் இருக்கின்றவேளையிலே

### கர்ணர் விதுரர் வீஷ்மர் துரோணர் இவர்கள் புனந்திரனுக்கு சமாதானவார்த்தை கூறல்.

தந்தைமேல்பாணம் எடுப்பாரோதார்வேந்தா
ஐயர்மேல்பாணம் எடுப்பாரோ ஆணழகா
மன்னர்மேல்பாணம் எடுப்பாரோமந்திரியே
அமையுமமையுமென்று ஆணழகரிந்திரரே

### புனந்திரனை குருக்களணைத்து சமாதானங்கூறல்

கோணுதமாதவத்துக் குருக்களவர்ஓடிவந்து
ஆனந்தமார்பனை யணைத்துமடியில்வைத்து
உச்சிமுகந்துமவர் உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கந்தடவிப் பவளவாய்முத்தமிட்டு
கைதுடைத்துவாய்துடைத்து கனிவாய்முகந்துடைத்து
கொற்றவனார்கோபம் குணப்படுத்திக்கொண்டவரும்
மன்னவனார்கோபம் வசப்படுத்திக்கொண்டவர்கள்
அனுப்பினபாணமதை யழைத்துவுறையினிலே
போரஞ்சாமன்னர் புனந்திரருமுன்னேவந்து
இராசனுக்கு யேதுசொல்வார்மன்னவர்கள்
அமையுமமையுமையா ஐவரிடபுத்திரனே
சண்டையமையுமையா இந்திரராசாவே
போரையடக்குமையா புனந்திரவீரியரே
பாணம்விலக்குமையா மாயர்மருமகனே
மாயன்மருமகனே மாதுமணவாளா
செல்லவிட்டபாணமதை சேரவழைத்துவிடும்
என்றுமவருரைக்க யேதுசொல்வாரிந்திரரும்
உங்களதுபாணம்போ லெண்ணுதீரென்கைவில்லை
உங்களதுவில்லதுபோ லெண்ணுதீரென்பாணம்
போவென்றால்போய்விடும் வாவென்றால்வந்துவிடும்
நில்லென்றால்நின்றுவிடும் நீங்கள்பிடித்தபாணம்
வல்லுயிர்களற்றவற்கும் பாணத்திறமுமுண்டோ
மந்திரவல்லமைகள் யில்லாதபேர்களுக்கு
பாணத்திறமுமில்லை படைமன்னர்பயமுமில்லை

வில்லுதிறமுமில்லை வேந்தர்பகையுமில்லை
உங்களதுபாணம்போல் என்னைநினைந்தீர்களோ
எந்தனிடகைபாணம் யிதின்வலுமைசொல்லுகிறேன்

புனந்திரன் பாணத்தின் மகிமைகூறல்.

எதிர்குறிகாணுதே வுறைசொல்லமாட்டாதே
உதிரங்கள்கண்டாலே வுறைவந்துசேர்ந்துவிடும்
இரத்தக்குறிகண்டாலே உரைவந்துசேர்ந்துவிடும்
என்-பாணத்தின்தன்மகிமை யறியீரோமன்னர்களே
என்னுடையவில்திறத்தை யறியீரோமன்னவரே
இரத்தக்குறிகண்டாலே உறைவந்துசோந்துவிடும்
உதிரகுறிகாட்டுமென்றான் உத்தமனரிந்திரரும்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
கேட்டபுனந்திரற்கு கேள்விசொல்லமாட்டாமல்
நெஞ்சுலர்ந்துநாவறண்டு நித்திலங்குபூமுடியார்
பச்சைமுகங்கருகிப் பால்முகம்வேறுபட்டு
சிந்தைகலங்கித் திடுக்கிட்டுமெய்மறந்து
மன்னர்முகம்பார்த்து மர்மமாய்வீற்றிருந்தார்

கர்னர் புனந்திரனுக்கு திரியோதிரனுயிர்த் தூணைக்
கண்சாடையாய்க் காட்டினது.

காஞ்சிநாடாளுங் கர்ணசிகாமணியும்
மன்னர்முகம்நோக்கி மர்மமாயேதுசொல்வார்
தேசத்தையாளுந் திரியோதிரன்முன்பாக
இருவருக்குமுயிர்த்துணை நித்திலங்குபூமுடியாள்
கண்சாடைகாட்டினர் கர்ணசிகாமணியும்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து
காளையிடபுத்திரனும் கைவாணம்நழுகவிட்டு
வேந்தனிலகைபாணம் வீறிட்டெழுந்தது
புனந்திரன்பாணமது பொறிபறக்கத்தானெழுந்து
ஆகாயவீதியெல்லாம் அங்கேசுழன்றுவிழ
உயிர்த்துணைகட்கு உரைவந்துசோந்ததப்போ
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
ஆறினான்கோபம் அமர்ந்தான்கொலுமேடை
தேறினான்கோபம் தெளிந்தான்கொலுமேடை
கொற்றவனார்கோபம் குளிர்ந்தசலம்போலானார்
மன்னவனார்கோபம் மனதாறிவீற்றிருந்தார்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
உயிர்துணுபோனவுடன் உற்றபலமிழந்தான்

## திரியோதிரன் ஆங்காரபலமிழந்தது.

வாடிமனந்தளர்ந்தான் வலிமன்னராசாவும்
உதசோர்ந்துமெய்சோர்ந்து கையில்கணைசோர்ந்தான்
ற்றபலங்குலைந்து ஓங்கிமனந்தளர்ந்து
விநாகங்கொண்டவனும் யிருந்தசபைநடுவே
மூர்ச்சையடைந்தானே முடிமன்னராசர்கள்முன்
கலையாகிவிழ்ந்தானே கட்டழகன்விரியனும்
இப்படியாக யிருக்கின்றவேளையிலே

## திரியோதிரனுக்கு கலைமாறச்செய்து.

சாதிமணிக்கவுரி சந்தனத்தாலூதுவத்தி
கோலமணிக்கவுரி குங்குமத்தாலூதுவத்தி
வீசினார் தூதுவர்கள் வேல்புருவக்கண்ணனுக்கு
திறவாதகண்கள்ரெண்டுந் திறந்துமவன்பார்த்து
முழியாதகண்கள்ரெண்டும் முழித்தான்திரியோதிரன்
தாகமதுகொண்டல்லவோ தார்வேந்தன்வீற்றிருந்தான்
இப்படியாக இவனிருக்கும்வேளையிலே

## புனந்திரன் உத்தரவு கேட்கிறது.

போரஞ்சாமன்னர் புனந்திரனைப்போது
வந்துமிகப்பொழுதாச்சு மன்னர்பெரியவரே
போகவிடைதாரும் என்றுமன்னன்கைதொழுதான்
பாட்டனும்வீட்டுமரும் பாராளுந்துரோணரும்
சிற்றப்பாவிதுரனுக்கும் சிருள்ளகாங்கையற்கும்
காஞ்சிநாடாளுங் கர்ணர்பெருமாளுக்கும்
தேசத்தையாளுந் திரியோதிரனுக்கும்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்
அங்கிருக்குமன்னர் அரையர்துரைகளெல்லாம்
தெண்டனிட்டமன்னவனை வாரியெடுத்தணைத்து
வாரியெடுத்தணைத்து மார்மேலேகொண்டணைத்து
போய்வாருமையா புனந்திராசாவே
ஆறாயிரம்பாண்டியற்கும் ஐயர்மார்பாண்டவற்கும்
ஐவர்பஞ்சபாண்டவற்கும் அல்லித்திருநாயகிக்கும்
எங்களதுசென்மம் யெடுத்துரையுமிந்திரரே
போய்வாருமென்று பொருந்திவிடைகொடுத்தார்
போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்

## பேரிகை முழங்குவது.

அந்தத்தெருவீதியிலே அடித்தார்கள்பேரிகையை
வந்திருந்தோர்சின்னம் உலகேழுந்தானதிர

செம்பொன்னூர்காளை திசைவிளங்கவூதினான்
பொன்னினூற்காளை பொருந்திநின்றூதினான்
இந்திரனூன்போறேனென்று யெடுத்தான்விருதோசை
செயம்பெற்றுவாறேனென்று ஊதினான்சங்கெடுத்து
காஞ்சிநாடாளும் கர்னரவர்பெற்றெடுத்த
வேல்பொருதுங்கண்ணனும் விஸ்வகேதுதான்கேட்டு

கர்னர்குமாரன் விஸ்வகேது யுத்தத்திற்கு புறப்பட்டது.

எந்தவூராசாவோ யெவ்விடத்துமந்திரியோ
கொச்சிதேசமாளும் குணமுள்ளராசாவே
மாற்றான்படையோதா னிவ்வீதிவந்ததென்ன
எதிராளிபடையோதா னிவ்வீதிவந்ததென்ன
செயம்பெற்றுவந்தோமென்று ரணபேரியடிபடுது
வந்ததொருராசாக்கள் மன்னரைநாம்பார்ப்போமென்று
சென்றதொருராசாக்கள் சேவகத்தைக்காண்போமென்ன
சினத்துமவனெழுந்து தேர்விசயன்செல்வனமே
தேர்ப்பாகனையழைத்து தேர்கொண்வொருமென்றான்
அப்படியேநல்லதென்று ஆணழகனோடிவந்து
தேரையலங்கரித்து தேர்ப்பாகன்கொண்டுவந்தான்
தேர்வந்ததென்னசொல்லி தீர்க்கமுடன்தெண்டனிட்டான்
வேல்புருவங்கண்ணனும் விஸ்வகேதுதானெழுந்து
மண்டியிடுங்கால்களுக்கு மாதளம்பூச்சல்லடமாம்
தூக்கிவைக்குங்கால்களுக்கு துத்திப்பூச்சல்லடமாம்
குந்தியிடுங்கால்களுக்கு குரிஞ்சிப்பூச்சுங்குவிட்டு
தட்டிவரிந்துக்கட்டி தாமரைப்பூச்சுங்குவிட்டு
சிவசிவாவென்றுசொல்லி திருநீருகாப்பணிந்து
கமலத்திருமுகத்தில் கஸ்தூரிபபொட்டுமிட்டு
வாளெடுத்துவில்லெடுத்து வளைதடிகையெடுத்து
அம்பெடுத்துவில்லெடுத்து அம்பூருத்தூணிதானெடுத்து
அரண்மனையேழுகட்டும் அந்தப்புரந்தாண்டி
மாலைமுடியானு மணிரதத்தின்முன்னேவந்து
தேரைச்சுற்றிதெண்டனிட்டு தேரின்மேலேறினான்
பச்சைக்குடையாம் பவளநெடுங்குடையாம்
வச்சிரக்குடையாகி வைடூரியப்பொற்குடையாம்
முத்துக்குடைபிடிக்க முடிமன்னர்தேர்நடக்க

பவளக்குடைப்பிடிக்க பார்மன்னர்தேர்நடக்க
ரத்தினக்குடைபிடிக்க ராசர்கள்தேர்நடக்க
போரஞ்சாமன்னர் புனந்திரருஞசேவகரும்
அர்ச்சுனனார்புத்திரனும் அவருடையசேனைகளும்
அம்பலத்துவாசல் நடந்தாரழகாக
குருவனிடவாசலெல்லாந் தாண்டியந்தகொற்றவனும
பத்துபடித்தளமும் பதினெட்டுமண்டபமும்
கட்டுப்படித்தளமும் யிராசாக்கள்மண்டபமும்
அத்தனையுந்தாண்டிவந்தார் ஆணழகரிந்திரரும்
வாசலதைக்காற்கின்ற வார்கொள்ளிமுன்னம்வந்தாள்

வார்கொள்ளி புனந்திரனைச் செய்திகேட்பது.

வாசல்தடைக்காரி வார்கொள்ளியேதுசொல்வாள்
வானவர்கள்புத்திரனே வந்தீரேதூதுரைக்க
மாதுமணவாளர் தூதுரைத்துமீண்டிரோ
தூதுரைத்துவந்ததெல்லாம் சொல்லுமையாயெந்தனுக்கு
சொல்லுமையாவென்றுசொல்லித் தொழுதிரங்கிதெண்டனிட்டாள்
போரஞ்சாமன்னர் புனந்திரனாரேதுசொல்வார்
போனவிசேஷம் புதுமைநடந்ததுவும்
நாவிரண்டுவார்த்தையால் நடப்பித்தாரிந்திரரும்
அந்தவிசேஷம அதுகேட்டுவார்கொள்ளியும்
கேட்டுமனமகிழ்ந்து கிளிபவளச்செவ்வாயாள்

வார்கொள்ளி யுரைப்பது.

அத்திபுரத்தை யரசாளவாருமையா
அங்கவனநாடு அரசாளவாருமையா
உங்கள் ஐவரிடசீமை முழுதுமேயாளுமென்று
போய்வாருமென்றுசொல்லிப் பொன்னடிக்குத்தெண்டனிட்டு
போரஞ்சாமன்னர் புனந்திரருமேதுசொல்வார்
மூன்றுநாளார்பொழுது முடிமன்னராளுவது
நாலாநாளெங்களது ஆருகாண்ராச்சியங்கள்
ரெட்டிப்புசம்பளங்கள் நானேதருகிறேன்காண்
ஏதுக்குமஞ்சாதே யிளங்கொடியேவீற்றிரென்றான்
சொல்லித்திரும்பினான் துன்னீலங்கண்ணனும்
அத்திப்புரத்தில் நெடும்வீதிவாரார்கள்

திரியோதிரனை புனந்திரனும் உத்தரவு கேட்டதற்கு
மௌனமாய் தலையை யசைத்தது.

தேசத்ததையாளுந் திரியோதிரன்முன்னேவந்து
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டார்

வந்துபணிந்தவனை வாழ்த்திவிடைதாராமல்
வாரியெடுக்காமல் வண்ணமுடிவைக்காமல்
மகுடமுடியசைக்க மௌனமாய்த்தானிருந்தார்
முத்துமுடியசைக்கி மெத்தவேதானிருந்தார்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
ஆகட்டுமென்றுசொல்லி ஆணழகர்சொல்லலுற்றார்
படிபடியென்றுசொல்லி படிந்ததுஅவ்வாணை
முடிக்கம்பம்தட்டி முதுகின்மேல்கையைவைத்து
கைத்தலத்தைத்தட்டிக் களுத்தானையேறினான்

புனந்திரன் பிரயாணப்பட்டு வருகிறது.

மத்தகசத்தைத்தட்டி மதயானையேறினான்
அம்மானுந்தானும் மதயானையேறினார்
மாமாவுந்தானும் மதயானையேறினார்
சிலமன்னரெல்லோரும் திடுக்கிட்டெழுந்திருந்து
சரியானையேறினார் தன்னோடொத்தராசாக்கள்
முன்னானையேறினார் மூன்றுலட்சம்ராசாக்கள்
பின்னானையேறினார் பேருலகராசாக்கள்
முன்னைமுரசெடுத்து முன்னானைமேல்போட்டார்
பின்னைமுரசெடுத்து பின்னானைமேல்போட்டார
சிலமன்னரெல்லோரும் தேரின்மேலேறினார்கள்
பலமன்னரெல்லோரும் பல்லக்குயேடுனார்கள்
குலமன்னரெல்லோரும் குதிரையின்மேலேறினார்கள்
அழகானமல்லரெல்லாம் ஆனைமேலேறினார்கள்
பட்டபுலவர் பதினெட்டுமந்திரிகள்
சித்தர்புலவர் சிறப்பானமந்திரிகள்
சிங்கங்கரடிபுலி சேரமுழங்கினார்
யானைகரடிபுலி யருகில்வந்துமுழங்கினார்
அவரவர்கள்வாகனத்தில் அவரவர்களேறினார்
ஏறினபோதே யெடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடைகள் முழுவயிரப்பொற்குடையும்
தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்
சிவசங்கராவென்று சொல்லி தேறின்மேலேறினான்
ஒருஅக்ரோணிசேனையுடன் உத்தமனும்வாராளே
சிலமன்னரெல்லாம் தேறின்மேலேறினார்
பலமன்னரெல்லாம் பல்லககிலேறினார்
தன்னோடொத்தராசாக்கள் அழகானையேறினார்
அழகானையேறினார் ஐந்துலட்சம்ராசாக்கள்.

## குடையின் சிறப்பு.

ஏறினபோதே எடுத்தார்நெடுங்குடைகள்
முத்துக்குடையாம் முழுவயிரப்பொற்குடையாம்
தங்கக்குடையாம் தவளநெடுங்குடையாம்
பச்சைக்குடையாம் பவளநெடுங்குடையாம்
எடுத்துநிறைந்தார்கள் எண்ணாயிரங்கோடி
சுத்திநிறைந்தார்கள் சூரியனைக்கண்மறைக்க
பக்கம்நிறைந்தார்கள் பகவானைக்கண்மறைக்க
ஒற்றைக்குடைநடுவில் வீரானேவீரியனும்
காஞ்சிநாடாளுநங் கர்ணசிகாமணியும்
வேல்புருவங்கண்ணனும் விஸ்வகேதுவாரேனென்று

## விஸ்வகேது விருது முழக்கினது.

விஸ்வகேதுவாறேனென்று விருதுமுழக்கிவிட்டான்
சண்டைக்கிவந்தேனென்று ஊதினான்தாரைசின்னம்
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைபேரியடிபடுது
வெற்றிவெற்றியென்றுசொல்லி வெற்றிநகாரடிபடுது
நடந்தானேவிஸ்வகேது நாலுதிக்குந்தானதிர
போராஞ்சாமன்னர் புணந்திரராசாவும்
வந்துவளைந்தானே வல்லிடிபோல்விஸ்வகேது
போராஞ்சாமன்னர் புணந்திரரைத்தான்பார்த்து
கட்டழகனவிஸ்வகேது காளையற்கேதுரைப்பான்
ஆரடாமன்னவனே அறிவுகெட்டபாதகனே
எந்தவூர்சண்டைபண்ணி யிந்தவூர்செயிக்கவந்தாய்
எந்தவூர்வெற்றிகொண்டு யிந்தவூர்செயிக்கவந்தாய்
நில்லடாமன்னவனே நிமிஷத்தில்வென்றிடுவேன்
வாணாலுயிர்பிளந்து வல்லுயிரைக்கொள்ளைகொண்டு
எமனுலகுதேடி யிப்போதனிப்பிடுவேன்
நமனுருலகத்துக்கு நானேயனுப்பிடுவேன்
என்றுமவன்வில்லெடுத்தா னித்திலங்குபூமுடியாள்

## புணந்திரனுக்கும் விஸ்வகேதுவுக்கும் உயுத்தம்.

வில்லைக்குணத்தொனித்து விட்டானொருபாணம்
விட்டானொருபாணம் விண்ணதிரமண்ணதிர

மண்ணதிரவிண்குலுங்க மாற்றான்படைநடுங்க
எதிரிதிடுக்கிடவே யெல்லையதிர்ந்துவிழ
இப்பெரியபிடியை யிந்திரனார்தான்பார்த்து
இவனார்காண்முனியென்று ஆணழகனெச்சரித்து
வில்லெடுத்துநாரிபூட்டி வில்லைக்குணத்தொனித்து
வில்லைக்குணத்தொனித்து விட்டான்சரபாணம்
விட்டான்சரபாணம் விண்ணரமண்குலுங்க
விண்ணதிரமண்குலுங்க மாற்றான்திடுக்கிடவே
மாற்றான்திடுக்கிடவே மறுமன்னர்கொக்கரிக்க
எதிரிதிடுக்கிடவே யிடிமன்னர்கொக்கரிக்க
இப்படிக்குச்சண்டைபண்ணு ரிருநிலத்துராசாக்கள்
இவருடையசண்டைகளில் தும்பிப்பறக்காது
குருவிபறக்காது கோட்டானும்நாடாது
ஆகாயவீதியெல்லாம் ஆணழகர்பந்தலிட்டார்
பாதாளலோகமெல்லாம் பாணத்தால்பந்தலிட்டார்
அம்புவரும்விதங்கள் ஆற்றமுடிபோகாது
பாணம்வரும்விதங்கள் பார்க்கமுடிபோகாது
கோடானகோடியுண்டு கொற்றவர்கள்பாணமது
கண்டுமுடியாது கணக்கிலடங்காது
சொல்லமுடியாது சுந்தரனார்பாணமது
ஒருவர்விடும்பாணம் ஒருவர்விலக்கிடுவார்
வேல்புருவங்கண்ணனும் விஸ்வகேதுபாணம்விட்டான்
போரஞ்சாமன்னர் புனந்திரனார்முன்னேவந்து
மல்லிகைப்பூவாம் வணங்குதுபாணமது
போரஞ்சாமன்னர் புனந்திரனார்பாணம்விட்டார்
மல்லிகைப்பூவாம் வணங்குதவர்பாதம்
வேல்புருவங்கண்ணனும் விஸ்வகேதுபாணம்விட்டார்
வந்துவணங்குது மன்னவர்பாணங்கள்

புனந்திரன் அம்மான் பொன்னுமலை நாடானுக்
குரைப்பது.

போரஞ்சாமன்னர் புனந்திரனுந்தான்பார்த்து
பொன்னுமலைநாடாரும் அண்ணர்முகம்நோக்கி
போரஞ்சாமன்னர் புனந்திரனுக்கேதுசொல்வார்
அவன்விடும்பபணமெல்லாம் அய்யாவேவணங்குதுகாண்

நான்விடும்பாணமெல்லாம் அவனைவணங்குது
ஏதுகருமம் எனக்கறியச்சொல்லுமென்றார்

பொன்னுமலைநாடான் சொல்வது.

பொன்னுமலைநாடாளும் அண்ணனெடுத்துரைப்பார்
அவனூரும்பேரும் அதிசயங்கள்கேளுமென்றார்
நாடும்புதுமைகளாம் ராசனுடதன்பேரும்
அத்தனையுங்கேட்டால் தெரியுங்கணைமழகா
என்றுமவருரைக்க இந்திரருந்தான்கேட்டு
ஆர்காணும்ராசாவே ஆணலழகுமன்னா
ஊரென்னபேரென்ன வுத்தமனேசொல்லுமென்றார்
உன்னைப்பெற்றதந்தையர் பேருரையுமென்றானே
வேல்புருவங்கண்ணன் விஸ்வகேதுதான்கேட்டு
பேர்கேட்டுவேர்பிடுங்கி வந்திரோமன்னவரே
உன்னை-சண்டைபண்ணிநான் செலித்து சவுரியங்கள்காண்பித்து
என்-தேருக்கால்தன்னுடனே சேர்த்துநானுன்னைக்கட்டி
என்-ரதத்தின்கால்தன்னுடனே யுன்னைக்கட்டிப்போகையிலே
அப்போதுநானுரைப்பே னடையாளங்கேளுமென்றார்
அந்தவிசேஷம் அதுகேட்டு இந்திரரும்
எடுத்தானேவில்லதனை ஏழுலகந்தத்தளிக்க

புத்திரன் பாணம்விட்டது.

அண்டபண்டந்தானதிர ஆகாயம் அற்றுவிழ
விட்டான்சரபாணம் மேனியெல்லாந்தான்மறைய
மற்றுமொருகணை மருகணையைதான்தொடுத்தான்
வேல்புறவங்கண்ணனும் விஸ்வகேதுதான்பார்த்து
படபடென்றுபற்கடித்துப் பதறியங்கேவில்லெடுத்தான்
வில்லைக்குணத்தொணித்து வீரனவன்வில்லெடுத்தான்
விட்டான்சரபாணம் மேனியெல்லாந்தானதிர
இருதரத்தார்பாணமது எண்ணமுடியாது
தும்பிபறக்கிறது சூரியனைக்கப்புறது
கருந்தூளுஞ்செந்தூளுங் கலந்துபறக்கிறது
இப்படிக்காய்சண்டைபண்ணார் இருதரத்துராசாக்கள்
காஞ்சிநாடாளுங் கர்ணர்பெருமாளும்

கர்ணர் பிள்ளைகளிடம் வருகிறது.

அம்பலத்துவாசலிலே ஆணழகன் தானெழுந்து
அழுதண்ணைப்போரேனென்று ஆணழகன்வாரானே
சண்டைசண்டையென்றுசொல்லி சண்டைநகரடிபடுது
ரணங்கள்ரணங்களென்று ரணபேரியடிபடுது
உத்துத்துக்கேட்டாரே உத்தமனார்கருணராசன்

எவ்வுலகராசாக்கள் இங்கேவந்தார்சண்டைசெய்ய
ஆள்பெருஞ்சேவகரை யனுப்பியவர்யாருமென்றார்
தூதுவர்களோடிவந்து துரிதமுடன்கண்டார்கள்
இருகரத்துசேனைகளும் இந்திரராசாவும்
காஞ்சிநாடாளுங் கருணரிடபுத்திரனும்
இவர்களுடன்சண்டையென்று எழுந்துமிகநடந்து
காஞ்சிநாடாளுங் கருணருக்குதெண்டனிட்டு
உந்தன்குமாரனும் ஒளிவுள்ளயிந்திரனும்
விஸ்வகேதுராசாவும் விஜயனுடபுத்திரனும்
இவருடன்சண்டையென்று இணைகடகக்கைதொழுதான்
காஞ்சிநாடாலுங் கர்ணரவர்கேட்டு
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
என்றுமனதிலெண்ணி எழுந்திருந்துஓடிவந்து
யுத்தமுகந்தனிலே வந்துநின்றாருத்தமரும்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து

புனந்திரன் கர்ணரைக்காணுகிறது.

யானைவிட்டுக்கீழிரங்கி ஆனந்தவாழ்பார்பன்
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சதையும்
பொன்னீருஞ்சொம்பிலே பன்னீருந்தானெடுத்து
காஞ்சிநாடாளுங் கர்ணருக்குமுன்னேவந்து
பன்னீரால்காலலம்பி பட்டாலடிதுவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்து
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டு
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டு
தெண்டனிட்டமன்னவரைக் கண்டல்லோசீர்கர்ணர்
வாரியெடுத்து மடிமேலேகொண்டணைத்து
உச்சிமுகந்துபிள்ளை உள்ளங்கால்முத்தமிட்டு
பக்கந்தடவி பவளவாய்முத்தமிட்டு
இப்படியாய்பேசி இருக்கின்றவேளையிலே

விஸ்வகேது தகப்பனாகிய கருணரைக்காண்கிறது.

தேரேறிசண்டைபண்ணும் விஸ்வகேதுதான்பார்த்து
தன்னைப்பெற்றதந்தை கருணரங்கேவந்ததுவும்
அவர்-யானைவிட்டுகீழிறங்கி ஆணழகன்வந்ததுவும்
புண்ணியனார்பாதம் பூபோட்டுதொழுததுவும்
வாரியெடுத்துமல்லோ மார்போடணைத்ததுவும்
அத்தனையுங்கண்டானே ஆணழகன்விஸ்வகேது
தேரைவிட்டுகீழிரங்கி துருசாகத்தானடந்து
பூவும்புதுமலரும் பொன்னறுகுஅட்சத்தையும்
பொன்னீருஞ்செம்பிலே பன்னீருங்கொண்டுவந்து

பன்னீரால்காலலம்பி பட்டாலடி துவட்டி
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்தான்
மூக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
நாற்கால்வலம்வந்து நமஸ்கரித்துதெண்டனிட்டான்
காஞ்சிநாடாளுங் கருணரவர்பார்த்து
வந்துபணிந்தவனை கண்டுமனமகிழ்ந்து
வாயாரவாழ்த்தி மனதுமிகக்குளிர்ந்து
மைந்தனைக்கொஞ்சி மடிமேலேகொண்டணைத்து
இருவரையுங்கொஞ்சி யிருதொடையில்கொண்டணைத்தார்
அந்தச்சமயத்தில்விஸ்வகேதுயேதுசொல்வான்
தன்னையர்முகம்நோக்கி ஆணழகர்ஏதுசொல்வார்
மாத்தானைக்கொண்டு மடிமேலணைத்தீரே
சண்டைபண்ணவந்தவனைத் தூக்கிமடியில்வைத்தீர்
இவன்-ஆர்காணும்ஐயாவே அடியேனுக்குறையுமென்றான்
காஞ்சிநாடாளும் கரணரவர்கேட்டு

கருணர் தன்பிள்ளையாகிய விஸ்வகேதுக்கு தன்னுடைய
தோத்திரவரலாறு கூறல்.

கோனுதமாதவத்துக் குந்தியம்மாள்என்னாச்சி
அறியாதகாலையிலே ஆச்சியருளன்னைப்பெற்றாள்
தெரியாதகாலத்திலே தேவியரும்என்னைப்பெற்றாள்
கண்டார்நகைப்பாரென்று கட்டழகியென்னாச்சி
பேழைதனிலேவைத்து ஆற்றில்அலையவிட்டாள்
தேசத்தழகன் திரியோதிரன்தான்பார்த்து
என்னைவளர்த்தவரும் என்னைப்பட்டங்கட்டினான்காண்
இந்தப்பெருமையா யிருந்திட்டேன்நானுமிப்போ
கோனுதமாதவத்துக்கு குந்தியம்மாளாச்சியரும்
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆணழகர்தம்பியென்று
ஆனந்தவாழ்மார்பா அறியாமல்நானிருந்தேன்
இப்போதுயெந்தனுக்கு எல்லாம்வெளியாச்சு
தக்கப்புகழுடைய தருமாவருன்தாதை
வெற்றிமல்யானை வீமாவருன்தாதை
காண்டவனமெறித்த காளையவருன்தாதை
நாமமுடியனும் நகுலனும்உன்தாதை
தாமமுடியனும் சகாதேவன்உன்தாதை
ஆனந்தமார்பர்வுனக் காறுபேர்தாதையென்றான்
தோராவடிவழகி துரோபதைஉன்னாச்சி
சோரவளநங்கை சுபத்திரையாள்உன்னாச்சி
மேகம்பயின்றெடுத்த மின்னொளியாளுன்னாச்சி
நாகம்பயின்றெடுத்த நாககன்னிஉன்னாச்சி
பொற்கலசவாழ்முலையாள் போகதிவுன்னாச்சி

பிறவாமுடி தரித்த பெண்பெருமா ளுன்னுச்சி
பங்கயஞ்சீர்கண்ணுள் பவளக்கொடியுன்னுச்சி
போதேவருந்தடங்கு பொன்னுருவிதன்னுடனே
ஈரலாப்பூந்தாரர் எட்டுப்போரச்சியென்றான்
இவர்யார்காணும்என்று கேட்டிரே ஆணழகா

கருணர் விஸ்வகேதுவுக்குப் புனந்திரன் வரலாறுசொல்லல்.

யாருமல்லாயெந்தனுக்கு அழகானகண்மணியே
பாசுபதம்பேறுபெற்ற பார்த்தனுடபுத்திரர்காண்
காண்டாவனமெரித்த காளையுடபுத்திரன்காண்
அழகியசீர்கொம்பனையாள் அல்லியுடபுத்திரன்காண்
தோகைமயிலனையாள் துற்சடையாள்மருமகன்காண்
கருநீலம்பூங்குழலால் கலந்தாரிநாயகன்காண்
அஞ்சுவயதுடைய அர்ச்சுனற்குதந்தையிவன்
நுலால்கடுந்திரளார் நூற்றொருவர்புத்திரன்காண்
உந்தனுக்குதம்பியென்று உரைத்தார்கருணராஜன்
அந்தஉரைகேட்டு ஆனந்தவாழ்மார்பன்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தானெழுந்து
பூவும்புதுமலரும் பொன்னறுகு அட்சதையும்
பொன்னினதுசொம்பிலே பன்னீருங்கொண்டுவந்து
கொண்டுவந்தபூமலரை குபுகுபென்றுதான்சொரிந்தான்
முக்கால்வலம்வந்து முடிவணங்கிதெண்டனிட்டான்
அப்போதுவிஸ்வகேது ஆணழகனைதுசொல்வான்

விஸ்வகேது புனந்திரனை ஆசீர்வதிக்கிறது.

வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாழ்வீர்வளர்ந்திடுவீர் வர்த்திருப்பீருத்திருப்பீர்
நிற்பீர்நிலைதரிப்பீர் நீராசையாண்டிடுவீர்
கற்பதித்ததூண்போலே கலங்காதரசாள்வீர்
விற்பதித்ததூண்போல விளங்கஅரசாள்வீர்
மாரனைக்கொன்று மறுபட்டமாண்டிடுவீர்
என்னைப்பெறுவீர் எதிர்த்தார்முடிபெருவீர்
பிள்ளைபெறுவீர் பெருமாள்பதம்பெருவீர்
போருக்குப்போய்விடுவீர் பொழுதோடேவென்றிடுவீர்
வென்றகளரியிலே விரபட்டங்கட்டிடுவீர்
சினத்துவந்தார்பூமுடியை செண்டாட்டமாட்டுவீர்
பகைத்துவந்தாரபூமுடியைப் பருந்தாட்டமாட்டிடுவீர்
கன்னிகளைமாலையிட்டு காளைகளைஈன்றிடுவீர்
மங்கையரைமாலையிட்டு மைந்தர்களையீன்றிடுவீர்
பெண்களைமாலையிட்டு பிள்ளைகளைப்பெற்றிடுவீர்
அத்திபுரமாள அரசாளஆண்பெறுவீர்
மதுரைநகராள மைந்தர்களைப்பெற்றிடுவீர்

பதினாறும்பெற்று பெருவாழ்வுவாழ்ந்திடுவீர்
ஆல்போல்தழைத்து அறுகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவீர்
வாழ்வீர்காணென்று மனதாரவாழ்த்தினார்
வாழ்ந்திருப்பீரென்று மனதாரவாழ்த்தினார்
தம்பியைவாழ்த்தியல்லோ தார்வேந்தனேதுசொல்வான்
தம்பிதனஞ்சயனை சமர்த்துள்ளசூரியனை
அரண்மனைக்குவந்து அமுதுபொசியுமென்றான்

புனந்திரன் விஸ்வகேதுவுக்கு சொல்வது

போரஞ்சாமன்னர் புனந்திரரும்தான்கேட்டு
அண்ணன்முகம்நோக்கி ஆணழகன்ஏதுசொல்வான்
தமயன்முகம்நோக்கி தார்வேந்தனேதுசொல்வான்
இன்னம்-மூன்றுநாளாய்பொழுது முடிமன்னராளுவது
நாலாநாள்நம்மு ஆகுதுகாண்ராச்சியங்கள்
மன்னர்பெருமைகளும் மருமன்னர்சேவகமும்
திரியன்பெருமைகளும் சேனைபேர்சேவகமும்
மூன்றுநாள்தன்னிலே சாயுதுகாண்அண்ணாவே
நாலால்கடுத்திரளார் நூற்றொருவர்பூமுடியும்
நூற்றொருவர்பூமுடியும் நூறுங்கஅடித்தபின்பு
சகுனிதலையுடைத்து தார்வேந்தர்போட்டபின்பு
கமலிதன்னைமுடிந்தபின்பு எத்திலங்குபூமுடியே
போதேவருந்தடங்கும் பொன்னுருவியென்றாச்சி
நமதாச்சியரண்மனையில் எல்லவருங்கூடி
ஒத்துக்கலந்து பொசிப்போங்காண்மன்னவரே
கூடக்கலந்து பொசிப்போங்காண்மன்னவரே
இப்போ-மாற்றான்தன்வாசலிலே பாலமுர்தமுண்ணலாமோ
சத்திரியரண்மனையில் இருக்கமுர்தமுண்ணலாமோ
என்றவுரைத்தானே யிந்திரராசாவும்
விஸ்வகேதுதான்கேட்டு மெத்தமனமகிழ்ந்து
இருவர்களுங்கொஞ்சி யிருந்தார்களந்நேரம்
போரஞ்சாமன்னர் புணந்திரராசாவும்

கருணர் புத்திரனைப்பார்த்துச் சொல்வது

கருணரவர்பார்த்துக் கட்டழகர்ஏதுசொல்வார்
எமதஞ்சுபேர்தம்பியரும் அவருடையபுத்திரரும்
மன்னவர்கள்ஐந்துபேரும் மன்னர்பஞ்சபாண்டவரும்
கோனைதமாதவத்துக் குந்தியம்மாள்என்தாயும்
பானும்என்புத்திரனும் என்னுடையதேவியரும்
ஒக்கக்கலந்து ஒருகலத்திலுண்போமோ
கூடியிருந்துநாம் கூட்டமுதுண்போமோ
ஐவர்பஞ்சபாண்டவர்கள் அரசாளுங்கோலமதை

என்-கண்ணாலேகண்டு களிப்பேனேகட்டழகா
மனதாரப்பார்த்து மகிழ்வேனோமன்னவனே
என்றுமவருரைத்து ஏங்கிமனந்தளர்ந்து
துக்கித்துமன்னன் இருகண்ணும்முத்துகிர்த்தான்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்பார்த்து
ஐவர்பஞ்சபாண்டவரும் அவராளும்அரசுகளும்
மதுரைவளநாடு வைகைப்பெரும்பதியும்
அத்திப்புரமும் அடங்களும்உன்னதுகாண்
அங்கவளநாடும் அடங்களும்உன்னதுகாண்
மன்னவர்கள்பஞ்சவர்கள் வனமேதிரிந்திடட்டும்
ஐயாவேநீரிருந்து அரசாளலாகாதோ
மன்னவரேநீரிருந்து வையகத்தையாளொண்ணாதோ
காஞ்சிநாடாளுங் கருணர்பெருமாளும்
மன்னர்பஞ்சபாண்ட வற்கு உடற்பிறப்புஎன்றாலே
உங்களுக்குமுன்பிறந்த உத்தமனார்என்றுசொன்னார்
காவலர்களைவர்களும் காடேதிரிவார்காண்
ஐயாவேநீரிருந்த அரசாளலாகாதோ
நீரும்அவருமென நிஷ்டூரம்வேறுமுண்டோ
அண்ணர்பதியாண்டால் ஆகாதோஐவருக்கும்
நீர்மன்னர்பதியாண்டால் மனங்கொள்ளமாட்டாதோ
வந்துபதிசேரு மென்றுசொல்லித்தெண்டனிட்டான்

கருணர் புனந்திரனுக்குச் சொல்வது.

காஞ்சிநாடாளுங் கருணரவர்கேட்டு
போரஞ்சாமன்னர் புனந்திரற்குயேதுசொல்வார்
அய்யாவேநீர்கேளும் அடியேனொருவார்த்தை
இந்திரரேநீர்கேளும் என்னுடையநல்லவார்த்தை
காவலனார்பஞ்சவர் கட்டழகர்ஐவருக்கும்
என்மாதாபயின்றெடுத்த மன்னவர்களைவருக்கும்
எந்தனுடசேதி யெடுத்தொன்றுஞ்சொல்லாதீர்
கர்னருடசேதியவர் காதிலேயும்போடாதீர்
மன்னர்பஞ்சபாண்டவர்கள் என்வரலாறறிந்தாலே
ஐவர்களும்பூமிவிட்டுக் கானகத்தில் செல்வார்கள்
அவர்தோணியநாளுந் தலைத்தார்வனந்தனிலே
அவர்-ஊழியுள்ளகாலமட்டும் உழன்றார்வனந்தனிலே
ஐவர்பஞ்சபாண்டவரும் அரசாளவேணுமையா
நான்படவேணும்படவேணும் பார்த்தன்கையம்பாலே
இன்னம்படவேணும் எழில்விஜயனம்பாலே
போரஞ்சாமன்னர் புனந்திரரேநீர்கேளும்
பாரதம்யென்று படைபொருதும்வேளையிலே
பதினெட்டாம்நாளையிலே படைபெருதுஞ்சண்டையிலே

ஆடிப்பறக்கும் அமுர்தசமக்களத்தில்
தேடிபுலாவுந் திரள்வேந்தர்கூட்டத்திலே
பக்கம்பூகம்பிரிந்து சண்டைபண்ணுவேளையிலே
ஆயனொருசாரதியாய் அருச்சுனன்தேரேறி
மாயனொருசாரதியாய் மச்சுரதமேறி
ஆணலழகுமன்னன் அர்ச்சுனராசதுரை
வாளெடுத்துவில்லெடுத்து வளவுதடிகையெடுத்து
அர்ச்சுனன் தானும் அடுத்துபவன்சண்டைபண்ண
நாகக்கணைதொடுக்க நடுங்கியதுவொடிய
இருவரும்யுத்தம்பண்ணும் வேளையிலேயிந்திரரே
அருச்சுனன்கைபாணம் அறுக்குமேஎன்தலையை
பார்த்தன்கையம்பதுதான் படக்கென்றறுத்துவிடும்
பட்டுவிழுவேன் பார்த்தன்கையம்பாலே
அற்றுவிழுவேனன் அருச்சுனன்கையம்பாலே
கருணனைக்கொன்று விருதுபெற்றேனென்றுசொல்லி
அருச்சுனராசனவ னூதுவான்சங்கெடுத்து
அந்தத்தொனிகேட்டு என்னாச்சிகுந்தியார்
என்னாச்சிகுந்தியம்மாள் உன்னாச்சிஅல்லியரும்
அர்ச்சுனனார்பெண்டுகள் ஐந்திரண்டுஏழுபேரும்
இவர்பஞ்சபாண்டவரும் அவர்களுடதேவியரும்
அத்தனைபேரும் அடியனெதிரில்வந்து
என்னையெடுத்துஅடக்கஞ்செய்ய வேணுங்காணிந்திரனே
போரேதவருந்தடக்கும் பொன்னுருவிநாயகமும்
வெல்புருவங்கண்ணனும் விஸ்வகேதுராசாவும்
இருவரையுந்தேடி இங்கேயழைக்கவேணும்
இவர்பஞ்சபாண்டவர்கள் அவர்களைக்காக்கவேணும்
தேசத்தையாளும் திரியோதிரன்மாளிகையில்
என்தேவியும்புத்திரரும் இருக்கவேஆகாது
இவரிடஞ்சேர்ப்பேனென்று ஆணையிடுயிந்திரரே
போராஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு

புனந்திரன் ஆயாசப்படுவது.

சிவசிவாவென்று செவிதனிலேகைகளைவைத்து
ஈயத்தைக்காச்சி யிருசெவியில்விட்டாற்போல்
நாராசங்காச்சி நடுச்செவியில்விட்டாற்போல்
சிந்தைகலங்கி திடுக்கிட்டுமெய்மறந்து
பச்சைமுகங்கருகி பால்முகம்வேறுபட்டு
மன்னன்மனஞ்சலித்து மறுவார்த்தையெடுத்துரைப்பான்
ஐயர்முகம்நோக்கி ஆணழகன்ஏதுசொல்வான்
ஐயாவேகேளும் அடியேனொருவார்த்தை
நூலார்கடுந்திராளர் நூற்றொருவர்பூமுடியை

நூற்றொருவர்பூமுடியை நொறுங்கஅடித்திடுவேன்
சகுனிதலையைத் தவிடுபொடியாக்கிடுவேன்
தைலாட்டன்பூமுடியைத் தண்டாலடித்திடுவேன்
தங்கைமணவாளன் தறுதலையன்பூமுடியை
அரைநாழிக்கொள்ளியிலே அனலாயெரித்திடுவேன்
வாய்திறந்துநீருரைத்தால் வண்ணமுடிசங்கரிப்பேன்
ஐவர்பஞ்சபாண்டவரும் ஐயாவேநீருமல்லவோ
ஒக்கயிருந்து அரசாளுமையாவே
காஞ்சிநாடாளுங் கருணாரவர்கேட்டு

கருணார் புனத்திரனை ஆசீர்வதிப்பது.

போரஞ்சாமன்னர் புனந்திரரைதானெடுத்து
கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
என்னையாபுனந்திரனே என்னழகுள்ளகண்மணியே
கட்டிக்கரும்பே கணுவில்லாசெங்கரும்பே
முத்துமுடிதரித்த முடிமன்னபுத்திரனே
பொன்னின்முடிதரித்த புத்திரராசாவே
நீர்சொன்னதுபோராதோ சூழ்ந்தரசையாளணுமோ
பேசினதுபோராதோ பேருலகயாளணுமோ
வாய்திறந்துசொன்னீரே மன்னர்பெருமாளும்
ஐவர்பஞ்சபாண்டவரும் அடியேனுக்கூடியிருந்தால்
அரசாண்டபாவனைபோல் ஆச்சுதுகாணிந்திரரே
ஆண்மையுள்ளபுத்திரனே ஆணழகாஇந்திரரே
என்தேவியும்உன்னண்ணனையும் சேர்க்கிறேன்யென்றுசொல்லி
உன்னுச்சிஅண்ணனையும் ஐவருடன்சேர்ப்பேனென்று
ஆணையிடுங்காணும் ஆணழகாராசமன்னு
என்றுமவருறைக்க ஏதுசொல்வாரிந்திரரும்

புனந்திரன் ஆணைகூறுவது.

சோலைமலருடைய சொக்கர்திருவாணை
ஆனைமலருடைய அம்மன்திருவாணை
ஏழுலகமாளுகிற யெம்பெருமாளவராணை
ஆதிசிவனாணை ஆயர்மேல்தானாணை
பரமசிவனாணை பார்வதியாள்தன்னாணை
கோணுதமாதவத்துக் குந்தியம்மாள்தன்னாணை
ஐவர்பஞ்சபாண்டவர்கள் யானழகர்தன்னாணை
ஐயாவேவுந்தன்மீதி லாணைபெரிதுகண்டீர்
தோராவடிவழகி துரோபதைதன்னாணை
போதேவருந்தடங்கும் பொன்னுவிருமேலாணை
பிறவாமுடிதரித்தப் பெண்பெருமாள்மேலாணை
சோரவளநங்கை சுபத்திரையாள்மேலாணை
மேகம்பயின்றெடுத்த மின்னொளியாள்தன்னாணை

நாகம்பயின்றெடுத்த நாககன்னிதன்னாணை
அகஸ்தியனார்பெற்றெடுத்த போகவதிதன்னாணை
மலரிலவதரித்த அல்லியம்மாள்தன்னாணை
சேராம்புராசன்பெற்ற செல்வதியாள்தன்னாணை
அஞ்சுவயதுடைய அருச்சுனனார்மேலாணை
மைந்தர் அருச்சுனனார் மேலாணை
ஆச்சியையும் அண்ணனையும் ஐவரிடம்சேர்த்திடுவேன்
நாமனையுடனிருந்து ராசனுடன்சேர்த்திடுவேன்
அஞ்சாதீர்அஞ்சாதீர் என்னுடையஐயாவே
எதுக்கும்அஞ்சாதீர் என்னுடையஐயாவே
ஆணையிடுமென்றுசொல்லி ஆணழகன்தெண்டனிட்டான்
காஞ்சிநாடாளுங் கருணாரவர்பார்த்து
ஆணைவிட்டேன்தோஷமில்லை ஆனந்தவாழ்மார்பா
ஒட்டுவிட்டேன்தோஷமில்லை உத்தமனார்புத்திரரே
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவே
ஆணைவிட்டேனென்றவுடன் ஆணழகனேதுசொல்வான்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டு
விடைதாருமென்றுசொல்லி வணங்கினானிந்திரனும்
காஞ்சிநாடாளுங் கர்ணாரவர்கேட்டு
மதுரைக்குப்போரீரோ மன்னர்பெருமானே
ஆருயிராம்பாண்டியற்கும் அல்லிமலர்நாயகிக்கும்
என்சேதிமுறையுமென்றார் செல்வனார்புத்திரனார்
அடியேனுடன்சேதியனைவற்கு முறையுமென்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரருந்தான்கேட்டு
அப்படிக்கேநல்லதென்றான் ஆனந்தவாழ்மார்பன்

கர்ணர் சொல்வது.

காஞ்சிநாடாளுங் கருணரெடுத்துரைப்பார்
பருவமதயானைப் பஞ்சவர்களைவருக்கும்
உருவமதயானை வுத்தமர்களைவருக்கும்
என்சேதியொன்றும் உரையாதேஆணழகா
என்வரலாறுகளொன்றும் முறையாதேமன்னவனே
ஐவர்க்குஞ்சொன்னாலே ஆரணியஞ்சென்றிடுவார்
மற்றவர்க்குச்சொன்னாலே வெங்காடுரைந்திடுவார்
என்னையரசாள வைத்துமவர்நடப்பார்
வீமன்சபதம் முடியாதுமன்னவனே
அருச்சுனனார்தன்சபதம் முடியாதுமன்னவனே
இரட்டைகள்தன்சபதம் முடியாதுமன்னவனே
பாஞ்சாலன்பெற்றெடுத்தபத்தினியாள் துரோபதையாள்
மாதுசபதம்முடியாது மன்னவனே
மாதுமயிர்முடிக்க வேணுங்காண்மன்னவனே

கோதுகுழல்முடிக்க வேணுங்காண்கொற்றவரே
ஒன்றுமுறையாதே வுத்தமர்கள்புத்திரரே
என்சேதியொன்றும் எடுத்துரைக்கவேண்டாங்காண்
இங்கேநீவந்ததுவும் இவர்களைக்கண்டதுவும்
திரியனுடனாகச் சபதங்கள்பேசினதுவும்
அத்தனையும்நீரெடுத்து அவற்குறையுமென்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரரும்தான்கேட்டு
அவனாகட்டுமென்றுசொல்லி அப்படிக்கேநல்லதென்று
வந்துமிகப்போதாச்சு எந்தனுடஐயாவே
போகவிடைதாருமென்று பொன்னடிக்குதெண்டனிட்டான்

## புனந்திரன் கர்ணனை விடைகேட்பது.

போய்வாருமிந்திரரே புத்தியுள்ளகண்மணியே
அல்லிதிருமகனே அழகுள்ளகண்மணியே
கட்டியணைத்துகனிவாயை முத்தமிட்டு
போய்வாருமென்று பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தார் வேந்தர்பெருமானும்
காஞ்சிநாடாளுங் கர்ணர்முகம்நோக்கி
அங்கிருக்குமன்னவர்கள் அனைவோருங்கைதொழுதார்
கூடவேவகைதொழுதார் கொற்றம்பூவீரியரும்
பொன்னுமலைநாடாளும் அண்ணாவுங்கைதொழுதார்
போய்வாரோமென்றுசொல்லிப் போர்மன்னர்தான்கேட்க
காஞ்சிநாடாளுங் கருணர்பெருமாளும்
அப்படியேநல்லதென்று அனைவருக்கும்விடைகொடுத்தார்
போய்வாருமென்றுசொல்லிப் பொருந்திவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தார்கள் வேந்தருடசேனையெல்லாம்

## புனந்திரன் சேனையுடன் புறப்பட்டது.

போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
யானையருகில்வந்து ஆனந்தவாழ்மார்பன்
வென்றுகெலித்தோமே வேந்தர்பெருமாளே
பாசுபதம்பேறுபெற்றப் பார்த்தர்பெருமாளே
படுபடுயென்றான் படுத்ததுஅவ்வானை
முக்கம்பந்தட்டி முதுகின்மேல்காலைவைத்து
கைத்தலத்தைத்தட்டிக் கழுத்தானையேறினான்
மத்தகத்தைத்தட்டி மதயானைஏறினான்
அம்மானுடதானும் அழகானையேறினார்
மாமனுந்தானுமாய் மதயானைஏறினார்
வந்தவந்தபேர்களெல்லாம் மதயானைஏறினார்
முன்னானைஏறினார் மூன்றுலட்சம்ராசாக்கள்
சரியானைஏறினார் சரியொத்தராசாக்கள்

பக்கானையேறினார்பத்துலட்சம் ராசாக்கள்
அறுகானையேறினார் அஞ்சுலட்சம் ராசாக்கள்
முன்னைமுரசெடுத்துமுன்னானை மேல்போட்டார்
பின்னைமுரசெடுத்துப்பின்னானை மேற்போட்டார்
சிலமன்னரெல்லாருந் தேரின்மேலேறினார்
குலமன்னரெல்லாருங் குதிரையிலேறினார்
பலமன்னரெல்லாரும் பல்லக்கிலேறினார்
அழகானமல்லரெல்லாம் அழகானையேறினார்
பட்டபுலவர் பதினெட்டுமந்திரியும்
சித்தர்புலவர் சிலராசமந்திரிகள்
சிங்கங்கரடிபுலிச் சேரமுழங்கிவர
யாளிபுலிகரடி பறுகில்முழங்கிவர
தங்கள்தங்கள்வாகனத்தை தார்வேந்தரேறினான்

குடையின் பெருமை.

ஏறினபோதெடுத்தார் நெடுங்குடைகள்
முத்துக்குடையாம்முழுமாணிக்கப் பொற்குடையாம்
தங்கக்குடையாந் தவளநெடுங்குடையாம்
பட்டுக்குடையாம் பவளநெடுங்குடையாம்
இரத்தினக்குடையாம் இராஜாக்கள்நற்குடையாம்
வச்சிரக்குடையாம் வைடூரியம்பொற்குடையாம்
எடுத்துநிறைந்தார்கள் எண்ணாயிரங்குடைகள்
சுத்திநிறைந்தார்கள் சூரியனைக்காணாதே
பக்கம்நிறைந்தார்கள் பகவானைக்கண்மறைக்க
ஒத்தக்குடைகள்இருந்தந்த உத்தமனும்
பூச்சக்கரகுடைநடுவில் புண்ணியனும்வாராரே
முத்துக்குடைபிடிக்க முடிமன்னர்தேர்நடக்க
இரத்தினக்குடைபிடிக்க ராசாக்கள்தேர்நடக்க
பச்சைக்குடைபிடிக்க படைமன்னர்தேர்நடக்க

புனந்திரன் திரியோதிரனை தூதுரைத்து செயித்தேனென்று சின்னமூதுவது.

ஏறினானை எடுத்தார்விறுதோசை
ஊதினார்சின்னம் உலகமேழுலகதிர
ஊதினகாளை வலருதலைதுமுக்க
செம்பொன்னாற்காளை சொருந்துமென்றூதினான்
தங்கத்திருக்காளைத் தானெடுத்தூதினான்
வென்றுவந்தேனென்றுசொல்லி விறுதெடுத்தூதினான்
சாதித்துவந்தேனென்று சங்கெடுத்தூதினான்
செயங்கள்செயங்களென்று ஜெயபேரியடிபடுது
ஜெயித்துவந்தேனென்று அடித்தான்ரணபேரி
அத்திபுரத்து நெடும்வீதிவறுகையிலே

புனந்திரன் அத்திபுரத்துவீதியிலே வருகிறபோது ஜனங்கள் பார்த்து பேசிக்கொள்வது.

அங்கிருக்குமங்கையர்கள் அணியிழைமாரேதுசொல்வார்
கொம்பனைமாரெல்லாருங் கூடியொன்றாய்ப்பேசிக்கொள்வார்
மாயன்மருமகன்காண் மகாதேவன்புத்திரன்காண்
பாண்டியற்குப்பேரனிவன் பஞ்சவற்குபுத்திரன்காண்
ஆயிரம்பாண்டியற்கு அருமையுள்ளபேரனிவன்
ஐவருக்குந்நூற்றுவற்கும் ஆனதொருபுத்திரன்காண்
கருநீலாபூங்குழலாள் கலந்தாரிநாயகண்டி
தோகைமயிலனையாள் துற்சடையாள்மருமகண்டீ
நூலால்கடுந்திரளார் நூற்றொருவர்மன்னவர்க்கும்
பாட்டனார்வீஷ்மருக்கும் பாரறியதுரோணருக்கும்
சிற்றப்பாவிதுரருக்கும் சீருள்ளகாங்கையற்கும்
காஞ்சிநாடாளுங் கருணர்பெருமாளுக்கும்
சாமத்துரோகிசகுனியவன் தோழனுக்கும்
மாமன்சகுனியற்கும் மற்றுமுள்ளமன்னவற்கும்
அம்மான்சகுனியற்கும் யவன்தோஷனனவற்கும்
தங்கைமணவாளன் தறுதலையானவற்கும்
அங்குள்ளசேனையற்கு அதிகமாய்த்தான்பேசி
எதிராயிருந்துமல்லோ எத்திலங்குபூடியான்
சரியாயிருந்துமல்லோ சாதித்தான்மன்னவர்களை
வல்லமையுள்ளப் புருஷனிவன்தாண்டி
இவனழகுஞ்சவுரியமும் ஆண்மைகளுள்ளவண்டி
கலந்தாரிநாயகிக்கு வாய்த்தமணவாளன்
தோகைமயிலனையாள் துற்சடையாள்பெற்றெடுத்த
ஏலங்குழலாளுக்குஏற்றதொரு மணவாளன்
அவரழகுக்கேற்றாப்போல அருச்சுனர்பெற்றெடுத்தார்
இவரழகுக்கொப்பானோர் இந்திரருமீடல்லவே
மன்னர்அழகுக்கு மன்னர்களுமீடல்லவே
மன்னர்அழகுக்கு மன்மதனுமீடல்லவே
இப்படியாகச்சொல்லி யல்லவோயிருந்தார்
கொம்பனைமாரெல்லாருங் கூட்டமாய்ப்பேசினார்கள்
இப்படியாய்ச்சொல்லி யிருக்கின்றவேளையிலே

புனந்திரன் வேறுவீதிவருகிறது.

போரஞ்சாமன்னர் புனந்திராசாவும்
அவ்வீதிவீதி நடந்தார்அழகாக
மற்றுமொருவீதியிலே வாழுகின்றமன்னரெல்லாம்
அந்ததெருவீதியிலேவாழுகிற மன்னரெல்லாம்
இந்திரனார்தன்முகத்தை ஏறெடுத்துபார்த்துமல்லோ

அருச்சுனனார்பெற்றபிள்ளை அழகுடையானென்பார்கள்
வெருடபுத்திரனிவன் ஆண்மையுள்ளானென்பார்கள்
வெருமிங்கே பெற்றுவந்தானென்பார்கள்
தூதுரைத்துமீட்டானே சுந்திரப்பூமுடியான்
ஏதிராசவாதாடி வென்றான்காணென்பார்கள்
இப்படியாகச்சொல்லி யிருக்கின்றவேளையிலே
போரஞ்சாமன்னர் புணந்திரனார்வீரியரும்
அந்தத்தெருதாண்டி வாரானே ஆணழகன்
மற்றுமொருவீதியிலே மன்னன்நடக்கையிலே
அந்தத்தெருவுதனில் வாழ்கின்றமன்னவர்கள்

புணந்திரனைப்பார்த்து சனங்கள் பேசுகிறது.

நாயனாருமருமகனை மதிலேறிபார்ப்பார்கள்
எட்டிநடைநடந்துக் கிட்டவந்துபார்ப்பார்கள்
உயர்ந்தமதிலேறி வுற்றுவுற்றுப்பார்ப்பார்கள்
சன்னல்கதவைத் திறந்துமெள்ளம்பார்ப்பார்கள்
ஆணழகுமன்னன் அர்ச்சுனராசனவன்
அவனழகுக்கேற்றதுபோல் ஆண்பிள்ளைபெற்றார்கள்
போரஞ்சாமன்னர் புணந்திரவீரியரும்
தன்னழகுக்கேற்றதுபோல் தான்பெற்றார்பிள்ளையென்றார்
இப்படியாய்ப்பேசி யிருக்கின்றவேளையிலே
போரஞ்சாமன்னர் புணந்திரராசாவும்
அவ்வீதிவீதி நடந்தார் அழகாக
தெத்துத்தெருதாண்டி தேரோடும்வீதிவிட்டு
சித்திரவீதி தெருவும்பலதாண்டி
அங்காடிவீதிகளும் அரண்மனையுந்தான் தாண்டி
கடையுங்கடைத்தெருவும் கருமாரவீதிவிட்டு
அத்திபுரபட்டணந் தாண்டியந்தவாணழகன்
வனமாய்வனநுழைந்து வாரானேதென்மதுரை

புணந்திரன் மதுரைக்கு வருவது,

ஓங்கிவளர்ந்ததொரு மூங்கில்வனந்தாண்டி
இருண்டவனந்தாண்டி எலுமிச்சந்தோப்புவிட்டு
சிங்கம்உலாகொடுக்கும் சிறுநாய்வனந்தாண்டி
கோங்குபெருத்தவனங் கொன்றைகளாபூத்தவனம்
பாதரிமுல்லைப் பருத்தவனந்தாண்டி
இஞ்சிவனந்தாண்டி எலுமிச்சந்தோப்புவிட்டு
மஞ்சள்வனந்தாண்டி மாதளந்தோப்புவிட்டு
தேசத்தையாளுந் திரியோதிரன்தோப்புவிட்டு
காஞ்சிநாடாளுங் கருணரிடகாவல்விட்டு
ஐவர்பஞ்சபாண்டவர்கள் ஆண்டபெருஞ்சோலைவிட்டு

மாலைமுடியானும் மதுரைதிசைநோக்கி
மதுரைதிசைநோக்கி வாரார்புனந்திரரும்

ஐவரும் மண்டபத்தில் வீற்றிருந்திந்திரனைக் காணுகிறது.

வேந்தர்பெருமான் வெளிமண்டபத்தில் வீற்றிருக்க
ஐவரரையரும் ஆழிவுகந்தாரும்
வேந்தர்பெருமாளும் விலாடபுரம்விட்டல்லவோ
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
மண்டபத்தின்முன்னேவந்து மாலைமுடியானும்
யானைவிட்டுக்கீழிறங்கி யானந்தவாழ்மார்பன்
வாளுருவிக்கைபிடித்து வல்லயத்தைதோளிலிட்டு
ஓடபலர்க்கண்ணனும் உள்ளேநுழைந்தான்காண்
பூவும்புதுமலரும் பொன்னுருகிஅட்சதையும்
அட்சதையும்பூபோட்டு அனைவரும்தெண்டனிட்டார்
ஆறுபேர்பாதம் மடிவணங்கிதெண்டனிட்டான்
வந்துபணிந்தவனைக் கண்டுமனமகிழ்ந்து
வாயாரவாழ்த்தி மனதுபெரிதுவந்த
இருமிருமென்றுசொல்லி யிட்டார்சிம்மாதனங்கள்
இட்டசிம்மாதனத்திலேறியவர்வீற்றிருந்தார்
ஐவரரையரும் ஆழிவுகந்தாரும்
இந்திரனைத்தான்பார்த்து எதுஎடுத்துரைப்பார்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவே
தூதுரைக்கப்போறீரோ சுந்தரப்பூமுடியே
அப்போதுஇந்திரனும் ஆனழகரேதுசொல்வார்
போனதுவும்வந்ததுவும் புதுமைநடந்ததுவும்
அங்கேநடந்த அதிசயமுள்ளதுவும்
கண்ணில்லான்மாளிகைக்கு சடுதிநடந்ததுவும்
கட்டியனைத்தவுடன் கற்றூணுநெரிந்ததுவும்
மண்டபங்கள்தானிடிந்து மண்ணோடேசாய்ந்ததும்
தேசத்தையாளுந் திரியோதிரப்பெருமான்
ஐவருக்குநாடு கொடேனென்றுசொன்னதுவும்
அத்தனையுஞ்சொன்னானே யாணழகனிந்திரனும்
நாலுரெண்டுவார்த்தைகளாய் செப்பினான்ராசாவும்
ஐவரரையரும் ஆழிவுகந்தாரும்
எல்லாருங்கேட்டு வெகுவாய்மனங்குளிர்ந்து
போரஞ்சாமன்னர் புனந்திரவீரியரும்
போகவிடைதாருமென்று பொன்னடிக்குத்தெண்டனிட்டான்
ஐவரரையரும் ஆழிவுகந்தாரும்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவை

கட்டியணைத்துக் கனிவாயைமுத்தமிட்டு
திருஷ்டி கழித்துமல்லோ சீராணபுனந்திரற்கு
போய்வாருமென்று பொருந்தவிடைகொடுத்தார்
விடைபெற்றெழுந்தார் வேந்தர்பெருமாளும்

### புனந்திரன் மதுரையில் சின்னமூதுவது.

படிபடியென்றான் படிந்ததுஅவ்வானை
முகக்கம்பந்தட்டி மதயானையேறினான்
கைதலத்தைத்தட்டி கறுத்தானையேறினான்
அம்மானும்அத்தானும் அழகானையேறினான்
மாமனும்தானும் மதவானையேறினார்
வந்தவந்தபேர்களெல்லாம் வாகனஞ்சென்றேறினார்
அவ்வீதிவீதி நடந்தார்அழகாக
மாறுமுடியனும் மதுரைக்குவந்தானே
ஊதினான்சின்னம் உலகேழுலகதிர
ஊதினான்காளை வுலகுதலைதுமுக்க
வென்றுவந்தேனென்றுசொல்லி விருதெடுத்துவூதினான்
செயப்பெற்றுவந்தேனென்று சின்னமெடுத்தூதினார்
ஊதினசின்னத் தொனிகேட்டாளுத்தமியும்
பிறவாமுடிதரித்தப் பெண்பெருமாள்தான்பார்த்து

### அல்லி தாதிகளைவிட்டு புனந்திரற்கு திருஷ்டி கழிக்கிறது

தாமக்குழலாளை தாதியரைத்தான்பார்த்து
ஆதுரைக்குமீண்டானே சுந்திரப்பூமுடியான்
அருச்சுனனார்புத்திரற்கு ஆலாத்திகாட்டுமென்றாள்
தாதியெழுந்திருந்து தானுமங்கேகேஓடிவந்து
முத்தினாலாலாத்தி முப்பதுநூறாயிரமாம்
பவளத்தாலாலாத்தி பத்துநூறாயிரமாம்
திருஷ்டிசுழட்டித் தெருவெங்கும்விட்டெறிந்து
கற்பூரவாலாத்திக் காட்டியந்தகாரிழையார்
ஆலாத்திகாட்டி யணியிழைமார் நீங்கிநின்றார்
போரஞ்சாமன்னர் புனந்திரராசாவும்
ஆனைவிட்டுக்கீழிறங்க ஆனந்தவாழ்மார்பன்
ஓடமலர்க்கண்ணனும் உட்கட்டில் போய்புகுந்து
கோசவனாட்டன் கொலுவந்து வீற்றிருந்தான்

பாட்டன்மார் தாயார் அல்லி இவர்கள் முதலானவர் வந்து புனந்திரனைக் கண்டதற்கு புனந்திரன்போய்வந்த சங்கதிகளை யுரைத்து சுகமாக மதுரையை அரசாண்டிருந்தது.

ஆறுயிரம்பாண்டியர்கள் அய்யன்மார் வந்துகண்டார்
பெண்பெருமாளல்லியரும் புத்திரரை வந்துகண்டாள்
போனதுவும்வந்ததுவும் புதுமைகளுள்ளதுவும்

நாலுரெண்டுவார்த்தைகளால் நடப்பித்தாரிந்திரனும்
அனைவற்குந்தானுரைத்து அரசாண்டு வாழ்ந்திருந்தார்
புனந்திரனார் தன்கதையைப் பத்தியுடம் படித்தவர்கள்
இந்திரனார்தன்தூதை யின்பமுடனசொன்னவர்கள்
பப்பிரவாகன்தூதைப் பட்சமுடன்வாசித்தவர்
மண்டலத்தில்கீர்த்தி மாறாமல்வாழ்ந்திடுவார்
தேசத்தில்கீர்த்திபெற்று சிறப்புடனேவாழ்ந்திடுவார்
சுந்திரனார்தூதுரைத்தோர் சொர்க்கபதம்பெறுவார்
மன்னவனார்தூதுரைத்தோர் மாயர்பதம்பெறுவார்
மாயர்பதம்பெறுவார் மாறாமல்வாழ்ந்திருப்பார்
புனந்திராசனைப்போல் பூரித்துவாழ்ந்திடுவார்
இந்திராசனைப்போல் இருந்தரசையாண்டிடுவார்
வெங்கட்டராமபூபன் விருப்பமுடனீன்றெடுத்த
நாராயணசாமி நல்லோனுரைப்படிக்கு
தாரணியிற்கீர்த்திபெற்ற தமிழ்வல்லோன் இராஜு
மைந்தன் அப்பாதுரையென்பவ னிக்கதையைப்பாடினர்
குற்றங்கள்நேராமல் குறைகளொன்றும்வாராமல்
தப்பிதங்களில்லாமல் தாழ்வொன்றுஞ்சேராமல்
இந்தக்கதைதன்னை இன்பமாய்க்கேட்டவர்கள்
ஆலைபோலதழைத்து அருகுபோல்வேரோடி
மூங்கில்போல்சுற்றம் முசியாமல்வாழ்ந்திடுவார்
வாழிவாழியென்றுசொல்லி வரமளித்தாரீஸ்வரனார்.

வித்வ சிரோன்மணியாகிய புகழேந்திப்புலவர் அருளிச்செய்த

புனந்திரன் தூது முற்றிற்று,

---

